குலபாயெ ராஷிதீன்—1.

# அபூபக்ர் சித்தீக் - ரலி

“ தாருல் இஸ்லாம் ” ஆசிரியரும்
குர்ஆன் மொழிபெயர்ப்பாசிரியருமாகிய

அல்ஹாஜ் பா. தாவூத்ஷா, பி. ஏ.,
(கார்ப்பொரேஷன் ஆல்டர்மேன்)

அவர்களால் தையாரிக்கப்பட்டது.




ஷாஜஹான் புக் டெப்போ
30, சாந்தோம் :: சென்னை - 4

இதன் விலை] 1946 [ரூ. 2—0—0

# முன்னுரை

சென்ற 1933-ஆம் ஆண்டு டிஸம்பர் மாதம் 22-ஆந் தேதியோடு ஒருவாறு "நபிகள்நாயக மான்மியம்" எழுதி முடிவடைந்து விட்டதென்று யாம் கூறியுள்ளோம். இப் பூவுலகின் கண் இதுகாறும் அவதாரம் புரிந்திருக்கும் மஹான்களுள் ளெல்லாம் நம் நபிகள்நாயகம் முஹம்மத் முஸ்தபா ரஸூல் சல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறித்தேதான் இப்பாருலகானது மகாமோச மாக, இல்லை, தவறாகவே அறிந்துகொண் டிருக்கின்றது; ஆதலின், அப் பெருமானாரின் உண்மையான பெருமை எப்படிப்பட்ட தென்பதையும், அந்த மஹானுபாவரால் இத்தரணியின் மக்கள் எத்துணைமட்டும் பேருபகாரம் பெற்றிருக்கிறார்க ளென்பதையும் அந்தக் கிரந்தத்தின் மூலம் ஒருவாறு நீங்கள் உணர்ந்துகொண் டிருக்கின்றீர் கள். ஆகவே, அதற் கடுத்தபடியாக, 'குலபாயெ ராஷி தீன்களின் (நேரான மார்க்கத்திலே நடந்து சென்ற சிரான கலீபாக்களின்) மெய்யான சரித்திரத்தை உள்ளது உள்ளவாறு உணர்ந்து கொள்ளுதல் அத்தியாவசியமா யிருக்கிறதென்றே யாம் எண்ணத் துணிகின்றேம். இவ் வாறு இந்தச் சரித்திரத்தை எழுதப்புகுந்ததற்கு மூன்று விதமான காரணங்க ளுள: இவ்வுலக சரித்திரத்தில் காணக் கிடைக்கமாட்டாத அத்துணைப்பெரிய மாறுதலை யெல்லாம் நம் நபிபெருமான் ஸல் உண்டுபண்ணிவிட்டுச் சென்றதேபோல, அவர்களுடைய முதல்நான்கு கலீபாக் களான சிஷ்யர்களாலேயே மனிதவர்க்கத்தின் சரித்திர முழுதிலும் கண்டுகொள்ள முடியாத அத்துணைப்பெரிய ஆச்சரியகரமான வெற்றிக்கொடியின் சரிதையானது நிகழ்ந்திருக்கின்ற தென்பதே முதற்காரண மாகும். நிச்

சயமாகவே மானிடவர்க்கம் அத்துணை ஆச்சரியம் மிக்க சம்பவங்களை ஒருசிறிதும் மறந்துவிடுதல் முடியாது. மற்ெருரு காரணம் யாதெனின், குலபாயெ ராஷிதீன்களது காலத்தைக் குறித்து முஸ்லிம்களும் முஸ்லிம்க ளல்லாதாரும் எழுதிவைத்திருக்கும் சரித்திரங்களையெல்லாம் படித்துப்பார்க்குங்கால், இவ்வுலகில் ஜனித்திருக்கும் மகாமேலான சன்மார்க்க சக்கரவர்த்திகளுள் ளெல்லாம் தலைசிறந்துவிளங்கும் இந் நால்வரின் உயரிய பெரிய செய்கைகளைக் குறித்து அநேகவிதமான தப் பபிப்பிராயங்கள் மலிந்து காணப்படுகின்றன வென்பதே யாகும். மூன்ருவதாக, எம்பிரான்ஸல் அவர்கள் காட்டிச் சென்ற வழியில் முற்றமுற்ற எங்ஙனம் அந் நால்வரும் பின் பற்றி அரசாங்க, ஒழுக்க, நீதிமுறையை நடாத்திக் காட்டிச் சென்றிருக்கின்ருர்கள் ? இன்னம், இவ் வகிலத்தின்கண்ணுள்ள ஏனைமக்களும் எப்படி எளிய முறையில் அம் மகாநபியைப் பின்பற்றி யொழுகல் சாலுமென்பதையும் உற்றுணர வேண்டியதே யாகும்.

இந்த "குலபாயெ ராஷிதீன்" சரித்திரத்தில், நபிகள் நாயகம்ஸல் அவர்களது நிர்யாணத்திற்குப் பிறகுள்ள முப்பது வருட கால சரிதையேதான் வரையப்பட்டுவரும். இஸ்லாமிய சரித்திரத்தில் இந்தக் காலமேதான் "கிலாபத்தெ ராஷிதா" என்று அழைக்கப்பட்டு வருகின்றது; இதன் தாத்பரியம், இந்தக் காலத்தில் இஸ்லாத்தின் இலௌகிகக் கலத்தை நடாத்திச் செல்லப் பொறுக்கியெடுக்கப்பட்ட நால்வரும் சன்மார்க்கத்தின் முன்மாதிரியாகவே இருந்துகொண்டு, முஸ்லிம் ஜாதியாரை இலௌகிகத்திலும் பாரமார்த்திக வைதிகத்திலும் மேல்நோக்கியே நடாத்திச் சென்ருர்கள் என்பதுதா ணுகும். நபிகள் திலகத்தின் திருவாக்கிய மொன்றில், இந்த முப்பதுவருட காலமும், குறிப்பாக, கிலாபத், அஃதாவது, நபிகள்நாயகத்தின் பிரதிநிதியாட்சி என்று நாமமிடப்பட் டிருக்கின்

றது ; அந்த கிலாபத்தானது மேலேகண்ட முப்பதுவருடங் களுக்குப் பின்னே, 'கிலாபத்' என்னும் வார்த்தையைக் கொண் டழைக்கப்படாமல், 'முல்க்', அஃதாவது, அர சாங்கம் என்பதாக மாறுபட்டு நிற்கின்றது. நபிகள் பெருமானது இறுதிவாழ்க்கையானது, அம் மஹானுபாவர் ஒரு தீர்க்கதரிசியாகவும் ஓரரசராகவும் ஒரே காலத்திலே மிளிர்ந்துவந்தார்களென்பதையே சூசிப்பித்துக் காண்பிக் கின்றது; அஃதாவது, அக்கால முஸ்லிம்களுக்கெல்லாம் ஒரு பாரமார்த்திக குருவாகவும் இலௌகிக வாழ்க்கையின் தலைவராகவும் இருந்துவந்தார்களென்பதேயாகும். எனவே, அரசர்கள் மனிதர்களின் இலௌகிகத் தலைவர்களாகவே இருந்துவந்த இஸ்லாமிய ராஜ்ஜியத்தின் தன்மையானது கிலாபத் ராஜ்ஜியத்தின் தன்மை முழுவதையும் பூர்த்தி யாக்கி வைக்கவில்லை யென்பது கண்கூடு. ஆனால், கிலா பத்தெ ராஷிதா என்னப்படும் முதல்நான்கு கலீபாக் களின் அரசாங்கமானது நபிகள்நாயகத்தின் பிரதிநிதித் துவத்தைப் பரிபூரணமாகப் பிரதிபலித்துக் காண்பிக் கின்ற தென்பதும் கண்கூடே ; இக் காரணத்தினலே தான் குலபாயெ ராஷிதீன்களின் கிலாபத்ராஜ்ஜிய சம்பந் தமான சரித்திரத்தோடு, அபூபக்ர்ரலி உமர்ரலி உதுமான்ரலி அலீரலி ஆகிய அந்நான்கு கலீபாக்களின் ஜீவிய வாழ்க்கை களும் இணைக்கப் பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள்.

பின்வரும் சரித்திரத்தில் வாசகர்களின் கவனம், மிகக் கொடிய தப்பபிப்பிராயங்கள் மண்டிக்கிடக்கும் இரண்டு முக்கியமான விஷயங்களின்பக்கம் ஈர்க்கப்படும் ; அவற் றுள் முதல்விஷயம், முஸ்லிம்களுக் குள்ளும் முஸ்லிம்க ளல்லாதார்களுக் குள்ளும் ஒருவிதமான தப் பபிப்பிரா யம் இருந்துவருகிறதே யாகும் ; அஃதாவது, நபிகள்நாய கம்சல் நடாத்திய யுத்தங்களெல்லாம் ஒன்றுகூட வலி யத் தொடரப்படாமல் தற்காப்பு யுத்தங்களாகவே இருந்துவந்த போதினும், கிலாபத்தெ ராஷிதாவின் காலத்

தில் நிகழ்த்தப்பட்ட யுத்தங்களனைத்தும் இஸ்லாத்தின் அபிவிருத்திக்காகவும், அதன் ராஜ்ஜியத்தின் எல்லையை விஸ்தீரணப்படுத்துவதற்காகவு மட்டுமேயல்லது, வேறு காரணத்திற்காகத் தொடுக்கப்படவில்லையென்றே எல்லாரும் சர்வ சாதாரணமாக எண்ணிவருகின்றார்கள். இஃதொரு முற்றுந் தவறான அபிப்பிராய மென்றே இந்தச் சரித்திரத்தில் எண்பிக்கப்பட்டுவிடும்; முஸ்லிம்கள் தங்கள் மதத்தை வற்புறுத்திச் சுமத்துவதற்காக வேனும், அல்லது அக்கம் பக்கத்திலுள்ள ராஜ்ஜியங்களின்மீது தங்கள் ஆட்சியைச் செலுத்துவதற்காக வேனும், அல்லது இஸ்லாம் அல்லது ஜிஸ்யா அல்லது வாளாயுதம் என்று பொதுவாகச் சுருக்கிக் கூறப்படும் ஒரு காரியத்தைச் செய்வதற்காக வேனும், ஒருபோதும் படையெடுத்துச் செல்லவில்லை யென்பதும் பிரத்தியக்ஷமாக ருஜூப்பித்துக் காண்பிக்கப்படும். இவ்விஷயம் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] ஹஜ்ரத் உமர்[ரலி] ஆகிய இருவரின் வாழ்க்கைச் சரிதையில் விசாலமாக விவரித்துக் காண்பிக்கப்படும். மற்றொரு விஷயம்—இதன்மாட்டும் வாசகர்களின் முக்கியகவனம் ஈர்க்கப்படுதல் வேண்டும்—ஹஜ்ரத் உதுமான்[ரலி] ஹஜ்ரத் அலீ[ரலி] ஆகிய இருவரின் காலத்திலும் நிகழ்ந்துவந்த உள்நாட்டுக் கலகங்களைக் குறித்தும் முன்னதே போன்ற ஒரு பெரிய தப்பபிப்பிராயந்தான் உலாவித் திரிந்துகொண்டிருக்கின்றதென்பதாகும். ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] உமர்[ரலி] ஆகிய இருவர்பாலும் காணப்பட்டுவரும் பெருந்தன்மையான முன்மாதிரியே ஹஜ்ரத் உதுமான்[ரலி] அலீ[ரலி] ஆகியவர்களின் சரிதையிலும் காணப்படாநின்றது; ஆனால், பின்னிருவர்களின் பெருந்தன்மை முன்னிருவர்களின் பெருந்தன்மையினின்று மாறுபட்டிருந்த போதினும், இரண்டும் இரண்டுவித நிலைமைகளில் பெரியனவாகவே காணப்பட்டு வருகின்றன.

"குலபாயெ ராஷிதீன்" வரிசையில் இந்த முதற் புத்தகமாகிய "அபூபக்ர் சித்தீக்" என்பது, "குல பாயெ ராஷிதீன்", "துரூஸுத் தாரீக்", "ஷம்ஸுத் தவாரீக்", "ஸீரத்துஸ் ஸித்தீக்", "அஸ் ஸித்தீக்", "ஹஜ்ரத் அபூபக்ர்", "அபூபக்ர்", "Early Caliphate", "A Short History of the Saracens", "நபிகள் நாயகமும் நான்கு தோழர்களும்" ஆகிய பல அரபீ, உர்தூ, ஆங்கிலம், தமிழ் நூல்களிலிருந்து கோவை செய்யப்பட்டிருக்கிறது.......... இம் மாதிரியாகவே ஏனை மூன்று கலீபாக்களின் சரித்திரங்களும் காலக்கிரமத்தில் எம்மால் வெளியிடப்படும்; இன்ஷா அல்லாஹ்!

சென்னை,
1—11—'34,

பா. தாவூத்ஷா,
இஸ்லாத்தின் ஊழியன்.

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

சென்ற 1-4-1946-ஆம் தேதியோடு "குலபாயெ ராஷிதீன் வரிசை" யென்பது ஆண்டவனருளால் நிறைவேறி அச்சாயிற்று. எனவே, இதுபொழுது மஹான் முஹம்மத் நபி (சல்அம்) அவர்களுக்கு முற்பட்ட அஞ்ஞான காலத்திலிருந்து இஸ்லாமிய சரிதை ஆரம்பமாகி, இஸ்லாத்தின் ஆதிக் குடியரசுக்குரிய 54 ஆண்டுகளின் மெய்யான சரித்திரம் முடிய நுங்கள் கரத்திலே வைக்கப்பட் டிருக்கிறதென்னலாம்; இந்த வரிசைக்குரிய நபிகள் நாயகத்தின் சரித்திரச் சுருக்கத்தையும், முதல் நான்கு கலீபாக்களின் சரித்திரத்தையும் அவரவரும் நேரே படித்துப் பார்த்து இஸ்லாத்தின் ஆதிகாலச் சரித்திர உண்மைகளை உள்ளவாறு உணர்ந்துகொள்வார்களென்றே யான் திண்ணிதாயெண்ணுகின்றேன். இவ்வரிசையை அடுத்துள்ள இமாம் ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி) அவர்களுடைய சரியான சரித்திரமும் கர்பலாவின் சம்பவம்முடிய இறைவனருளால் இன்னம் சில மாதங்களில் வெளி வந்துவிடலாம். எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே!

இங்ஙனம்:

சென்னை,
16—11—'46.

பா. தாவூத்ஷா

குலபாயெ ராஷிதீன் வரிசை:

| | | ரூ. அ. |
|---|---|---|
| 1. **மஹான் முஹம்மத் நபி (சல்)** | | |
| நபிகள் நாயகத்தின் மிக விளக்க மான சரித்திரச் சுருக்கம் | ... | 0 12 |
| 2. **அபூபக்ர் சித்தீக் (ரலி)** | | |
| முதல் கலீபாவின் அழகிய உண் மைச் சரித்திரம் | ... | 2 0 |
| 3. **உமரெ பாரூக் (ரலி)** | | |
| இரண்டாவது கலீபாவின் வீரம் மிக்க நேரிய சரித்திரம் | ... | 2 4 |
| 4. **உதுமான் (ரலி) அலீ (ரலி)** | | |
| மூன்ருவது, நான்காவது கலீபாக் களின் சோகம் மிக்க சரித்திரம் | ... | 2 0 |

இந்நான்கு நூலையும் வாசிப்பவர் இஸ்லாத்தின் பண்டை உண்மைச் சரித்திர விருத்தாந்தத்தை நன்குணர்வர்.

---

ஷாஜஹான் புக் டெப்போ,

30, சாந்தோம் : : சென்னை - 4

بسم الله الرحمن الرحيم

نحمده ونصلي ونسلم على رسوله محمد خاتم النبيين

# அபூபக்ர் சித்தீக்[ரலி]

---

அப்துல்லாஹ் என்பதுதான் ஹஜ்ரத் அபூபக்ருக்கு[ரலி] அவருடைய தாய் தந்தையர்களால் ஆதியிலே இடப்பட்ட நாமமாகும். இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் அபூபக்ரென்பது, அப்துல்லாஹ்வுக் கிடப்பட்ட புனைபெயராகும் (குன்யத்).*

**ஆரம்பகால வாழ்க்கை**

---

* அரபிகளுக்குள்ளே "குன்யத்" தென்பது பெரும்பாலும் ஆண் வாரிஸின் சார்பான உறவின் முறையைக் குறித்துக் காட்டக் கூடிய ஒருவிதக் கௌரவப் பட்டமாகவே கருதப்பட்டுவந்தது. 'குன்யத்' தென்பது குறிப்பாக முதல் ஆண்குமாரனது நாமத்தினின்றே எடுத்தாளப்பட்டு வந்திருக்கிறது; அவ்வாண்மகவின் நாமத்துடனே 'அபூ' (தந்தையார்) என்னும் பதத்தைச் சேர்த்து, 'இன்னாரது தந்தை' என்றே புனைபெயர் சிருஷ்டிக்கப்பட்டு வந்தது. ஆயினும், எப்பொழுதுமே குன்யத்தானது தந்தை மகன் என்னும் உறவின் முறையைக் குறிப்பது வழக்கமில்லை; சிற்சில வேளைகளில் ஒரு மனிதனுடைய சொந்தக் குணாதிசயத்தைக் கொண்டும் இத்தகைய குன்யத் வழங்கப்படுவதுண்டு; இதற்குக் காரணம் 'அபூ' என்னும் பதம் மிக்க விசாலமான பொருளில் வழங்கப்பட்டு வருவதேயாகும். எனவேதான் பூனைகளிடத்துப் பக்ஷம் பாராட்டிவந்த காரணத்தால், ஹதீதுகளை அதிகம் எடுத்துக் கூறியுள்ள

"சித்தீக்" (மகாசத்திய சந்தர்) "அதீக்" (தாரா ளச்சித்தம், அல்லது சிலாக்கியம், அல்லது எதேச்சை யுடையவர்) என்னும் பட்டப்பெயர்கள் இவர் தீனுல் இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் வழங்கப்படலாயின. இவரது தந்தையார் பேர் உதுமான் என்பதாகும்; ஆனல், அத்தந்தையார் பொதுவாகச் சரித்திரத்தில் அவருக்குரிய புனைபெயராகிய அபூகுஹாபா என்னும் நாமங்கொண்டே வழங்கப்பட்டு வந்தார். ஸல்மா என்பதுதான் அபூபக்ரின்ரலி மாதாவினது உண்மைப் பெயரா யிருந்துவந்தது; உம்முல்கைர் என்பது அவ ரது புனைபெயராக வழங்கிவந்தது. ஹஜ்ரத் அபூபக் ரின் தாய்தந்தைய ரிருவரும் குறைஷி வம்சத்தைச் சார்ந்த பனூ தைம் வர்க்கத்தி லுதித்திருந்தார்கள். அரப்நாடு முழுமையுமே அவ்வர்க்கம் அதிக செல்வாக் குப் பெற்றிருந்தது; கொலை வழக்குக்களின் சார்பான உதிரக்கிரயம் என்னும் பிணைப்பண விஷயம் அவ்வர்க் கத்தாரிடமே மத்தியஸ்தத்திற்கு விடப்பட்டு வந்தது. இத்தகைய வியவகாரத்தின் பைஸல் சம்பந்தமான முக்கிய காரிய முழுவதும் ஹஜ்ரத் அபூபக்ரின் வயமே தான் ஒப்படைக்கப்பட் டிருந்தது. அன்றியும்,

---

அந்தப் பெயர்போன தோழரும் 'அபூ ஹுரைரா'—(பூனைக்குட்டியின் தந்தை) என்று அழைக்கப்பட்டுவந்தார். அபூபக்ரென்னும் பெயர் சொல் லளவிலே "இள மொட்டகத்தின் தந்தை" என்றே பொருள் கொள்ளும். ஆனல், ஏன் இந்தக் குறிப்புள்ள குன்யத்தை இந்த அப்துல்லாஹ் வைத் துக்கொண்டார், அல்லது இவருக்கு வைக்கப்பட்டதென்பதை விளக்கிக் காட்ட யாதொருவிதமான சரித்திரத்திலும் எந்தவிதமான குறிப்பும் காணப்படவில்லை. ஒருகால் இவருக்கு ஒட்டகங்களின் மாட்டிருந்த பிரியத்தினல், அல்லது பக்ஷத்தினல் இந்தப் புனைபெயர் சாதாரணமாக வழங்கப்பட்டிருக்கலாம்.

மௌலானா முஹம்மதலீ.

கொலைக் குற்றத்துக்காகப் பெற்றுக் கொள்ளப்படும் உதிரக்கிரயமான தொகை முழுவதும் இவர்களிடமே சேமித்து வைக்கப்பட வேண்டுமென ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இவர்களிடமல்லாமல் வேறு யாரிடமேனும் இந்தப் பணம் செலுத்தப்பட்டிருக்குமாயின், அதனைக் குறைஷிகள் அங்கீகரிப்பது வழக்கமில்லை.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி யானையாண்டின் இரண்டாவது அல்லது மூன்ருவது வருடத்திலே ஜனனமாயினூர்கள்.* ஆகவே, ஹஜ்ரத் அபூபக்ர் நம் நபிகள் நாயகத்தைப் பார்க்கினும் இரண்டரை ஆண்டுகள் இளையவர்களா யிருந்துவந்தார்க ளென்று செவ்வனே நாம் தெரிந்துகொள்கிறோம். இயற்கையாகவே அபூபக்ர்ரலி அதிகமான நல்லொழுக்கம் வாய்ந்தவரா யிருந்துவந்தார்கள். இதனுல் இவர்களுக்கு எங்குப் பார்த்தாலும் நல்ல மேதை மரியாதையே கொடுக்கப்பட்டுவந்தன. ஏழை எளியாருக் கெல்லாம் நல்லுதவி புரிதல், உற்ருர் உறவினருக் கெல்லாம் உயரிய நன்மை

---

* முஸ்லிம்களின் ஹிஜ்ரீக் கணக்கு ஏற்படுத்தப்படு முன்னே அரபிகள் "யானை யாண்டின்" காலமுதற் கொண்டே தங்கள் தேதிகளைக் கணக்கிட்டு வந்தார்கள். எமன் தேயத்தில் மாகாணாதிபதியா யிருந்துவந்த அப்ரஹத்துல்அஷ்ரம் என்னும் கிறிஸ்தவன் கஃபத்துல்லாவைத் தகர்த்துவிடுவ தென்னும் கொடிய எண்ணத்துடனே மக்காவின் மீது படையெடுத்துச் சென்ற ஆண்டே யானை யாண்டென்று கூறப்பட்டு வருகின்றது. அந்த அப்ராஹாவின் சேனையில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட யானைகள் காணப்பட்டமையின், அது யானையாண்டென்று வழங்கலாயிற்று. அந்த யானை யாண்டேதான் நபிகள் திலகத்தின் ஜனன ஆண்டுமாகும். அதன் பிறகு 53 சாந்திரமான ஆண்டுகள் கழிந்த பின்னரே ஹிஜ்ரீயாண்டின் கணக்கு ஏற்படுத்தப்பட்டது.

புரிதல், துன்பத்துள் சிக்கியவருக் கெல்லாம் துயர் கெடச் செய்தல், தாராளச்சித்தம், சத்தியம் பேசுதல் ஆதியவெல்லாம் இன்னூர்மாட்டு அதிகமதிகம் மலிந்து ததும்பிக் கிடந்தன. இப்பெரியார் தமது குழந்தைப் பருவ முதற்கொண்டே மதுசார மென்பதை ஒரு திவஸேயேனும் ஸ்பரிசித்ததே கிடையாது. இத்தகைய குணாதிசயங்க ளெல்லாம், சரித்திரச் சான்று கூறிவருவதே போன்று, நபிகள் நாயகத்திடம் அவர்கட்கு நபிப்பட்டம் அருளப் பெறுதற்கு முன்னமே காணப்பட்டுவந்த குணாதிசயங்க ளாகவே யிருந்துவந்திருக்கின்றன. இக் காரணத்தினுல் ஹஜ்ரத் அபூபக்ருக்கும் நபிகள் திலகத்திற்கும் இயற்கையாகவே ஒருவித ஒற்றுமை அமைந்திருந்ததென்று ஒருவாறு நாம் தெரிந்து கொள்கிறோம். அபூபக்ர்ரலி அவர்களுக்கு ஒரு சிறிது கல்விப் பயிற்சி யுண்டென்னும் விஷயமும் அறியக் கிடக்கின்றது; இவருக்கு எழுதவும் படிக்கவும் தெரியும்; குறைஷிக் குலத்தின் வர்க்கங்களி னுடைய வம்சாவளியின் நாமத்தை யெல்லாம் மனப்பாடம் செய்துவைத்திருப்பதில் இவர்கள் அதிக ஞாபகசக்தி வாய்ந்தவர்களா யிருந்துவந்தார்கள். விஷயாதிகளிலுள்ள அனுபவ முதிர்ச்சிக்காகவும், அபார ஞானத்திற்காகவும், இப்பெரியாரை மக்கள்க ளெல்லாரும் மிக்க மேதை மரியாதையுடனே நன்கு மதித்துவந்தார்கள். இவர்களது ஜீவனோபாயத்தொழில் ஜவளி வர்த்தகமா யிருந்துவந்தது; இதனுல் இவர்களுக்கு அதிகமான வருவாயும் வந்துகொண்டிருந்தமையால், பெரிய சீமானகவும் மிளிர்ந்து வந்தார்கள். இவர்கள் தீனுல் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட காலத்தில் ரொக்க

மாக நாற்பதினுயிரம் *திர்ஹமுடையவரா யிருந்து வந்தார்கள். இவர்களது சொந்த வாக்குமூலத்தைக் கொண்டே, இன்னூர்தாம் குறைஷி வர்க்க வர்த்தகர் களுள் ளெல்லாம் மிகப்பெரிய செல்வராக மிளிர்ந்து காணப்பட்டார்கள் என்பதை நாம் செவ்வனே தெரிந்து கொள்ளலாம்.

**இஸ்லாத்தைத் தழுவலும் முஸ்லிம் சேவையும்**

நபிகள் நாயகம்ஸல் அவர்களுக்கு ஆண்டவ னருளால் நுபுவ்வத் (நபிப்பட்டம்) அருளப்பட்டதன் பின்னர் அப் பெருமானூர் பொதுமக்களை இஸ்லாத் தின்பக்கல் அழைக்கத் தொடங்கினூர் கள். அதுசமயம் ஆண்மக்க ளுள்ளி ருந்து முதன் முதலாக இஸ்லாம் மார்க் கத்தை ஏற்றுக் கொள்ள முன்வந்த வர்கள் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களே யாவார்கள். இப்பெரியாருக்கு முன்னே தீனுலிஸ்லாத்தில் சேர்ந் திருந்தவர்கள் நபிகள்திலகத்தின் முதற் பிராட்டியா ராய் விளங்கிவந்த ஹஜ்ரத் கதீஜாரலி நாயகியாரே யாவார்கள். அபூபக்ர்ரலி அவர்களுக்கு இஸ்லாத்தின் மீது இருந்துவந்த அத்தியந்த அபிமானத்தின் கார ணத்தால் இவர்கள் இச் சன்மார்க்கத்தில் சேர்ந்து கொண்டவுடனே இதன் அபிவிருத்திக்காகவும் முன் னேற்றத்திற்காகவும் தங்கள்பா லிருந்துவந்த முழுச் செல்வாக்கையும் செல்வத்தையும் அதிக தாராள மாகச் செலவழித்து வந்தார்கள். எனவே, இப் பெரியார் வாயிலாக இஸ்லாத்தின் ஜோதியைப் பெற்றுக்கொண்டவர்கள் பலராகக் காணப்படுகிறூர்

---

* ஒரு திர்ஹம் என்பது உத்தேசம் கால் ரூபாய் மதிப்புள்ள நாணயமாம்.

கள். உதுமான்[ரலி] பின் அப்பான், ஜுபைர்[ரலி] பின் அவ்வாம், அப்துர்ரஹ்மான்[ரலி] பின் அவ்பு, ஸஅத்[ரலி] பின் அபீவக்காஸ், தல்ஹா[ரலி] பின் அப்துல்லாஹ் ஆகிய பெரும்பெரும் மனிதர்களெல்லாரும் ஹஜ்ரத் அபூபக்ரின் உபதேசத்தைக் கேட்டே இம்மார்க்கத்திலே சேர்ந்துகொண்டு வந்தார்கள். இஃதுடன் நில்லாது, ஹஜ்ரத் உதுமான் பின் மஸ்ஊன், அபூ உபைதா பின் ஜர்ராஹ், அபூஸல்மா, காலித் பின் ஸயீத் பின் ஆஸ் போன்றவர்கள் இஸ்லாத்தின் சரித்திரத்தில் அழியாப் பெரு நக்ஷத்திரங்களாய் மிளிரா நிற்கின்றனர். இப்படிப்பட்டவர்களும் ஹஜ்ரத் அபூபக்ரின் சூரிய ஆகர்ஷண சக்தியினாலேயே இஸ்லாமெனும் வட்டத்துக்குள் கொண்டுவந்து சேர்க்கப்பட்டவர்களா யிருக்கின்றார்கள்.

இப்பெரியாரின் சொந்த மாதாவாகிய உம்முல் கைர்—ஸல்மா அவர்களும்—இம்மாதரார் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலேயே இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டுவிட்டார்கள்—தம்முடைய புத்திர சிகாமணியின் நல்லுபதேசத்தைச் செவிமடுத்தே இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள். அபூபக்ரின்[ரலி] தந்தையாராகிய அபூகுஹாபா அவர்களுங்கூட—இவ் வயோதிகர் ஹிஜ்ரீ 8-ஆவது ஆண்டில் மக்கமா நகர் பிடிபட்டதன் பின்னரே இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டார்—தங்கள் மைந்தராலேயே நபிகள் நாயகத்தின் திருச்சன்னிதானத்திற்குக் கொண்டுவரப்பட்டு, தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொள்ளுமாறும் செய்விக்கப்பட்டார்கள். ஹஜ்ரத் அபூபக்ரின்[ரலி] அருமைப் பிதாவான ஹஜ்ரத் அபூகுஹாபா[ரலி] அவர்கள் அதிக வயது சென்றவரா யிருந்தார்கள். அன்னார் நபிகள் நாய

கம்ஸல் அவர்களுக்குப் பின்னேயும், தம்முடைய குமார ரான ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக்ரலி அவர்கள் கலீபாவா யிருந்து தேகவியோகமானதன் பின்னரும் ஜீவித்திருந் திருக்கிறார். இவர்கள் இறுதியில் அதிக இளைப்புள்ள வர்களாயினார்கள்; நேத்திரங்களின் பார்வையும் மழுங் கிப் போயிற்று. எனவே, இவர்கள் ஹிஜ்ரீ 14-ஆம் ஆண்டில், தம்முடைய 97-ஆம் பிராயத்திலே இவ்வுல கினின்று உயிர்நீத்து நீங்கினார்கள்.

ஆண்களும் பெண்களுமாய அநேக அடிமைகள், அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதற்காக அன்னவர்களுடைய எஜமானர்களால் அதிகந் துன் புறுத்தப்பட்ட போதெல்லாம் ஹஜ்ரத் அபூபக்ர் அவர்களால் கிரயம்கொடுத்து வாங்கப்பட்டு, விடுதலை யும் கொடுக்கப்பட்டு வந்தார்கள். அப்படிப்பட்டவர் களுள் அறுவரின் நாமங்களைக் குறித்துச் சரித்திரம் புகழ்ந்துகொண் டிருக்கின்றது; அவ் வறுவருள் கீர்த்திவாய்ந்த ஹஜ்ரத் பிலால்ரலி அவர்களும் ஒருவ ராகவே விளங்கிவந்தார்கள். ஹஜ்ரத் அபூபக்ரவர்கள் இஸ்லாத்தின் மேன்மைக்காகச் சர்வ தாராளத்துடனே தங்கள் திரவியத்தை யெல்லாம் அள்ளி இறைத்ததன் பயனாக ஹிஜ்ரத்தின்* காலத்தில் ஐயாயிரம் திர்ஹங் களே இவர்கள்பால் எஞ்சியிருந்தன.

---

* 'ஹிஜ்ரத்' என்னும் பதத்திற்கு ஆங்கிலத்தில் 'ஓட்டம்' என்றே பொதுவாகப் பொருள் செய்கிறார்கள்; ஆனால், இப்பதத்தின் மூலப்பொருள், பந்து மித்திரர்களை விட்டு "வெட்டிவிடுதல்," அல்லது அவர்களை "நீத்து விடுதல்" என்றே கருத்துக் கொள்ளுகின்றது. எனினும், இஸ்லாத்தின் சரித்திரத்தில், நபிகள் திலகமும் அவர்க ளுடைய தோழர்களும் மக்காவை விட்டு மதீனாவை நோக்கிப் பிர யாணம் சென்றுவிட்டதையே இந்த ஹிஜ்ரத் தென்பது சுட்டிக் காட்டு

"அபூபக்ரின் செல்வத்தைப் போல வேறெவருடைய செல்வமும் எனக்கு அத்துணைப் பயன்பட்டதில்லை," என்று நபிகள் பிரான்ஸல் அவர்களே ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். ஹஜ்ரத் அபூபக்ர்ரலி தங்கள் விடுதியின் முற்றத்தின்கண் ஒரு சிறிய மஸ்ஜிதை நிர்மாணித்திருந்தார்கள். அதனுள்ளே இவர்கள் அமர்ந்துகொண்டு குர்ஆன் ஷரீபின் ஆயாத்களை மிகவும் உருக்கமான தொனியுடன் கூட ஓதுவார்கள்; அது கேட்டு, அண்டை அயலிலிருந்தவர்களெல்லாரும் தங்கள் தங்கள் உள்ளத்தின் கண்ணே நெக்கு நெக்கு உருகி விடுவார்கள். இது கண்டு, ஏனைக் குறைஷியர் எல்லாரும் ஹஜ்ரத் அபூபக்ர் அவர்களைத் தங்கள் குர்ஆனோதும் தொழிலை விட்டு விலகி யிருக்குமாறு வற்புறுத்தி வந்தார்கள். இப்பெரியார் உரத்த குரலால் குர்ஆன் ஷரீபை ஓதி

---

கின்றது; மக்காவி லிருந்துவந்த இஸ்லாத்தின் விரோதிகளாய் விளங்கி வந்த பரம துஷ்டர்களின் கொடுமையும் பகைமையும் மலிந்துவிட்ட காரணத்தினாலே நபிபெருமானார்ஸல் அவர்கள் தங்கள் உசாத்துணைவர்களுடனே மக்காவை நீத்து, மதீனாவின்கண் சென்று புகலிடம் தேடிக்கொண்டார்கள். ஆதலின், முஸ்லிம்களின் ஆண்டுக்கணக்கு அந்த ஹிஜ்ரத்திலிருந்தே கணிக்கப்பட்டு வருகிறது; நபிகள் நாயகத்தின் ஹிஜ்ரத்தானது வருடத் தொடக்கத்திற்குப் பின்னே இரண்டு மாதத்திற் கதிகமாய்க் கழிந்த பிறகே நிகழ்ந்திருந்த போதினும், அவ்வருடத்தின் முதல் மாதமாகிய முஹர்ரம் மாதத்தின் முதல் தேதியிலிருந்தேதான் ஹிஜ்ரீக் கணக்குக் கணிக்கப்பட்டு வருகின்றது. உத்தேசமாக ஹிஜ்ரீயின் ஆரம்பம் கி. பி. 622, எப்ரில், 19-ஆந் தேதியென்று குறித்துக் கூறலாம்; இக்கணக்கின் பிரகாரம் ஹிஜ்ரத்தானது அவ்வருடம், ஜூன் மாதம், 20-ஆந் தேதி நிகழ்ந்து இருக்கலாம்.

மௌலானா மறைமலை.

வருவதைக் கேட்டு அந்தக் குறைஷிகளின் பெண்டுகளும் பிள்ளைகளும் தங்கள் புராதன மதத்தைவிட்டு நீங்கிவிடக் கூடுமென்று வாதுபுரிந்து வந்தார்கள். ஆனால், அதனாலெல்லாம் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி சிறிதும் தங்கள் கடமையை அடியோடு விட்டுக்கொடுத்து விடவில்லை; இஸ்லாத்தின் பரஞ்ஜோதியை எங்கும் பரத்துதற்கு இப்பெரியார் எடுத்துவந்த முயற்சி கொஞ்ச நஞ்ச மன்று. இவ்வாறெல்லாம் இவர்கள் செய்துவந்த இஸ்லாமிய பிரசார சேவகத்தைக் கண்டு நபிகள் திலகத்திற்கு இந்தப் பிரதம சிஷ்யர் மாட்டு அத்தியந்த விசுவாசம் அங்குரித்துத் தழைத் தோங்கத் தலைப்பட்டு விட்டது. அபூபக்ர்ரலி அவர்களின் செல்வமும் சேவகமும் சதாசர்வ காலமும் இஸ்லாத்தின் பொருட்டே செலவு செய்யப்பட்டு வந்த காரணத்தால் நம்பெருமான்ஸல் புளகாங்கிதங் கொண்டு சந்துஷ்டிசித்தராய், இந்த முதல் சீடரது விடுதிக்கே அடிக்கடி விஜயஞ் செய்து, இன்னரது முகாவலோகனம் செய்து வருவார்கள். இறுதியாக ஹிஜ்ரத்தின் வேளைவந் துற்றபோதுங்கூட நபிகள் திலகம்ஸல் தங்களுடைய சோதனைக்குரிய காலத்திற் கேற்ற உற்றதுணைவர் இந்த அபூபக்ர்ரலி அவர்களென்றேதான் தேர்ந்தெடுத்துக்கொண்டு விட்டார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களின் உயர்ந்த அந்தஸ்திலுள்ள பிறவியின் பெருமைக்காக மட்டுமன்றி, இவர்களது சொந்த அந்தஸ்து, உயரிய ஒழுக்கம், நேரிய நடக்கை, போதிய செல்வம் ஆதியவற்றிற்காகவுமே பொதுஜனங்களால் மிக்க மேதை மரியாதைகளுடனே நடாத்தப்பட்டு வந்தார்கள். இத்தகைய

பெருமிதங்க ளனைத்தும் வாய்க்கப்பெற் றிருந்தும், இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டதன் நிமித்தம் பகைவர்களின் கரத்தினின் றுண்டாய துன்பங்களினின்று இன்னவரால் தவிர்ந்து கொள்வது முடியாமற் போயிற்று.

துன்புறுத்தப் படுகின்றூர்கள்

ஹஜ்ரத் அபூபக்ரின் மாதாவாகிய உம்முல் கைர் தீனுல் இஸ்லாத்தைக் தழுவியதன் சார்பாக ஒரு விருத்தாந்தம் கூறப்படுவதுண்டு:

ஒரு நாள் அபூபக்ர்ரலி இந்தப் புதிய சன்மார்க்கத்தைப் பகிரங்கமாகப் பிரசாரம் புரிந்துகொண்டிருந்தார்கள். அந்தக் காலமானது, நபிகள் நாயகம்ஸல் அவர்களே தங்கள் பிரசார விஷயங்களை யெல்லாம் ஜைத் பின் அர்க்கம் அவர்களுடைய விடுதிக்குள் ளிருந்துகொண்டு மகா மந்தணமாகச் செய்துவந்த காலமா யிருந்துவந்தது. தொழுகைகளுங்கூட அவ் விடுதிக்குள்ளேயே அதிக இரகசியமாகத் தொழப்பட்டு வந்தன. விஷயம் இவ்வா றிருந்து வருங்கால், ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் மட்டுமே பகிரங்கமாகத் தீனுல் இஸ்லாத்தைப் போதித்து வருவதைக் கண்ட மக்கா வாசிகள் அப்பெரியார்மீது தாவி வீழ்ந்து மிகக் கடுமையாக நையப்புடைத்தும் விட்டார்கள். உடனே அபூபக்ர்ரலி அவர்கள் ஸ்மரணை யற்றுக் கீழே வீழ்ந்துவிட்டார்கள்; அப்பொழுது இப்பெரியாரின் உறவின் முறையாளரான பனூ தைம் என்னும் கூட்டத்தார் முஷ்ரிக்கீன் (விக்கிரஹ ஆராதனைக்காரர்) களாகவேதா மிருந்துவந்தனர். எனினும், தங்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் இவ்வண்ணம் நையப் புடைக்கப்பட்டு அவமானப் படுத்தப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்க மனம் பொறுதவர்

களாய், மக்காவின் குறைஷிக் குப்பார்களது கொடிய அக்கிரமத்திலின்று ஹஜ்ரத்அபூபக்ர்ரலி அவர்களை விடுவித்து, அவர்களெல்லாம் ஒன்றுகூடி இவரைச் சுமந்து கொண்டு இவரது விடுதிக்குச் சென்றார்கள். ஆங்குச் சென்றதன் பின்பு ஸ்மரணை தெளிந்தவுடனே ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் விடுத்த வினாவானது, "நபிகள் நாயகம் எங்கே யிருக்கின்றார்கள்?" என்பதேயாகும். உடனே இவரது மாதா அவர்கள் சென்று நபிகள் திலகத்தின் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டு வந்தார்கள். அக்கணமே அம் மாதாவும் மைந்தரும் ஜைத் பின் அர்க்கம் அவர்களுடைய விடுதி நோக்கிப் புறப்பட்டார்கள். ஆங்குச் சென்றவுடன் அபூபக்ரின்ரலி தாயாரவர்கள் தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டு விட்டார்கள். (ஹஜ்ரத் ஸல்மாரலி அவர்களும் தங்கணவரே போல நீண்ட ஆயுளைப் பெற்றிருந்தார்கள். எனவே, ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் கலீபாவாயிருந்த போழ்தும் ஜீவித்திருந்தார்கள்; ஆனால், தங் கணவரான அபூகுஹாபாவுக்கு முன்னம் தேகவியோகமாய் விட்டார்கள்.)

மக்காவாசிகள் அப்பொழு திருந்துவந்த முஸ்லிம்களை யெல்லாம் மிகமிகக் கடுமையான கொடிய துன்பத்திற் கெல்லாம் ஆளாக்கி வந்தது கண்டு, நபிகள் திலகம் அவர்களை நோக்கி அபிஸீனியாவுக்கு (ஹபஷாவுக்கு)ப் பிரயாணம் சென்று விடுமாறு ஆலோசனை கூறினார்கள். அவ்வாறு தங்கள் ஜனன பூமியை விட்டு அன்னிய நாட்டுக்கு அடைக்கலம் செல்லத் துணிந்தவர்களுள் அபூபக்ரும்ரலி ஒருவராக இருந்து வந்தார்கள். ஆனால், இவர்கள் சென்று கொண்டிருந்த மார்க்கத்தில் இப்பெரியாரை காரரா வென்னும்

கூட்டத்தின் தலைவரான இப்னுத் தக்ஞ என்னும் நாமமுடையவர் சந்தித்து, இந்த ஹஜ்ரத் யாங்குச் சென்றுகொண் டிருந்தா ரென்று வினவலுற்ருர். இதற்கு அபூபக்ர்ரலி "என்னுடைய சுதேச மக்களின் துன்பம் சகிக்க மாட்டாது யான் என்னுடைய வீடுவாசல்களை யெல்லாம் துறந்து வெளிப்போந்துள் ளேன்," என்று விடை யிறுத்தார்கள். உடனே அந்தத் தலைவர், "தங்களைப் போன்ற ஒருவர் ஒருகாலும் ஊரைவிட்டுத் துரத்தப்பட் டிருத்தல் கூடாது; என் னெனின், தாங்கள் ஏழைகளுக் கிரங்குகின்றீர்கள்; உற்ருர் உறவினர்களை யெல்லாம் பக்ஷத்துடன் பரா மரித்து வருகின்றீர்கள்; வழிப்போக்கர்களுக்கு விருந் துபசாரம் புரிகின்றீர்கள்," என்று கூறினர். பின்னர் அத்தலைவர் இப்பெரியாரை மக்காவிற்குத் திருப்பிக் கொண்டுவந்து சேர்த்து, ஹஜ்ரத் அபூபக்ர் தம்மு டைய பாதுகாப்பில் இருப்பதாகப் பிரகடனப்படுத்தி ஞர். எனினும், இந்தப் பாதுகாப்பானது பலநாட் கள்வரை அபூபக்ர்ரலி அவர்களுக்கு உபயோகமா யிருந்துவரக் காணப்படவில்லை. அந்தத் தலைவர் செய்து வைத்துப்போன சமாதானத்திற்கு நேர்மாருக ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள், தங்களது விடுதியின் முற்ற வெளியில் கட்டியிருந்த மஸ்ஜிதில் உட்கார்ந்து கொண்டே குர்ஆன் ஷரீபை உரத்த குரலுடன் ஓதத் தலைப்பட்டு விட்டார்கள்; இவர்களுடைய பள்ளிவாச லானது பகிரங்க ரஸ்தாவுக் கருகினில் இவரில்லத்தின் முன்றிலின் பக்கத்தில் தங்களுக்குத் தக்கதாக நிர் மாணிக்கப்பட் டிருந்ததனுல், மக்காவாசிகள் அதனைச் சகிக்கமாட்டாது, இப்னுத்தக்ஞவிடம் போய் முறை யிட்டுக் கொண்டார்கள். உடனே அந்தத் தலைவரும்

தம்மால் இப்பெரியாருக் களிக்கப்பட்டிருந்த பாதுகாப்பை வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டார். ஆனால், ஹஜ்ரத் அபூபக்ர்ரலி மட்டும் அதுகண்டு, அச்சம் சிறிதும் கொண்டுவிடவில்லை. இப்னுத் தக்னாவின் பாதுகாப்பு நீக்கப்பட்டுப் போய்விட்ட போதினும், இம் மஹான் தங்கள் வழக்கத்திற்கேற்பக் குர்ஆன் ஷரீபை மட்டும் இரைந்து ஓதிக்கொண்டே வந்தார்கள்.

நபிகள் திலகத்துக்குஸல் நுபுவ்வத் வந்து பத்தாவது ஆண்டிலே அப்பெருமானாரின் நிகரற்ற ஒரு தனிப் பத்தினியாய் விளங்கிவந்த நன்றியறிதலுள்ள ஹஜ்ரத் கதீஜாரலி பிராட்டியார் அவர்கள் தங்களுடைய 65-ஆவது பிராயத்திலே காலகதியால் தேகவியோக மடைந்து போய்விட்டார்கள். நபிகள்நாயகம்ஸல் மக்கமாநகரின் கண்ணே பட்டுவந்த பல்வகையான பாட்டின்போழ் தெல்லாமும் கஷ்ட நிஷ்டூரங்களினூடே யெல்லாமும் அவ் வம்மையார் அப் பெருமானாருக்கு ஒரு பெரிய நிகரற்ற உத்தமோத்தம மந்திரியாகவே இருந்துவந்திருக்கிறார்கள். ஆதலின், அப்பெருமாட்டியார் தேகவியோகமாய்ப் போய்விட்டதானது நபிகள் நாதருக்கு ஒரு பெரிய திடுக்கத்தை உண்டுபண்ணி, அவர்களுடைய மனத்தையும் தேகத்தையும் அதிகம் பாதிக்கத் தலைப்பட்டுவிட்டது.

**இவர் குமாரி ஆயிஷாரலி நாயகத்துக்கு மணமுடித்து வைக்கப்படல்**

அதே ஆண்டில், அம் மகானுபாவர் அதிக ஆழமான துக்கத்துள் மூழ்கியிருந்தது கண்டு, மற்றொரு முஸ்லிம் மாதரார் அவர்கள்பால் அணுகி, அந்தக் குருமஹான் மீட்டுமொரு விவாகம் முடித்துக்கொள்வதே சாலவும் சிறந்ததாகு மெனக்கூறி, ஹஜ்ரத் அபூபக்ரின் குமாரியாகிய ஆயிஷாவின்ரலி நாமத்தையும் சூசிப்பித்துக்

காண்பித்தார். அந்த இளங் கன்னிகை அதற்கு முன்னரே முத்இம் என்பாரது குமாரராய் விளங்கிய ஜுபைர் என்பாருக்கு மணமுடித்து வைப்பதாக நிச்சயிக்கப்பட்டிருந்தார்; எனவே, நபிகள் பிரானிடம் நெருங்கிய மாதரார் அபூபக்ர்ரலி அவர்களிடமும் நெருங்கி, அவர்களுடைய குமாரியை நபிகள் நாயகத்திற்கு மணமுடித்து வைத்துவிடுவதே சாலச் சிறந்ததாகுமென்று கூறியது கேட்டு, அப்பெரியார் நபிகள் திலகத்துடன் தங்களுக்கு அதற்கு முன்னரே ஏற்பட்டிருந்த அத்தியந்த அபிமானத்தை இன்னம் நன்குகப் பலப்படுத்திக் கொள்வான்வேண்டி அவ் வம்மையாரின் பிரேரணையை மனமுவந்து ஏற்றுக்கொண்ட போதினும், அதற்குமுன்னமே ஜுபைர் பின் முத்இம் என்பவருடன் நிகழ்த்தப்பட்டிருந்த நிச்சயார்த்தத்தை முறிப்பது நன்றன்று என்று எண்ணலாயினர். ஆனல்; ஜுபைர் பின் முத்இம் நாயகம்ஸல் அவர்களுக்கு ஹஜ்ரத் ஆயிஷாவை விவாகம் செய்துவைப்பதே மஹா மேலானதென்றும், இனித் தாம் ஹஜ்ரத் ஆயிஷாவை விவாகம் செய்துகொள்ளப் போவதில்லை யென்றும் தம் மனப்பூர்வமாய் எல்லோருக்கும் தெரியும் வண்ணம் தமதுள்ளக் கிடக்கையைப் பிரகடனப்படுத்தி விட்டார். அதன் பிறகுதான் நபிகள் நாயகம்ஸல் அவர்கள் பீபீ ஆயிஷாவைரலி மணம் புரிந்துகொள்ளப் பூரணச் சம்மதத்தை வெளிப்படுத்தினர்கள். பின்னர் ஹஜ்ரத் ஆயிஷாரலி அவர்கள் நபிகள் நாதரின் விவாக மனைவியென்று நிக்காஹும் முடித்துவைக்கப் பெற்றுர்கள்; அவ்வமயம் ஆயிஷாரலி அவர்கள் இளம் பிராயத்தினராய் இருந்துவந்ததன் காரணத்தால் மணவாளருடன் வீடுகூடி வாழ்வதென்னும் சடங்கு

மட்டும் பிறகு ஐந்து வருடகாலம்வரை பிற்படுத்தியே வைக்கப்பட்டது.

கதீஜா பிராட்டியாரின் நிர்யாணத்திற்குச் சற்றுப் பின்னே, நுபுவ்வத் வந்து 10-ஆவது ஆண்டின் ஷவ்வால் மாதத்திலேதான் நபிகள் பிரானுக்கு ஆயிஷா பிராட்டியார் நிக்காஹ் செய்துவைக்கப்பட்டார்களென்று மிக்க ஆதாரமுள்ள சரித்திரச் சான்றுகள் கூறிக்கொண்டிருக்கின்றன. நபிகள் திலகத்தின் ஹிஜ்ரத்தானது நுபுவ்வத் வந்ததன்பின் 13-ஆவது ஆண்டின் ரபீயுல் அவ்வல் மாதத்திலே, அஃதாவது, மேற்கூறிய விவாகச் சடங்கு நடைபெற்றதன் பிறகு 3 வருடங்களும் 5 மாதங்களும் கழிந்ததன் பின்னேதான் நிகழ்வுற்றிருக்கின்றது. அவ் விவாகத்தின் முடிவாகிய வீடுகூடலென்னும் சடங்கானது, மகா நம்பிக்கைக்குரிய ஆதாரங்களின் பிரகாரம் ஹிஜ்ரத் நடைபெற்றதன் பின்பு 18 மாதங்கள் கழிந்ததன் பின்னேதான் கொண்டாடப்பட்டிருக்கிறது. ஆகவே, மேற்கூறிய நிக்காஹுக்கும் இங்குக் கூறப்பட்டுள்ள இந்த வீடுகூட லென்னும் சடங்கிற்கும் இடையிலே பூர்த்தியான ஐந்துவருடங்கள், அல்லது அவற்றினும் அதிகமாகவே கழிந்திருக்கின்றன. ஆதலின், ஆயிஷா[ரலி] அவர்கள் நிக்காஹின் காலத்தில் 6 அல்லது 7 வருடக் கன்னிகையாகவே இருந்தார்களென்றும், வீடுகூடிய சடங்கின்போது 9 வயதையே அடைந்திருந்தார்களென்றும் சாதாரணமாக அங்கீகரிக்கப்பட்டுவரும் விருத்தாந்தமானது நிதரிசனமாகவே ஒப்புக்கொள்ளத் தகாததாகத்தான் காணப்பட்டு வருகின்றது. என்னெனின், சர்வசாதாரணமாய்க் கூறப்படும் கதையை ஏற்றுக் கொள்வோ

மாயின், ஹஜ்ரத் ஆயிஷாவின் நிக்காஹுக்கும் நாயகத்தின் இல்லத்திற்கு ஏகியதற்கும் இடையிலுள்ள காலமானது இரண்டு, அல்லது மூன்று வருடங்களாகவே சுருங்கிவிடுகின்றது. ஆனால், உண்மையிலே அந்தக் காலம் எந்தவிதக் கணக்கைக்கொண்டும் ஐந்தாண்டுகளைப் பார்க்கினும் குறைவாய்க் காணப்படவில்லை. ஆயிஷா ரலி அவர்களுடைய நிக்காஹின் போழ்து அந்த ஸ்ரீமாட்டியின் வயது ஒன்பதுதானென்று கூறுதற்குரிய பல ஆதாரங்கள் காணப்படாநின்றன.*

நபிகள் நாயகத்துடன் நிக்காஹ் செய்யப்படுதற்கு முன்னரே அக்கன்னிகை ஜுபைருக்கென்று பேசி முடிவு செய்யப்பட்டிருந்ததி லிருந்தும் ஆயிஷா பிராட்டியின் நிக்காஹின் பொழுதிருந்த வயது ஏதோ ஒருவிதமான தவறுதலைக் கொண்டேதான் அவ்வாறு குறைவாகக் கணிக்கப்பட்டு வருகிறதென்று கூறியமைதல் வேண்டும். இன்னம், நபிகள் திலகத்தின் திருக் குமாரியாகிய பாத்திமா ரலி அவர்

---

* இப்னு ஸஅத் தமது 'தபக்காத்' வால்யூம் 8, பக்கம் 42 இல் இவ்வாறு வரைந்திருக்கின்றார்: "நபிகள் திலகம் ஆயிஷாவுடன் நிக்காஹ் செய்துகொண்ட போழ்து அக் கன்னிகையின் வயது 9, அல்லது 7 ஆகத்தான் இருந்தது." அந்தக் கிரந்தத்தின் 41-ஆவது பக்கத்திலே மற்றொரு விஷயம் காணப்படுகிறது; அதன் பிரகாரம் நபிகள்பிரான் அக் கன்னிகையை மணந்துகொண்ட போழ்து அவருக்கு வயது 9 ஆகத்தான் இருந்திருக்கின்றது. ஆதலின், ஹிஜ்ரீ 2-ஆவது ஆண்டில் நடைபெற்ற பத்ரின் யுத்தத்திற்குப் பிறகே நிகழ்வுற்ற வீடுகூடலென்னும் சடங்கின் காலத்தில் அப் பெருமாட்டியாருக்கு 14 பிராயத்தைக் காட்டினும் குறைந்திருப்பது முடியாதென்றே நாம் நன்கு தெரிந்து கொள்கிறோம். மௌலானா முஹம்மதலீ.

களைக் குறித்துக் கூறுங்கால், 'இஸாபா'வில் கூறப்பட்டிருப்பதாவது: அப் பெருமாட்டியார் நுபுவ்வத்திற்கு ஐந்தாண்டுகள் முன்னரேயே அவதாரம் புரிந்தார்கள்; ஆகவே, அந்த ஸ்ரீமாட்டியார் ஆயிஷா பிராட்டியாரைப் பார்க்கினும் சுமார் ஐந்தாண்டுகளே மூத்திருந்தார்கள். இந்தக் கணக்கைக்கொண்டு பார்க்கையிலுங்கூட ஆயிஷாபிராட்டியார் தங்கள் நிக்காஹின்போழ்து பத்து வயதையே அடைந்திருந்தார்களென்றும், அவர்கள் கணவனாரின் இல்லம் புக்கபோழ்து பதினைந்து வயதை எய்தியிருந்தார்களென்றும் நாம் மிகச் செம்மையாகத் தெளிந்து கொள்ளுகிறோம்.

இறுதியிலே முஸ்லிம்களுக்கு மக்காவாசிகள் இழைத்துவந்த இன்னல்களும் இடையூறுகளும் தமதெல்லை கடந்து முகடுமுட்டிவிட்டன. ஆகலான், நபிகனாரின் கட்டளையை யுன்னி, மக்காவி லிருந்துவந்த

**மதீனாவுக்கு ஹிஜ்ரத் புறப்படல்**

முஸ்லிம்க ளனைவரும் மதீனாவைநோக்கிப் புறப்படத் துணிந்து விட்டார்கள். அதற்கியைய ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்களும் ஆண்டுச் செல்லவே ஆயத்தமெல்லாம் செய்து முடித்துக் கொண்டு விட்டார்கள்; ஆனால், நபிகள் திலகமும் அம் மக்கமா நகரை விட்டுப் புறப்படலா மென்னும் தெய்வஆக்ஞை வந்துசேரும் வரை இப்பெரியாரை நம்பெருமான் ஸல் தங்களுடனே நிறுத்திக் கொண்டு விட்டார்கள். எனினும், ஏனை முஸ்லிம்க ளெல்லாரும் ஒவ்வொருவராக மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்று கொண்டேயிருந்தார்கள். இறுதியாக ஹஜ்ரத் அபூபக்ரும் ரலி ஹஜ்ரத்அலீ ரலி அவர்களும் மட்டுமே தாம் நபிகள்

நாயகத்துடன் மக்காவின் கண்ணே தங்கியிருக்க லாயினார்கள். அப்பொழுதுதான் நபிகட் டிலகத்தைக் கொன்றுவிடுவ தென்னும் எதிரிகளின் சதியாலோசனைச் சூழ்ச்சி முழு விவரணத்துடனே மந்தணமாக நிறைவேற்றப் படுதற்குரிய வேளையும் வந்து ஒத்துக்கொண்டு விட்டது. அவ்வேளையிலே தான் நபிபிரான்ஸல் மக்காவைவிட்டுப் புறப்பட்டு விட வேண்டு மென்னும் ஆண்டவனது ஆணையும் வந்துசேரத் தலைப்பட்டது. உடனே நம் மகானுபாவர் ஹஜ்ரத் அபூபக்ரிடம் விஷயத்தை யறிவித்து, இன்னுரையும் அக்கணமே ஆயத்தம் செய்துகொள்ளுமாறு ஆக்ஞையிட்டு விட்டு, தமதில்லத்தி லுள்ள தம் படுக்கையின் மீது, இனித்தம் மருகராக விளங்க விருக்கும் ஹஜ்ரத் அலீயவர்களைச் சயனித்துக் கொள்ளுமாறு பணித்தருளிவிட்டு, தம துறைவிடம் விட்டு நள்ளிரவிலே வெளிப்போந்து, அவர்களை அன்றிரவு கொன்றேவிடுவ தென்னும் முடிவான தீர்மானத்துடனே அவ்விடுதியைச் சூழ்ந்து முற்றுகையிட்டுக் குழுமிக்கிடந்த அந்தக் கொலைபாதகர்களின் கண்களில் மண்ணைப் போட்டுவிட்டு, அன்னார் மத்தியிலே நுழைந்து, தெய்வ கடாக்ஷத்தால் அப்புறம் பத்திரமாகப் போந்து விட்டார்கள். மக்காவிலிருந்து மூன்றுமைல் தூரத்தில் தௌ ரென்னும் நாமம் புனைந்த குகையொன் றிருக்கிறது; அதனுள்ளே சென்று, அன்றிரா முழுவதும் நபிகளுதரும் ஹஜ்ரத் அபூபக்ரும் பத்திரமாகத் தங்கி விட்டார்கள். அதற்குள் ஹஜ்ரத் அபூபக்ரே முதன் முதலாகப் புகுந்து, அக் காரிருள் மயமா யிருந்த குகை முழுதையும் தமது கரங்கொண்டே துடைத்

துத் துப்புரவு செய்துகொண்டு, பின்னரே தங்கள் குருமகானை அழைத்துக்கொண்டார்கள். ஆங்குள்ளே நுழைந்ததன்பின் ஹஜ்ரத் எம்பிரான்ஸல் அவர்கள் தங்கள் அத்தியந்த நண்பரான ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தொடைமீது தங்கள் மேன்மையான சிரத்தை வைத்துச் சிறிது களைப் பாறினார்கள். எதிர்பாராத வண்ணம் அது சமயம் அங்கே அடைக்கப்படாம லிருந்த ஒரு துவாரத்திலிருந்து கொடிய சர்ப்பமொன்று தலை நீட்டிற்று. அதைக் கண்ணுற்றதும் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தங் கள் குருமகானுக்கு அச்சர்ப்பத்தால் இன்னலொன் றும் ஏற்படா வண்ணம் பார்த்துக்கொள்ளும் நோக் கங்கொண்டு, அந்தச் சர்ப்பம் தலை நீட்டிய துவாரத் தின்மீது தங்கள் பாதத்தை வைத்து அடைத்துக் கொண்டார்கள். ஆனால், உள்ளேயிருந்த சர்ப்பம் தன் துவாரத்தை யடைத்துக்கொண்டிருந்த ஹஜ்ரத் அபூபக்ரின் பாதத்தை மிக்க சினத்துடனே தீண் டிற்று. அதன் கடுமையான விஷம் அவர்கள் சரீரத் தில் எங்கும் பரவலாயிற்று. பாதத்தை எடுத்தால் அந்தச் சர்ப்பம் வெளிவந்து விடுமென் றஞ்சி, தம் முடைய விஷக்கஷ்டத்தையும் வெளியில் காட்டிக் கொள்ளாமலே யிருந்தார்கள். என்றாலும் விஷத் தின் உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாது தங்கள் கண்களினின்று வெளிப்பட்ட கண்ணீரின் துளியா னது, தங்கள் தொடைமீது தலையை வைத்துப் படுத்திருக்கும் நபிகள்நாயகம்ஸல் அவர்கள் வதனத்தில் விழவே, எம்பிரா னவர்கள் கண்விழித்து நிலைமை யை யுணர்ந்து, சர்ப்பம் தீண்டிய சிஷ்யர் பாதத்

தில் தங்கள் தூய்மையான எச்சிலைத் தடவி, அம் மரணத்துன்பத்தைப் போக்கினார்கள்.

மறுநாட் காலையிலே மக்காவாசிக ளெல்லாரும் அவ் விருவரையும் தேடிக் கொண்டு புறப்பட்டு, அவர்களுள் சிலர் அவ்விருவரது அடிச்சுவடு பற்றியே தௌரென்னும் குகை வாயில்வரை கூட நெருங்கி வந்து சேர்ந்து விட்டார்கள்; அவர்களுடைய காலடிச்சப்தமும் உள்ளே யிருந்தவர்களுடைய செவியில் நன்கு பட்டது. அதுகேட்டு, ஹஜ்ரத் அபூபக்ர் அதிகம் திகில்கொண்டு விட்டார்கள்; உடனே நபிகள் பெருமான் தங்கள் பிரதம சிஷ்யரை நோக்கி, "ஒன்றுக்கும் அஞ்சற்க! நம்முடன் கூட ஆண்டவனு மிருக்கின்றான்!" என்று சொல்லித் தைரிய மூட்டி வைத்தார்கள். ஆனால், துரத்திவந்த துஷ்டர்கள் தௌரினுள்ளே ஒருவருமில்லை யெனக் கொண்டு, தங்களில்லம் நோக்கித் திரும்பி விட்டார்கள்.

**இவர் தௌரில் திகில் கொள்ளல்**

தங்களிருவருக்கும் வேண்டிய ஆகார சம்பந்தமாக அபூபக்ர்[ரலி] அவர்கள் அதற்கு முன்பே தக்க ஏற்பாடு செய்து வைத்திருந்தார்கள். தங்களுடைய வெள்ளாடு மேய்ப்போரான ஆமிர் பின் புஹைராவிடம் சொல்லி, அவர் ஆட்டு மந்தைகளை மேய்த்துக் கொண்டே வந்து, இராவேளையில் அந்த தௌரென்னும் மலைக்குகைவாயி லருகினில் மறித்து மடக்கி வைக்க வேண்டு மென்று கட்டளையிட்டு வைத் திருந்தார்கள். அவ்வாறே அம் மேய்ப்போர் தம்முடைய ஆடுகளனைத்தையும் அக் குகையினருகில் கொண்டுவந்து மந்தை மடக்கிவைப்பார்; அவ் வெள்ளாடுகளின் பாலைமட்டுங் கொண்டே அவ்

விருவரும் பசி யாற்றிக் கொள்வர். இவ்வாருக மூன்று பகலும் மூன்று இரவும் ஒன்றன்பின் னென்ருக மிக்க நல்ல முறையிலேயே கழிந்து வந்தன ; அன்றியும், ஹஜ்ரத் அபூபக்ரின் குமாரரான அப்துல்லாஹ் அவர்களுக்குச் சொல்லிவைத்திருந்தபடி ஒவ்வோர் இரவும், அன்று பகல் முழுதும் காணுமற் போய்விட்ட இவ்விருவரின் சம்பந்தமாய் மக்காவில் என்ன நடைபெறுகின்ற தென்பதைத் தெரியப்படுத்திக் கொண்டே யிருந்தார்கள். இறுதியில் நான்காவது நாள் விடிந்ததன் பின்னே அவர்களிருவரும், அதற்கு முன்னர் அபூபக்ர்[ரலி] அவர்களாலே இதற்கென்று தையார்செய்து வைக்கப்பட்டிருந்த ஒட்டகங்கள் மீது ஆரோகணித்தவர்க ளாய், மதீனுவை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்களுடன் கூட அபூபக்ரின்[ரலி] வேலையாளரான முஸ்அப் பின் உமைரும், அப்துல்லாஹ் பின் அரீக்கத் என்பவரும் உடன்வர—இவர் அதுசமயம் முஸ்லிமல்லாதவரா யிருந்தும், இவரை மதீனுவுக்கு வழி காட்டக் கூடியவராகச் செய்துகொண்டு, புறப்பட்டுச் சென்ருர்கள். நபிகள் திலகத்திற்கு வழிமுழுவதும் செய்ய வேண்டியிருந்த சுசுரூஷை யனைத்தையும் ஹஜ்ரத் அபூபக்ரே[ரலி] மதீன சென்றுசேரும் வரை செய்து முடித்தார்கள்.

**மதீனுவில் இவர் செய்த சேவை**

மக்காவி லிருந்து வந்தக்கால் தீனுல் இஸ்லாத்திற்கு வேண்டப்பட்ட உதவியானது மிகச் சிறிதளவின தாகவே காணப்பட்டு வந்தது; ஆனல், மதீனுவுக்கு ஹிஜ்ரத் சென்றதன் பின்பு இம்மார்க்கத்துக்கு வேண்டிய உதவிகள் பலதிறப்பட்டனவாகப்

பல்கிப் பெருகிவிட்டன. அப்பொழுதும் தீனுல் இஸ்லாத்தின் கூப்பீட்டிற்கு முதன் முதலாகச் செவி சாய்க்கக் கூடியவர் ஹஜ்ரத் அபூபக்ராகவே காணப்பட்டு வந்தார்கள். ஒரு மஸ்ஜித் நிர்மாணித்தற்கு மனை வேண்டப்பட்டபோழ்து, இப்பெரியாரே அதன் கிரய முழுதையும் தமது சொந்தப் பணத்திலிருந்து கொடுத்துத் தீர்த்தார்கள். அதுகாலை அம் முஸ்லிம் சிறு தொகுதியினர் செய்து தீர்க்கவேண்டி யிருந்த முக்கிய முதல்வேலை, இஸ்லாத்தை எவ்வாறேனும் வாள்கொண்டு தடிந்து தலைதூக்காது செய்துவிடலே சாலச் சிறந்ததென்று கங்கணம் கட்டிநின்ற கணக்கற்ற பகைஞர்கள் முன்னே உயிருக்கு மிகக் கடுமையாக மன்றுடுவதாகவே யிருந்து வந்தது; ஆகவே, அம்முஸ்லிம்கள் தற்காப்பினித்தம் யுத்தத்தி லிறங்க வேண்டிய அத்தியாவசியம் அது போழ்து உண்டாய் விட்டது. அதன் பின்பு அடிக்கடி இடைவிடாது நிகழ்த்தப்பட்டு வந்த, பெரும்பெரும் பகைவர்களால் நடாத்தப்பட்ட, மாபெரும் யுத்தங்களுக் கெல்லாம் அச்சிறு தொகையினரா யிருந்துவந்த முஸ்லிம்கள் தங்களா லியன்ற மட்டும் உதவி புரிந்தே தீரவேண்டியவர்களா யிருந்து வந்தார்கள்; இப்பொழுதும், மக்காவி லிருந்துவந்த வண்ணமாயே ஹஜ்ரத் அபூபக்ரவர்களே முதன்மை பெற்று விளங்கினார்கள். ஒரு முறை ஹஜ்ரத் உமர்[ரலி] அவர்கள் தங்களுடைய சொத்திலிருந்து சரிபாதியைக் கொண்டுவந்து யுத்த நிதிக்கென்று சமர்ப்பித்து விட்டார்கள்; அவ்வமயமேனும் தாம் ஹஜ்ரத் அபூபக்ரை மிகைத்துவிட்டதாக உமர்[ரலி] இறுமாந்திருந்தார்கள். அதுபோழ்து ஹஜ்ரத் அபூபக்ர் தங்களுடைய ஆஸ்தி முழுதையுமே கொண்டு

வந்து கொடுத்துவிட்டார்கள். அதுகண்டு நபிபெருமான், "தங்களில்லத்தில் இன்னம் என்ன பாக்கி வைத்துள்ளீர்கள்?" என்று வினவியதற்கு விடையாக அபூபக்ரவர்கள் "அல்லாஹ்வையும் அவனுடைய ரஸூலையுமே பாக்கியாக வைத்துள்ளேன்," என்று சட்டெனக் கூறினார்கள்.

சுற்றந் தழுவுதல்

ஹஜ்ரத் அபூபக்ர் தங்கள் உற்றார் உறவினர் மீதெல்லாம் தங்களது ஐசுவரியத்தை அதிக தாராளமாக அள்ளி யிறைத்தே வந்தார்கள். இவ்வாருய பந்துக்களுள் முஸத்தஹ்பின் அதாதாவென்னும் நாமமுடையாரொருவர், மதீனாவிலிருந்த நயவஞ்சகச் சூழ்ச்சிக்காரரின் பொய்வலையுள்ளே சிக்குண்டு, ஆயிஷாபிராட்டியார்ரலி குறித்து அபவாதப் பழி சுமத்திய மனிதர்களுடன் சேர்ந்து கொண்டு, அபாண்டமாய் அவதூறு கூறத் தொடங்கிவிட்டார்; அப்பொழுது அபூபக்ர்ரலி அந்த முஸந்தஹுக்குக் கொடுத்துவந்த உபகார உம்பளத்தை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். ஆயினும், ஆண்டவனே தன் திருமறையில் (24 : 22) இந்த விஷயத்தை மன்னித்து விடுமாறு ஸிபாரிஷ் செய்கின்ருன். அபூபக்ரைப் போன்ற தாராள சித்தமும் உதாரகுணமும் படைத்துள்ள ஒருவர், தமது குமாரியை நிந்தித்தா னென்னும் குற்றத்திற்காக ஒரேழை யுறவினனுக்குச் செய்துவந்த உபகாரத்தை நிறுத்தி விடுவது அழகன் றென்றே அவ்வாயத்து வற்புறுத்துகின்றது. அதன்பின்பு ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் அந்த முஸத்தஹை மன்னித்து, மீட்டும் வழக்கம்போலே உதவிபுரியத் தொடங்கி விட்டார்கள்

மதீனு வாழ்க்கையில் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் ராஜீய காரியங்களில் நபிகள் திலகத்திற்கு வலக் கரமே போன்று விளங்கி வந்தார்கள். இன்னம், அவர்கள் யுத்தகளங்களுக்கும் சென்று, மிக்க வீராவேசத்துடனே சமரும் புரிந் திருக்கிறார்கள். நபிகள் நாயகம் நேரில் சென்று கலந்து கொண்டிருந்த எந்த யுத்தகளத்திற்கும் இப்பெரியாரும் சென்று சேராமல் இல்லை. மதீனுவிற்கு ஹிஜ்ரத் சென்றதன் பின்பு முதன் முதலாக மக்காவாசிகளால் தொடங்கப்பட்ட யுத்தம் பத்ர் என்னும் இடத்திலே நிகழ்த்தப் பட்டது.*

யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்ளல்

எண்ணிக்கையில் மக்காவாசிகளின் தொகை முஸ்லிம்களின் தொகையைப் பார்க்கினும் மும்மடங் காய் மலிகிக் கிடந்தது; அவர்களுடைய யுத்த முஸ்தீபும் அதிக பலமாகவே காணப்பட்டது. என்னெனின், மக்கா வாசிகளுள் பல கைதேர்ந்த வீரர்களும் சூரர்களும் காணப்பட்டு வந்ததோடு, படைக்கலங்களும் அதிகமாகவும் மிக்க நல்ல முறையாகவும் வைத திருந்தார்கள். அந்த யுத்தத்தின் போழ்து நபிகள்

இறுதி நேரத்திலும் இறை வணக்கம்

---

*மதீனுவிலிருந்து தெற்குநோக்கி மூன்றுநாட் பிரயாண தூரத்திலும், மக்காவிலிருந்து வடக்குநோக்கிப் பத்துநாட் பிரயாண தூரத்திலும் அமைந்திருந்த ஒரு கிணற்றின் பெயரால் அவ்விடத்திற்கு "பத்ர்" என்னும் நாமம் வழங்கலாயிற்று. இதைக்கொண்டே மக்கா வாசிகள் தாம் மதீனுவின்மீது வலுவிலே படையெடுத்துச் சென்றார்களென்றும், முஸ்லிம்கள் தற்காப்பினிமித்தமாகவே நிர்ப்பந்தத்தின்மீதே எதிர் கொண்டு சென்றார்களென்றும் நாம் அறிந்துகொள்ளுகிறோம். ஹி. 2 - இன் ரமலான் மாதத்தில் இந்த 'பத்ர் யுத்தம்' நடைபெற்றது.

பிரான்[ஸல்] ஓர் எளிய குடிலுக்குள் புகுந்து ஆண்டவன் சன்னிதானத்தில் குப்புறச் சிரவணக்கம் புரிந்து வீழ்ந்து, " ஏ ஆண்டவனே ! இன்றைத்தினம், உன்னுடைய ஊழியர்க ளாகிய இந்த ஒரு சிலர்கள் மடிந்து விடுவார்க ளாயின், உன்னை வணங்குதற்கு இத்தரணியின் மீது ஒருவரும் இல்லாது போய்விடுவார் ! " என்று மன்ருடிப் பிரார்த்தனை புரிந்தார்கள். அதுபோழ்து ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களே அக்குடிலின் வாயிலில் நின்று காவல் புரிந்தவண்ணமே தங்கள் குருமகானின் மேற்கூறிய ஹிருதயபூர்வமான பிரார்த்தனையையும் செவிமடுத்துக் கொண்டார்கள். இறுதியாக அப் பெரியார் நபிகள் திசைத்தை நோக்கி, " ஏ அல்லாஹ்வின் திரு நபீ ! அவன் வாக்குறுதி செய்து கொடுத்திருக்கும் வண்ணமே நிச்சயமாகத் தங்களுக்கு உதவிபுரிவான்வேண்டி எழுந்தருளுவான் ! " என்று உற்சாக மூட்டினர்கள்.

ஹஜ்ரத்தின் மனத் துணிவு

பிறகு அவ்விருவரும் யுத்தகளம்புக்கு அச் சமர் முறையில் ஈடுபட்டபோழ்து, ஹஜ்ரத் அபூபக்ர் அதிகமான சாமர்த்தியத்தைக் காண்பித்தார்கள். யுத்தமுடிவில் முஸ்லிம்களே ஜயக்கொடி நாட்டினர்கள் ; எதிரிக ளுள்ளிருந்து 70 யுத்தக் கைதிகளும் முஸ்லிம்களின் கைவயம் சிக்கி விட்டார்கள். இங்ஙனம் கைதியானவர்களை யாதுசெய்ய வேண்டுமெனத் தம் சஹாபாக்களிடம் நாயகம்[ஸல்] அவர்கள் உசாவியக்கால், ஹஜ்ரத் உமர்கத்தாப்[ரலி] கைதிகளின் சிரங்களைக் கொய்துவிட வேண்டுமென அபிப்பிராயம் தெரியப்படுத்தினர்கள். ஆனல், ஹஜ்ரத் சித்தீக்[ரலி] " இன்னர் இதுசமயம் கைதிகளாகவே யிருக்கின்

ளுர்கள். எனினும், நம்முடைய ஆதிநண்பர்களாவர். எனவே, இவர்கள்மீது இரங்க வேண்டுவது அத்தியாவசியமாகும். இவர்களிடத் திருந்தெல்லாம் விடுதலைக்கிரயம் பெற்றுக்கொண்டு விட்டுவிடலாம்," என்று ஆலோசனை கூறினார்கள். அபூபக்ர் சித்தீக்ரலி அவர்கள் அபிப்பிராயம், கருணைக்கடலாம் நபிகள்ஸல் அவர்கள் அபிப்பிராயத்துக் கொத்தவாறே காணப்பட்டமையால், அவ்வாறே நபிகள்பிரானும் உரிமைக்கிரயம் பெற்றுக் கொண்டு எல்லாருக்கும் விடுதலை கொடுத்து விட்டார்கள்.

**உஹுத் யுத்தம்**

உஹுத் யுத்தத்தில்* முஸ்லிம்கள் ஜயத்திற்குரிய முடிவிலே அபஜயத்துள்ளே சிக்கிக்கொண்டவர்களேபோலக் காணப்பட்ட போழ்தும், ஹஜ்ரத் அபூபக்ரே அதிக மனத்துணிவுடன் தைரியமாய் மஹா உறுதியுடன் நின்று இடம்பெயராமல் யுத்தம் செய்து வந்தார்கள்.

உஹுதில் இறுதியாக, அதுசமயம் காபிராயிருந்த அபூஸுப்யான், "முஹம்மத்ஸல் அவருடைய ஜனங்களுக்கு மத்தியில் உயிருட னிருக்கின்ருரா?

* இந்த உஹுத் யுத்தம் ஹி. 3-ஆவது ஆண்டில் நடைபெற்றது. மதீனாவிலிருந்து வடக்கே 3 மைல் தூரத்தில் அமைந்துள்ள ஒரு மலையின் பெயர் "உஹுத்" என்பதாகும். இந்த யுத்தகளத்தில் குறைஷியர்கள் மதீனாவை நெருங்கி அதிக சமீபத்தில் வந்துவிட்டார்கள். முஸ்லிம்கள் 700 பேர்களே யிருந்தனர்கள்; எதிரிகள் 3,000 ஆகப் பெருகிவந்தனர்கள். நபிகள் திலகம் மதீனாவிற்குள்ளிருந்தே அந்நகரைத் தற்காக்கலா மென்று கூறினார்கள்; ஆனால், பெரும்பான்மையோர்கள் விருப்பத்திற்கிணங்க நபிகள் நாயகமும் முடிவாக உஹுத் என்னும் மலையடிவாரத்திற்கே செல்லப் புறப்பட்டுவிட்டார்கள்.

குறைஷிகளைத் துரத்தியடித்த வீரர்

அபூபக்ரும்ரலி அவர்கள் ஜனங்கள் மத்தியில் உயிருடனே இருக்கின்றாரா? உமரும்ரலி அவர்கள் ஜனங்கள் மத்தியில் உயிருடனிருக்கிறாரா?" என்று அறைகூவி அழைத்தார். இறுதியாக உமர்ரலி "அவர்களெல்லாரும் உங்களை வீழ்த்துவதற்காக இங்கே தான் உயிருடன் இருக்கிறார்கள்!" என்று மறுத்துக் கூறினார். இதுகேட்டு, எதிரிகளனைவரும் உஹுதை விட்டு ஓட்டம் பிடித்து விட்டார்கள். மறு நாளே அம் முஸ்லிம்கள் முதல்நாள் ஓடிய குறைஷிகளைத் துரத்திக்கொண்டு சென்றார்கள்; அதிலும் **அபூபகர்**ரலி அவர்கள் ஒரு முக்கியஸ்தராகவே காணப்பட்டார்கள்.

அபூபக்ர்ரலி மண்வேலை செய்தல்

அதன் பின்னர், அகழ்யுத்தம் என்று அழைக்கப்படும் சமர் தொடங்கப்பட்டது.* அந்த யுத்தத்தின் போழ்தும், எதிரிகள் மதீனாவிற்குள்ளே வந்து நுழைந்துவிடாதிருக்கும் பொருட்டு, புறநகரில் தடுத்துவிடுவான் வேண்டி அந்நகரைச் சூழ்ந்து ஆழிய அகழொன்று நபிகள்பிரான் முதலியோரால் தோண்டப் பட்டபொழுது, ஹஜ்ரத் அபூபக்ரும் மற்றெல்லா ஊழியர்களையும் போலவே உடன்நின்று மண்வேலை செய்து வந்தார்கள். அதன்பின்பு மதீனாநகரம் 30 நாள் வரை முற்றுகை யிடப்பட்டே கிடந்தது; அப்

---

* இந்த யுத்தம் ஹி. 5-ஆவது ஆண்டில் நிகழ்த்தப்பட்டது. அது சமயம் எதிரிகளின் தொகை 10,000 முதல் 25,000 வரை இருந்து வந்ததென்று கூறப்படுகிறது. ஆதலின், அப்பொழுது முஸ்லிம்கள் மதீனாவின் எல்லைகுள்ளேயே தங்களைத் தற்காத்துக் கொள்ள வேண்டிய அத்தியாவசியம் நேர்ந்துவிட்டது.

பால் எதிரிகளே தாமே திரும்பி வலிந்து ஓட்டம் பிடித்து விட்டார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் ஹுதைபிய்யாவில்* உடன்படிக்கை வரையப்பட்ட போழ்தும் உடனிருந்தே வந்தார்கள். அவ் வுடன்படிக்கையில் காணப்பட்ட நிபந்தனைகளெல்லாம் தங்களுக்கே மகா அவமானத்தை விளைக்கக் கூடியனவாய் இருந்தன வென்று கொண்டு, அம்முஸ்லிம்க ளெல்லாரும் அதிகமாகக் குழப்பமடைந்து விட்டார்கள். குறிப்பாக ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் அளவிறந்த பதஷ்டத்தை அடைந்து விட்டு, ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களிடம் ஓடி வந்து, "நம்முடைய கக்ஷி நியாயமா யிருந்துவருங் கால், நாம் ஏன் இத்துணை அவமானகரமா யுள்ள நிபந்தனைகளுக்குக் கட்டுப்படவேண்டும்?" என்று கடுமையாக வினவினார்கள். அது கேட்டு, அபூபக்ர்ரலி அவர்கள் அதிக சாந்தத்துடனே, நபிகள் பெருமான்ஸல் ஆண்டவனுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டே தான் அவ்வாறு உடன்படிக்கை செய்து கொடுத்திருப்பார்கள் என்று சமாதானம் கூறிவைத்தார்கள். அப்பொழுது உமர்ரலி "நாம் ஹஜ்ஜென்னும் யாத்திரையைச் செய்து முடிக்க வேண்டு மென்று நபிகள் திலகம் கூறியிருக்க வில்லையா?" என்று வின

இவர் உமருக்குச் சமாதானம் கூறல்

* ஹுதைபிய்யா வென்னும் ஸ்தலம் மக்காவிலிருந்து ஒன்பது மைல் தூரத்தில் அமைந்திருக்கிறது. ஹி. 6-இல் நபிகள் திலகம் 1400 தோழர்களுடனே மக்காவிற்கு யாத்திரை செல்லப் புறப்பட்டார்கள். அவர்கள் மக்கமாநகருள் நுழையாமுன்னம் குறைஷிகள் எதிர்கொண்டு வந்து, ஹுதைபிய்யாவில் முஸ்லிம்களைத் தடுத்துவிட்டார்கள். ஆதலின் அங்கேயே அவ்வுடன்படிக்கை வரையப்பட்டது.

வினார்கள். இது கேட்டு, அபூபக்ர்ரலி "வாஸ்தவந்தான்! இவ் வருடமே அவ்வாறு செய்து முடிக்க வேண்டுமென்று அவர்கள் சொல்லவில்லையே!" என்று விடையிறுத்தார்கள். பிறகு உமர்ரலி நபிகள் நாயகத்திடமும் அவ்வினாவினை விடுத்த போழ்து, அவர்களும் இதேவிதமாகத்தான் விடை கொடுத்து முடித்தார்கள்.

அம்புக்கு அஞ்சாத் துணிகரம்

ஹுனைனில் நிகழ்ந்த யுத்தத்தின்* முற்பகுதியில் எதிரிகளின் வில்லாளிகள் எய்த அம்புகளின் கொடுமையால் முஸ்லிம்கள் பின்னிடைய வேண்டியவர்களாயினார்கள். ஆங்கும் ஹஜ்ரத் அபூபக்ர் தங்கள் யதாஸ்தானத்தில் ஸ்திரமாக நின்றுகொண்டு, யுத்தத்தை வெற்றிகரமாக முடித்து வைப்பதற்குப் பெரிதும் உதவிபுரிந்து வந்தார்கள். தபூக்கின்மீது † படையெடுத்துச் செல்லப் பொருள் வேண்டப்பட்ட போழ்து, ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் தங்கள்பால் இருந்துவந்த எல்லா ஐசுவரியத்தையும் தேசசேவைக்காகத் தேவையெனக் கண்டு கொண்டுவந்து கொடுத்து விட்டார்கள். ஹிஜ்ரீ 9-ஆவது ஆண்டில் மக்காவை நோக்கி அனுப்பப்பட்ட முஸ்லிம் யாத்திரிகர் குழாத்

* இது மக்காவிலிருந்து கிழக்கிலிருக்கிறது. ஹி. 8-இல் இந்த யுத்தம் நிகழ்வுற்றது.

† இஸ்லாத்தின் அபிவிருத்தி அடைந்துகொண்டு வந்த செல்வாக்கைக்கண்டு பொறுணகி இம்மார்க்கத்தையே இத்தரணியினின்றும் கல்வி எறிந்துவிடுவதென்னும் முழுநோக்குடனே அரப் நாட்டின்மீது படையெடுத்துவர உரோமாபுரியின் கைஸரால் பிரயத்தனம் செய்யப்பட்டு வருவதாகக் கேள்வியுற்று, ஹி. 9-இல் வடக்கு எல்லைப்புறத்திலுள்ள தபூக்கின்மீது படையெடுப்பு நபிகள் நாதரால் கிளப்பப்பட்டது.

திற்கும் ஹஜ்ரத் அபூபக்ரே தலைவராக அனுப்பப் பட்டார்கள்.

ஹிஜ்ரீ 10-ஆவதாண்டின் இறுதியிலே நபிகள் நாயகம் ஹஜ்ஜென்னும் மக்கா யாத்திரை செய்யப் புறப்பட்டார்கள். இதுதான் "ஹஜ்ஜ(த்)துல் விதாஃ" அல்லது இறுதி ஹஜ்ஜென்று அழைக்கப்பட்டு வருகிறது. இந்தயாத்திரையின் போழ்து, இஸ்லாமார்க்கம் சம்பூர்ணமடைந்து விட்டதென்றும், எனவே இனி அவர்களுடைய ஆயுளும் பரிபூர்ணமடைந்து விடுதலே சரதமென்றும் நபிகள் பிரானுக்கு ஆண்டவனால் அறிவிக்கப்பட்டு விட்டது. பின்னர் மதீனாவிற்குத் திரும்பி வந்ததன் பின்னே இரண்டரை மாதங்கள் கழிந்து நம்பெருமான்ஸல் வியாதியுற்று விட்டார்கள். அவ்வாறு நோய்வாய்ப் பட்டிருந்தும், தங்கள் சக்தி கொண்டு நடாத்தும் நாட்கள்வரை தாங்களே மஸ்ஜிதிற்கு நேரிற்சென்று எல்லா வேளைத் தொழுகைகளையும் நிறைவேற்றி முடித்துவைத்து வந்தார்கள். ஆனால், அப்பொழுதெல்லாம் அவர்கள் பலஹீனத்தால் அதிகம் பேசமுடியாதிருந்துவந்தார்கள். ஆயினும், ஒருநாள் நபிகள் பெருமான் தங்கள் ஹிதோபதேசத்தின் போழ்து, "ஆண்டவன் தன்னடியானொருவனுக்கு, இவ்வுலக வாழ்க்கையையேனும் அல்லது அவனுடன் ஸமீபமாய் நெருங்கியிருக்கும் அவ்வுலக வாழ்க்கையையேனும் தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு பணித்தருளி யுள்ளான். ஆனால், அவ் வடியான் தன் ரக்ஷகன்பால் சேர்ந்து வாழ்தலே சிலாக்கியமென்று

நபிகள் பெருமானின் இறுதி நாட்களில் இப்பெரியார் இமாமா யிருத்தல்; நபிகள் திலகம் வியாதி யுறுதல்

தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டான்,'' என்று மொழிந்தருளினார்கள்.

இதுகேட்டு, அபூபக்ர் ரலி அவர்களது நேத்திரத்தில் நீர் ததும்பலாயிற்று. நபிபிரான் ஸல் கூறியதிலுள்ள மறைபொருளை இப்பெரியார் நுணுகி யறிந்து கொண்டு விட்டார்கள். திருநபி யவர்களது ஆயுள் தனது பரிபூர்ண தசையை நோக்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது. பின்பு அப்பெருமானார் மஸ்ஜிதுக் குள் நுழையும் வாயில்களுள் ஹஜ்ரத் அபூபக்ரின் வாயிலையல்லது, ஏனையவற்றை யெல்லாம் மூடிவிடு மாறு உத்தரவிட்டார்கள்.

**அபூபக்ர் ரலி இமாமாகுதல்**

நாளாக நாளாக நபிகள் திலகத்தின் தேகஸ்திதி யானது அதிகமதிகம் பல ஹீனமடைந்து கொண்டே வந்தது; ஆதலின், அவர்கள் மஸ்ஜிதுக்கு விஜயம் செய்வதையும் மெல்லமெல்ல நிறுத்திக் கொண்டு விட்டார்கள். அப்பொழு தொருநாள் மூன்று முறை அவர்க ளிருந்த அறைக்குச் சமாசாரம் சொல்லி யனுப்பப் பட்டது: ஆனால், அவர்களால் அதுசமயம் மஸ்ஜிதுக் குள் விஜயம் செய்தற்குப் போதுமான பலத்தைப் பெற்றுக் கொள்ள முடியவில்லை. ஆகவே, அபூ பக்ரே ரலி இமாமாக முன்னின்று தொழுகையை நிறை வேற்றக் கடவரென்று நபிகள் திலகம் அனுமதி யளித்து விட்டார்கள். இதுகேட்டு, ஆயிஷா பிராட்டி யார் ரலி தங்கள் தந்தையார் மிகவும் இளகியமனமுடை வரென்றும், குர்ஆனை ஓதும்பொழுதே அழுது விடு வார்க ளென்றும், தந் தந்தையார் பொருமைக் குள்ளாக்கப்படுவார்க ளென்றும் மொழிந்து நின்றார். ஆனல், இந்தச் சமாதானத்தை நபிகட்டிலகம் ஒரு

சிறிதும் செவியேற்காது, ஹஜ்ரத் அபூபக்ரே அத் தொழுகைகளை நடாத்திவைக்க வேண்டுமென்று வற் புறுத்திக் கூறினார்கள். எனினும், ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் ஹஜ்ரத் உமரை நோக்கித் "தாங்களே இமாமத் செய்யவேண்டு" மெனக் கோர, "என்னைக் காட்டினும் தாங்களே மேலானவர்க ளாகையால் தாங்கள் தாம் இக் கைங்கரியத்தைச் செய்யத்தகுந்த வர்க" ளென்று உமர்ரலி கூறிவிட்டார்கள்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு ஒரு தொழுகை யின் வேளையில் நாயகம்ஸல் அவர்கள் மஸ்ஜிதுக்குள் வந்தார்கள். இமாமத் செய்துகொண்டிருந்த ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் அதை யுணர்ந்ததும், தங் கள் ஸ்தானத்தினின்றும் பின்னே நகர நாடினார்கள். ஆனால், ரஸூல்ஸல் அவர்கள் இடத்தைவிட்டு இவரை அசைய வேண்டா மெனச் சைக்கினை செய்துவிட்டு, வலப் பக்கத்தில் உட்காந்து தங்கள் தொழுகையை நிறைவேற்றினார்கள். ஆதலின், அப்பெருமானாரின் இகலோக வாழ்க்கையின் இறுதிமூன்று நாட்களி லும் அபூபக்ர்ரலி அவர்களே இமாமாக நின்று தொழுகைகளை யெல்லாம் நிறைவேற்றி வந்தார்கள். இதனால், நபிகள் நாயகம் தங்களுக்குப் பின்னால் தங்கள் ஸ்தானத்தில் பிரதிநிதியாக நின்று காரியாதி களை நிறைவேற்றி வைக்கக்கூடிய தகுதிவாய்ந்தவர் இப் பெரியாரே யென்றுதான் கருதி யிருந்தார்க ளென்று செவ்விதாக உணர்ந்து கொள்ளுகிறோம். மற்றொரு செய்தியின் பிரகாரம் நபிகள்பிரான்ஸல் ஆயிஷாரலி அல்லது அவர் சோதரர் அப்துர்ரஹ் மான்ரலி அவர்கள்பால் ஹஜ்ரத் அபூபக்ரையே தங் கள் பிரதிநிதியாக நியமிக்கப் போவதாகவும், அதற்

குரிய "உயிலை"யும் எழுதிவைக்கப் போவதாகவும் கூறி, பின்னர் அவ்வாறு செய்ய வேண்டிய ஆவசியக மில்லையென்று எண்ணி விட்டுவிட்டதாவும் ஒரு விஷயம் காணப் படாநின்றது. என்னெனின், ஹஜ்ரத் அபூபக்ர் விஷயத்தில் எவருக்கும் என்ன விதமான சந்தேகமும் இருத்தற்குக் காரணமில்லை; நபிகள் திலகதிற்குப் பின்பு அம் மகானுபாவரின் ஸ்தானத்தில் பிரதிநிதியா யமர்ந்து இலங்குவதற்கு ஒருவரும் ஆக்ஷேபம் கிளப்புவது முடியாது; இப்பெரியாரைப் பிரதிநிதியாகக் கொள்வதில் ஆண்டவனும் அடியார்களும் ஏகோபித்தே அபிப்பிராயங் கூறிவிடுவர். (தபக்காத்தெ இப்னு ஸஅத், வால். 3, பக். 128)

ஹிஜ்ரீ 11-ஆவது ஆண்டின் ரபீயுல் அவ்வல் மாதம் முதல்தேதியா யிருந்த* ஒரு திங்கட்கிழமை யன்று முஹம்மத் நபி (இவர்கள்மீது இறைவனது சாந்தியும் சமாதானமும் என்றென்றும் இறங்கக் கடவன!) இவ் வநித்திய வாழ்க்கையை விட்டு அந் நித்திய வாழ்க்கையின் பக்கல் பிரயாணம் சென்று

நபிகணுதர் நிர்யாண மடைதல்

* நபிகள் நாதர்ஸல் அவர்கள் நிர்யாண மடைந்தது குறித்து, ரபீயுல் அவ்வல் மாதம், முதல்தேதி யென்றும், இரண்டாந் தேதி யென்றும், 12-ஆந் தேதி யென்றும் மூன்று விதமான அபிப்பிராய மிருந்து வருகின்றன. இதில் மூன்றாவது அபிப்பிராயம் எவ்வழியிலும் சரித்திர ஆதார மில்லாமல் நிற்கும் ஒரு தப்பபிப்பிராய மென்றும், இரண்டாந் தேதி யென்பது நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்யமுடியாத ஒரு வார்த்தை யென்றும், ஹிஜ்ரீ 11-ஆம் ஆண்டு, ரபீயுல் அவ்வல் மாதம் முதல்தேதி யன்றே ரசூல்ஸல் அவர்கள் மறு உலகுக்குச் சென்றார்க ளென்பதே பன்முறையாலும் ஊர்ஜிதமாய் நிற்கும் ஒரு விஷயமாகும் என்றும், அல்லாமா ஷிப்லீ அவர்கள் தங்கள் "ஸீரத்துன்னபீ"யின் வால்யூம் 2, பக்கம் 170, 171, 172-இல் விரிவாக எழுதியிருக்கின்றார்கள்.

விட்டார்கள். மெய்யாகவே அவர்கள் பல தினங்கள் வரை வியாதியுற்றே படுக்கையி லிருந்து வந்தார்கள்; அப்பொழுதெல்லாம் சிற்சில வேளைகளில் அதிக அபாய கரமான நேரங்களையும் எட்டிக்கொண்டே யிருந் தார்கள். அந்தத் திங்கட்கிழமையன்று காலையில் நபி கள்திலகம் அதிக சுகமடைந்தவர்களேபோல் காணப் பட்டு, சிற்சில மனிதர்களுடனே சம்பாஷித்துக் கொண்டு மிருந்தார்கள். அதுசமயம், அவர்களைப் பீடித்திருந்த வியாதியும் ஒருவாறு குணமடைந்து விட்டதென்றே கருதப்படலாயிற்று; ஆகவே, ஹஜ் ரத் அபூபக்ர் அவர்களும் அந்தக் குருமகானின் படுக்கை யருகிலேயே பல நாள்வரை காத்துக் கொண் டிருந்ததால் அன்றைத் தினம் அம்மகானுபாவரின் அனுமதி பெற்றுக்கொண்டு, தாங்கள் வசித்துவந்த மதீனாவின் மற்றொரு பகுதியாகிய ஸுன்ஹுக்குச் சென்றிருந்தார்கள். ஆனால், அன்றுபகல் மத்தியான் னத்திற்கு மேல் நபிகள்நாதர்ஸல் பரிபூரண தசையை யடைந்து விட்டார்க ளென்ற செய்தி வெளிவந்த பொழுது, அதனை அதிகமான ஜனங்கள் நம்பக்கூடா தவர்க ளாகவே இருந்து வந்தார்கள். நபிகள்பிரான் தங்கள்மீது வைத்திருந்த அத்தியந்த விசுவாசத்தினால் அவர்கள் காலகதியால் தேகவியோகமாய் விட்டார்க ளென்றே அவர்கள் முதலில் நம்பத் துணிந்தனரில்லை. அந்த அரபிகள் தங்கள் மாதா பிதாவின்பால் வைத்திருந்த அபிமானத்தைப் பார்க்கினும் ஆயிர மாயிரம் மடங்கு அதிகமான அன்பையும் அபி மானத்தையும் தங்களுடைய நாயனிடத்தில் காட்டி வந்தார்கள். அல்லா(ஹ்)வுக்கு அடுத்த படியிலே ரசூல் நாயகம்ஸல் அவர்களையே வைத்து விசுவாசித்து வந்தார்

கள். சுமார் கால் நூற்ருண்டின் கால அளவுக்குள்ளே இப்பூவுலகு முழுதையுமே ஆணிவேருடன் அசையுமாறு செய்து விட்ட அத்துணைப் பெரிய அதிபராக்கிரம சாலியாகிய பெரு மேதாவி என்னப்படும் ஒரு சிறந்த நபியாயிருந்தவர் மற்றைச் சாதாரண மக்களைப் போலே எவ்வாறு இறந்துபடுதல் கூடுமென்று ஆச்சரியமுற்று நின்ருர்கள். நம் நபிகள் திலகமவர்கள் 1400 ஆண்டுகளுக்குமுன் அவதரிக்காமல் அதற்கு முற்பட்ட பண்டைக்காலப் பௌராணிக நாட்களிலே தோன்றியிருப்பார்களாயின், அல்லது மற்றும் பலரைப்போல நம் ரசூல்நாயகம் அவர்களும் பகுத்தறிவின் பயனைத் தங்களுடைய திருவுபதேசத்தில் அதிகமாகச் சேர்த்து உபயோகிக்காமல் பழம் பாமரத்தன்மையுள்ள பண்டைக்காலப் புராதன மௌட்டியத்தையே அதிகம் எடுத்தாண்டிருப்பார்களாயின், அவர்களை யெல்லாம் உயர்த்தியதே போலத்தான் இவர்களையும் உலகோர் ஒரு தெய்வமென்ருே, அல்லது தெய்வ அவதாரமென்ருேதான் செய்திருப்பார்கள். ஆனுல், அதற்கு மாருக, " நானும் உங்களைப் போன்ற ஒரு சாதாரண மனிதனே ! " என்னும் குர்ஆனின் திரு வாக்கியத்தையே நபீயுல்லாஹ் அவர்கள் அடிக்கடி கூறிவருவார்கள். ஆயினும், அவர்கள் பரிபூரண தசையடைந்த அவ்வேளையில் அரபிகள் அதனை நம்பத் துணிந்தனரில்லை ; அவர்களுடைய ஆவியானது சிறிது மயக்கம் மட்டுமே அடைந்திருத்தல் கூடுமென்றே பலர் வாது செய்து நின்ருர்கள்.

நபிகள்திலகம் நிர்யாண மடைந்து விட்டார்களென்னும் செய்தியானது ஒருசில நயவஞ்சகர்களாலேதாம் பொய்யாகப் பரத்தப்பட்டிருத்தல் கூடு

மென் றெண்ணிக்கொண்டு, ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் தங்கள் வாளாயுத்ததை உருவிக்கொண்டு வந்து, மதீனவின் மஸ்ஜிதில் நின்றுகொண்டு, ஒருவரும் அத்தகைய வதந்தியை வெளியில் பரவவிடக்கூடாதென்று பயமுறுத்தாட்டி நின்றூர்கள். அவ்வேளையில் அபூபக்ர் சித்தீக்ரலி அவர்கள் இச் செய்தியைக் கேள்வியுற்று, அதிக பரபரப்புடனே ஓடிவந்து, ஆயிஷாவின்ரலி அறைக்குள் நேரே சென்று நுழைந்தார்கள்.

உமரின் (ரலி) ஆக்ஷேபணை

என்னெனின், அவ்விடத்திலேதான் நபிகள் நாயகம்ஸல் தங்கள் பரிபூரண தசையின்போழ்து வியாதியுற்றுப் படுக்கையி லிருந்தார்கள். ஆங்குச் சென்ற ஹஜ்ரத் அபூபக்ர்ரலி தங்கள் குருமகான் மூர்ச்சை யடைந்திலலை யென்றும், மெய்யாகவே அவர்களது ஆவி ஆண்டவன் சன்னிதானம் சென்று சேர்ந்து விட்ட தென்றும் செவ்வனே சந்தேகமறத் தெளிந்துகொண்டு விட்டார்கள். அப்பொழுது இந்தப் பெரியார் அம் மகானுபாவரின் நெற்றியை முத்தமிட்டு, "என் தாய் தந்தையர் தங்களுக்குப் பலியாகக்கடவர். அல்லாஹ்வின்மீது பிரமாணமாக, தங்களுக்கு அல்லாஹ் இரண்டுமுறை மரணத்தைத் தந்தருளப் போவதில்லை. இம் மரணத்தை இதோ சுவைத்து விட்டீர்கள். இதற்குப் பின், தங்களுக்கு எப்பொழுதும் மரணமென்பதே வந்தடுக்கப் போவதில்லை," என்று கூறித் தங்களுடைய துக்கசாகரத்தை வெளியிட்டுக் காண்பித்தார்கள். அதன்பின்பு ஹஜ்ரத்அபூபக்ர் அவர்கள் மஸ்ஜிதுக்குள்ளேவந்து, ஆங்குக் குழுமியிருந்தவர்களை நோக்கிப் பிரமாணத்துடனே ரசூல்ஸல் அவர்கள் மரணமடையவில்லை யென்று கூறிக்கொண் டிருந்த ஹஜ்ரத்

உமரைரலி அமரும்படி செய்து, பின்வருமாறு கூறி, ஒரு சிறந்த உபன்யாசம் புரிந்தார்கள் :

"ஈண்டுக் குழுமிநிற்கும் முஸ்லிம் சோதரர்காள்! நீங்க ளெல்லீரும் உற்றுக்கேட்கக் கடவீர்களாக. நீங்கள் வணங்கி வந்தது முஹம்மதைக்ஸல் குறித்தே இருக்குமாயின், அந்த முஹம்மதானவர்ஸல் நிச்சயமாக இறந்துபோய் விட்டா ரென்றே தெரிந்து கொள்ளக் கடவீர்கள். ஆனால், நீங்கள் வணங்கிவருவது அல்லாஹுத் தஆலாவைக் குறித்தே இருக்குமாயின், அந்த நித்தியத்துவனாகிய ஆண்டவன் மட்டும் இறக்கவே யில்லையென்றும், அவன் என்றென்றும் பிழைத்தே இருக்கிறான் என்றும் தெரிந்துகொள்ளக் கடவீர்கள்." இன்னம் இப்பெரியார், நம் நபிகள் பிரானுக்கு முன்னே தோன்றியிருந்த எல்லா நபிமார்களும் நிர்யாணமடைந்தே போய்விட்டதே போலத்தான் இந்த நபி பிரானும் நிர்யாணமடைந்தே தீரவேண்டு மென்று வற்புறுத்திக் கூறிக்கொண் டிருக்கும் குர்ஆன் ஷரீபிலுள்ள இத் திருவாக்கியத்தையும் ஓதிக் காண்பித்தார்கள்: "முஹம்மத்ஸல் ஒரு ரஸூலைப் பார்க்கினும் வேறொன்று மில்லை; இவருக்கு முன்னே யிருந்த ரஸூல்மார்க ளெல்லாரும் காலஞ் சென்றே போய் விட்டார்கள்" (3:143). இவ்வாறு ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் உறுத்திக் கூறியபின்னர் ஆங்குக் கூடியிருந்த அரபிகளெல்லாரும் அதை மெய்யென்க் கொண்டு, நபிகள்நாயகம்ஸல் தேகவியோகமாய்ப் போய்விட்டது குறித்து அதிகமாகக் கிலேச முற்றுப் பரபரப்புங் கொண்டுவிட்டார்கள்.

இஸ்லாமியகுடியரசு

இஸ்லாமிய குடியரசானது அரப்நாட்டில் நிறுவப் பட்டதன் பின்னர் நபிகள் திலகமவர்கள் பத்து வருட காலம் வரையேதான் அதன் தலைமைப் பதவியை நிர்வகித்து வந்தார்கள். அத்துணைக் குறுகிய கால அளவிற்குள்ளே அரப்நாட்டாரின் குணுதிசயம் முற்றும் தலைகீழாக மாறிச் சீர்திருத்த உச்சத்தை அடைந்துவிட்டது. அத்தேசத்தி லிருந்த ஒவ்வொரு மாகாணத்திற்கும் பிரதிநிதிகள் அனுப்பப்பட்டு வந்ததனுல், அவர்கள் அங்ஙனமே சென்று, ஆங்காங் கிருந்துவந்த உள்நாட்டுக் கலகங்களை யெல்லாம் ஒழித்து விட்டார்கள்; இதனுல் அவர்களுக்குள்ளே வேரூன்றிக் கிடந்த பழிவாங்கும் குணமானது அடியோடு மறைந்தே போய் விட்டது. தேசமுழுவதும் சாந்தியும் சமாதானமும் குடிகொண்டு விட்டதனுல், உள்நாட்டு வெளிநாட்டு வர்த்தகங்க ளெல்லாமும் நன்கு தழைத்தோங்கத் தலைப்பட்டுவிட்டன. அந்நாடு முழுதும் மாதர்நீதி யென்பது அதிகமதிகம் கொண்டாடப் பட்டே வந்தது. அந்த அரபிகளுடைய குணமும், நடையுடை நாகரிகமும் முழுவதும் சீர்திருத்த மடைந்துவிட்டன. ஆடுமாடுகளே போலத் திரிந்தவர்க ளெல்லாரும் அமைதியுடன் வீடடங்கி வாழத் தொடங்கினர். வியபிசாரமும் மதுபானமும் வேரோடு கல்லி யெறியப்பட்டன; கொலையும் களவும் சூதும் வாதும் அடியோ டொழிந்தன. அன்றுமுதல் அன்னியர்வீட்டு ஆண்களும் பெண்களும் ஒருவரோடொருவர் தடையின்றிக் கலந்துறவாடல் என்னும் துர்க்குணமானது அறவே அந்நாட்டைவிட்டு அகற்றப்பட்டுப் போய்விட்டது.

நபிகள் நிர்யாணத்தால் மதீனாவில் பரபரப்பு

ஆனால், நபிகள் திலகத்தின் நிர்யாணத்தைக் கேள்வியுற்ற வுடனே அம் முஸ்லிம்களின் நிலைமையானது தாயற்ற சேயைப்போலும், நீரற்ற மீனைப் போலுமேதான் காணப்பட்டு வந்ததென்னலாம். அதுபோழ்து கிலேசமடைந்திருந்த முஸ்லிம்களுக்கு வேண்டிய தைரியத்தை அளிக்கவும், புதிதாக ஏற்பட்டுள்ள இஸ்லாமிய குடியரசு நிலைகுலைந்து போகாதிருக்கச் செய்யவும் ஒரு தலைவர் வேண்டப்படுவது ஆவசியகமாகவே காணப்பட்டு வந்தது. நபி பெருமானால்[ஸல்] நிர்மாணிக்கப்பட்ட முஸ்லிம் ஜனநாயக ராஜ்ஜியம் குடியரசுக் கொள்கையினையே முழுக்க முழுக்கத் தனக்கு அடிப்படையாகக் கொண்டிருந்தமையால், நம் ரஸூல்நாயகம் அவர்கள் ஒருவரையும் தங்களுக்குப் பின்னே கலீபாவாக (பிரதிநிதியாக) இருக்குமாறு நியமித்துவிட்டுச் செல்லவில்லை. அந்தத் தேர்தல் வேலையைத் தங்களுடைய தோழர்களே தங்களுக்குப்பின் பூர்த்தி செய்து கொள்ளட்டுமென்று வெறுமையாக விட்டுச் சென்றுவிட்டார்கள். எனினும், தங்களுக்குப்பின்னே தங்களுடைய ஸ்தானத்தில் பிரதிநிதியாக இருத்தற்குரிய யோக்கிதை யுடையவர் ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக்[ரலி] அவர்களே என்பதை மட்டும் பலவாற்றானும் தங்களுடைய ஜீவதசையில் குறிப்பிட்டுக் காட்டியிருந்தார்கள்.

மரணமடைந்த பின்பு நாயகமவர்களுடைய மேன்மையான திருமேனியை அடக்கம் செய்ய வேண்டிய காரியாதிகளை ஹஜ்ரத் அபூபக்ரும், ஹஜ்ரத் உமரும் அதுசமயம் மதீனாவின் மஸ்ஜிதிலேயே கவனித்துக் கொண்டிருந்தபோழ்து, அன்ஸார்களுள்ளிருந்து ஒரு

வர் ஓடிவந்து, மதீனாவாசிகளால் ஆலோசனைச் சபா மண்டபமாக உபயோகிக்கப்பட்டு வந்த 'தக்கீபெ பனீ ஸாஇதா' என்னுமிடத்தில் அன்ஸார்கள் கூடிக் கொண்டு, நபிகள் திலகத்திற்குப் பின்வரப்போகும் பிரதிநிதியை ஏற்படுத்துவான் வேண்டி விவாதித்துக் கொண்டிருந்தார்களென்று தெரியப்படுத்துவாராயினர்.

முஹாஜிரீன்களும் அன்ஸார்களும்

அதுசமயம் மதீனாவில் வாழ்ந்துவந்த முஸ்லிம்கள் இருவர்க்கமாகக் காணப்பட்டு வந்தார்கள்: மக்காவை விட்டுப் புறப்பட்டு வந்து மதீனாவில் குடியேறி யிருந்தவர்கள் முஹாஜிரீன்களென்றும், மதீனாவிலேயே வாழ்ந்து வந்து நபிகள் திலகத்தைத் தங்களுடன் வந்து வசித்துவருமாறு அழைத்துக்கொண்டு வந்தவர்கள் அன்ஸார்கள் (உதவி புரிவார்கள்) என்றும் அழைக்கப்பட்டு வந்தார்கள். முஹாஜிரீன்களுள் பெரும்பான்மையோர் குறைஷி வம்சத்தைச் சார்ந்தவர்களாகவே மிளிர்ந்து வந்தார்கள்; அவ் வர்க்கத்தினர் கஃபத்துல்லாஹ்வின் பாதுகாவலர்களாக இருந்து வந்ததன் காரணத்தால் அந்த அரபுநாடு முழுவதுமே உயர்குலப் பெருமக்களாய்க் கருதப்பட்டு வந்தார்கள். அன்ஸார்கள், அவ்ஸ் என்றும், கஜ்ரஜ் என்றும் வழங்கப்பட்டு வந்த இரண்டு மதீனாவின் வர்க்கங்களுக் குரியவர்களாய் இருந்துவந்தார்கள்.

அபூபக்ரும் உமரும் விரைந்து செல்லல்

மேற்கூறியவாறு சமாசாரம் வந்து அபூபக்ர்ரலி உமர்ரலி அவர்களுடைய செவியில் பட்டபொழுது, அந்தவேளை மிக்க நெருக்கடியான வேளையாகவே காணப்பட்டு வந்தது. அன்ஸார்கள் தங்களுடைய சொந்

தத் தேர்தலால் ஒருவரை நபிபெருமானின்ஸல் பிரதி நிதியாகத் தேர்ந்தெடுத்து, அன்னவரை ஏனைமக்கள்களெல்லாரும் நிராகரித்துவிடக் கூடுமாயின், அப்பொழுதே இஸ்லாத்தின் ஒற்றுமையானது சுக்கல் சுக்கலாகச் சிதறுண்டு போய்விடுதல் கூடும். ஆதலின், அது போழ்து, ஒரு விநாடியும் காலஹரணம் செய்வது கூடாமையாய் இருந்தது; ஆகவே, அபூபக்ரும்ரலி உமரும்ரலி அக்கணமே புறப்பட்டு அன்ஸார்கள் கூடியிருந்த ஆலோசனை மண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அவ்வேளையில், ஸஅதுப்னு உ(ப்)பாதாரலி அப்பொழுதுதான் தமது பிரசங்கத்தை முடித்துவிட் டிருந்ததை அவ் விருவரும் கண்டு கொண்டார்கள்; இனி உடனே அன்ஸார்களெல்லாரும் அன்னாரையே நபிகள் திலகத்தின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்க வேண்டுவதுதான் பாக்கியாயிருந்தது. ஹஜ்ரத் அபூபக்ரும்ரலி உமரும்ரலி ஆங்குச் சென்றவுடன் அன்ஸார்களுள் ஒருவர் எழுந்து நின்று, தங்கள் ஆலோசனையை ஊர்ஜிதப்படுத்துவான் வேண்டி அன்ஸார்களின் உரிமைகளையும் அவர்களுடைய நற்குண நல்லொழுக்கங்களையும் குறித்து விஸ்தரித்துப் பேசத் துவக்கினர்.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் அந்த அன்ஸாருக்குப் பதில்கூறத் தொடங்கி, தீனுல் இஸ்லாத்திற்கு உழைத்து வந்திருக்கும் சேவையின் பெருமைகளனைத்தையும் சீர்தூக்கிப் பார்க்குமளவில் அன்ஸார்களின் பேருதவியைக் குறித்து ஒன்றும் குறைகூறுதற் கில்லையென்றே ஒத்துக்கொண்டார்கள். ஆனால், அரப் தேசவாசிகள் குறைஷியருக்கல்லாமல் மற்றெ

அரபிகளின் யதேச்சா பிரியம்

வருக்கும் கீழ்ப்படிந்து நடக்கத் துணியார்களென்றும் அங்குக் குழுமி யிருந்தவர்களுக்கு இப்பெரியார் ஞாபக மூட்டி வைத்தார். இஃதொரு மறுக்கமுடியாத உண்மையே யாகும். இதற்கு முன்னே ஒரு காலத்திலும் அரப்தேச மென்னப்படுவது எவனேனுமோர் அரசனுக்கு அடங்கிநடத்த லென்னும் விஷயத்தையே அறிந்திருந்ததில்லை. ஒவ்வொரு வர்க்கமும் ஒவ்வொரு பிரிவும் ஒன்றைவிட் டொன்று தனித்தனியாகவே இயங்கிக்கொண் டிருந்தது; அவர்களுள் ஒருவரும் மற்றொருவருடைய ஆதிக்கத்தின் கீழ் இருந்துவந்ததில்லை. அரப்நாட்டின் மத்தியஸ்தலமாய் விளங்கிவந்த கஃபத்துல்லா(ஹ்) வென்னும் பாரமார்த்திகப் பொதுஸ்தானத்தின் பாதுகாவலர்களாய்த் திகழ்ந்து வந்த பெருமை யனைத்தும் குறைஷி வம்சத்திற்கே பன்னெடுங் காலமாக உரித்தா யிருந்துவந்தமையால், அந்நாட்டு மக்கள்களனைவரும் அவர்கள்மாட்டே பெரிதும் மரியாதை காண்பித்து வந்தார்கள். முதன்முதலாக அந்த அரபிகள் இயற்கையாகவே ஓர் அரசனுக்கேனும், அல்லது ஒரு தலைவனுக்கேனும் கீழ்ப்படிந்து நடக்கக் கூடாதவர்களா யிருந்துவந்தார்கள்; யாதொரு விதமான கட்டுப்பாடு மில்லாது யதேச்சையாக வாழ்ந்துவருவதென்னும் எண்ணமானது இயற்கைக் குணத்தாலும் அவர்கள் வளர்ந்துவந்த சுபாவத்தாலும் அன்னாரின் இயற்கையுடனே ஐக்கியம் பெற்று, அவர்களுடைய பிறவிக் குணமாகவே முதிர்ந்து கிடந்தது; எனவே. ஒவ்வொரு வர்க்கமும் மற்றெல்லாவற்றைக் காட்டினும் தன்தனக்குரிய யதேச்சாப் பிரியத்தையே உயிரினும் சிறந்ததாக ஓம்பி வந்திருக்கிறது. ஆயின், அவர்க ளெல்லாரும்

மத்திப ஸ்தானத்திலுள்ள ஒருவகை அதிகாரத்திற்கு இணங்கி நடக்குமாறு சமாதானம் செய்துவைக்கப் படக் கூடியதாயிருப்பினும், அத்தகைய அதிகாரமானது குறைஷி குலத்திலல்லது வேறெவ்வித வர்க்கத் தாரிடமும் இருந்து வருவதை அவர்கள் ஒருசிறிதும் ஏற்றுக்கொள்ளத் துணியார்கள்; ஆனால், அந்தக் குறைஷியர்மாட்டு மட்டும் மரியாதை காட்டுவதென்பதை நெடுநாட்களா யுள்ள ஐதிகத்தால் தெரிந்து கொண்டிருந்தனர்; இன்னம் நபிகள் திலகம்ஸல் அவர்களும் அந்தக் குறைஷி குலத்திலேயே அவதரித்திருந்தார்களென்னும் பெருமையையும் நன்கு தெரிந்து கொண் டிருந்தார்கள்.

ஆதலின், ஹஜ்ரத் அபூபக்ரின் ராஜ்யதந்திர நிபுணத்துவத்தின் தீர்க்கதிருஷ்டியானது அக்கணமே அந்த நிலைமையில் உண்மையை நன்கு ணர்ந்து கொண்டு விட்டதனால், இப் பெரியார் அவ் விஷயங்களனைத்தையும் அன்ஸார்களின் குழுவினர் முன்னம் நன்கெடுத்து விளக்கிக் காண்பித்தார். அபூபக்ர்ரலி அது போழ்து அடைந்திருந்த வயதின் முதிர்ச்சியையும், இவருக்கு மக்காவிலும் மதீனாவிலும் இருந்துவந்த மேதை மரியாதை மிக்க செல்வாக்கையும் நோக்கி, இவர்பக்கலே முஸ்லிம்களின் நோக்கமானது திரும்பலாயிற்று. இவர் வயதில் பெரியவர்; புத்தியில் மேதாவி; மிக்க பொறுமையுடனே எதையும் நிதானித்துப் பார்க்கக் கூடிய மிதபுத்தி யுடையவர்; ஆதிமுதலே நபிகள்திலகத்துடன் ஒன்றித் திருந்தவர்; அம் மகானுபாவரின் அரசுநிலை யொழுக்கின் அந்தரங்கத்தை யெல்லாம் ஆழமாக அறிந்துகொண் டிருந்தவர். ஆகலான், "அர

அபூபக்ரின் (ரலி) அரிய அருகதை

சர் எங்களுள் ளிருப்பவராகவும், மந்திரி உங்களுள்ளுள்ளவராகவு மிருக்கட்டும்,'' என்று ஹஜ்ரத் அபூபக்ர் கூறினார்கள். ஆயினும், ஆங்குக் கூடியிருந்த அன்ஸார்க ளெல்லாரும் அப்பொழுது அங்குரித்திருந்த சங்கடத்தை ஒருவாறு ஒழித்துவைப்பான் வேண்டி அன்ஸொர்களைச் சேர்ந்த ஹஜ்ரத் ஹப்பாப் பின் முன்ஜிர் என்பார், தங்களுள்ளிருந்து ஒருவரையும் குறைஷி வம்சத்தவர்களுள் ளிருந்து ஒருவரையும் சேர்த்து இருவராகவே நபிபிரானின் பிரதிநிதிகளாய கலீபாக்களாய் ஏற்படுத்திவிடலா மென்று ஆலோசனை கூறினர்.

ஆனல், இப்படிச் செய்வதால் இஸ்லாத்தின் ஒற்மையே இரண்டாகப் பிளவுபட்டு விடுதல் கூடும். எனவே, நெடுநேரம்வரை அவர்களெல்லாரும் அவ் விஷயத்தை அலசிப்பார்த்ததன் பின்னே அன்ஸார்க ளெல்லாரும் ஹஜ்ரத் அபூபக்ரின் அபிப்பிராயத்திற்கே வந்து சேர்ந்தார்கள். அன்ஸார்களுக்குப் போதிய முறையில் மனத்திருப்தியை உண்டு பண்ணியதன் பின்பு, ஹஜ்ரத் சித்தீக்ரலி அவர்கள் கூட்டத்திலுள்ளவர்களை நோக்கி, "இதோ உபைதா பின் ஜர்ராஹ், உமர் பின் கத்தாப் நிற்கின்றார்கள். எனவே, தாங்களெல்லீரும் எவரை விரும்புகின்றீர்களோ அவரது கையில் பைஅத் (வாக் குடன்பாட்டைச்)செய்து கொள்ளுங்கள்,'' என்று கூறினர்கள். இதைச் செவி மடுத்ததும் ஹஜ்ரத் உமர் அவர்கள் உடனே முன் வந்து, ஹஜ்ரத் அபூபக்ரின் கையைப் பிடித்து, "தாங்கள் சொல்வது சரியன்று! நாங்களெல்லாம் தங்கள் கையிலேயே பைஅத் செய்கின்றோம். என்னெனின், தாங்களே எங்களுக்குத் தலைவராகவும், எங்களுள்

ளெல்லாம் மஹா சிறந்தவர்களாகவு மிருக்கின்றீர்கள். மேலும் ரசூலுல்லாஹ் அவர்கள், எங்களைக்காட்டி னும் தங்களையே மிகவும் மேலானவராய் மதித்துவந் திருக்கின்றார்கள்," என்று கூறிக் கொண்டே, ஹஜ்ரத் அபூபக்ரின் கரத்தில் விசுவாசப் பிரமாணத்தை (பைஅத்தை)ச் செய்தார்கள். அப்பொழுது அவர்க ளுள்ளிருந்து ஒருவர் எழுந்து நின்று, "அல்லாஹ்வின் திருப்திக்காகவும் அவனது விருப்பத்திற்குக் கட்டுப் பட்டுமே நாமனைவரும் நம்முடைய உடல் பொருள் ஆவியை யெல்லாம் இதுகாறும் தத்தம் செய்து வந்தி ருக்கிறோம்; எனவே, இப்பொழுது இஸ்லாத்தின் பரி சுத்த நன்மைக்கென வேண்டப்படும் போழ்து குறைஷியருக் குள்ளிருந்து ஒரு தலைவரைத் தேர்ந் தெடுத்துக் கொள்வதை நாங்கள் ஏற்றுக்கொள்ளுகி றோம். நபிகள் திலகத்தின் பக்கலிலே நாங்கள் உதவி புரிந்து நின்றதேபோல் இப்பொழுது அவர்களுடைய பிரதிநிதியின் பக்கலிலும் உதவிக்காக ஒன்றுசேர்ந்து நிற்கக்கடவோம்," என்று கூறிக்கொண்டே அன்னவர் ஹஜ்ரத் அபூபக்ரின் கரத்தைப் பிடித்து அன்னாருக்கே ராஜவிசுவாசப் பிரமாணமும் செய்து கொடுத்தார். அதன் பின்னர் அன்ஸார்க ளெல்லாரும் கூட்டம் கூட்டமாக முன் வந்து அபூபக்ரின்[ரலி] கரத்தைப் பிடித்து ராஜவிசுவாசப் பிரமாணம் செய்துகொடுத் தார்கள். ஸஅத் பின் உ(ப்)பாதா ஒருவரேதாம் அது சமயம் அப்படிப்பட்ட ராஜவிசுவாசப் பிரமாணம் செய்துகொடுக்காதவராக இருந்து விட்டார்.

ஹஜ்ரத் அபூபக்ரும் ஹஜ்ரத் உமரும் அதுசமயம் காட்டிய புத்திசாதுர்யத்தைக் கொண்டே, இஸ்லாத்

லதை அக்கணமே ஒழித்துவிடுமாறு பயமுறுத்தாட்டிக் கொண் டிருந்த ஆபத்தொன்று அதிக சாமர்த்தியமாகத் தடுக்கப் பட்டுப் போய்விட்டது ஒரு நல் லதிருஷ்டமே யாகும்.

பால்ய இஸ்லாம் தப்பியது

அதுபோழ்து மதீனா வாசிகள் கூடியிருந்த ஆலோசனை மண்டபத்திற்கு அவ்விருவரும் உடனே புறப்பட்டுச் சென்றிராமற் போயிருப்பார்க ளாயின், அவர்களுடைய ஹிருதயத்தின் கண்ணே அல்லா ஹுத் தஆலாவினால் அருளப் பட்டிருந்த நல்ல ஞான விகாசத்தைக் கொண்டு அவ்வமயம் நடந்துகொண் டிராமற் போயிருப்பார்க ளாயின், இன்னமும் ஆங் குக் குழுமியிருந்த அன்ஸார்கள் முன்னெல்லாம் தங் கள் கக்ஷியின் நியாயத்தை நன்கெடுத்து விளக்கிக் காட்டியிராமற் போயிருப்பார்க ளாயின், இஸ்லாம் மார்க்கம் அக்கணமே தனக்குள்ளேயே தடுக்கமுடி யாத பிள வொன்றினைப் பெற்றுக்கொண்டு போய், அவ்வாரம்ப காலத்திலேயே தனக்குரிய பலத்தை யெல்லாம் இழந்து, வெறும் சூன்யமாகவே க்ஷீணித் துப் போயிருக்கு மென்பதில் சிறிதும் சந்தேகம் வேண்டப்படுவ தின்று. ஒரு பக்கல் தங்கள் இரு லோகத்திற்கு முரிய குருமகா னவர்கள் பரிபூரண தசை யடைந்து ஓர் அறையினுள்ளே வாளா படுத்துக் கொண் டிருந்தார்கள். அம் மகானுபாவருக்காகவே சென்ற கால்நூற்றாண்டு காலமாக இப் பெரியார்க ளெல்லாம் தத்தமக் குரிய உடல் பொருள் ஆவி யனைத்தையும் பரித்தியாகம் பண்ணிவிட்டிருந்தார்கள்; அப்படிப்பட்ட மகாநபியின் பிரிவை அம்மக்கள் ஒரு விநாடியேனும் சகித்துக்கொண் டிருக்க மாட்டாத வராய். இருந்தனர். அந்தக் குருமகானாரின் திரு

மேனியை நல்லடக்கம் செய்துமுடிக்க வேண்டுவதும் ஓர் ஆவசியகக் கடமையாகவே அதுபொழுது காணப் பட்டு வந்தது.

மற்றொரு பக்கல் அதுசமயம் ஏற்பட விருந்த பிளவுகளினின்று தீனுல் இஸ்லாத்தைப் பத்திரப் படுத்திக் காப்பாற்றிவைக்க வேண்டுவதும் ஓர் அத்தி யாவசியக் கடமையாகவே காணப்பட்டு வந்தது; அவ்வமயம் அந்த ஆலோசனைச் சபாமண்டபத்தில் அன்ஸார்கள் அநேகமாகச் செய்துவிட்டிருந்த தவற் றைப்போன்ற தவறொன்றினை ஹஜ்ரத் அபூபக்ர் அவர் களும் அவசரப்பட்டுச் செய்திருப்பார்க ளாயின், இஸ்லாத்தின் ஆயுளானது அன்றே முடிவடைந்து முத்திரையும் போட்டுவிடப் பட்டிருக்கு மென்று ஒருவாறு கூறிமுடிக்கலாம். எனவேதான் அவ்விடத் திற்குச் சென்றுசேர வேண்டியிருந்தது அவ்விரு வருக்கும் ஒரு தேசீய இஸ்லாமிய கடமையாகப் புலப் பட்டு வந்தது. அது விஷயத்தில் எந்த விதமான தாமதமும் காட்ட முடியாதவாறு அத்துணைப்பெரிய அவசரமாகவும் அத்தியாவசியமாகவும் அந்தக் கடமை யென்பது காணப்பட்டுவந்தது. அதுபோழ்து நபிகள் திலகம் நிர்யாணமடைந்திருந்த இடத்திலிருக்க வேண் டுவதும் ஓர் அத்தியாவசியமாகவே இருந்துவந்தபோதி னும், அவ்விருவரும் அதனைக்கூடப் பொருட்படுத்தாது, ஒரு வினாடியும் தாமதம்செய்யாது அன்ஸார்கள் கூடி யிருந்த சபாமண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் அன்று தோன்றிய ஒரு பரமசங்கடமான அபாயத்தினின்று தீனுல் இஸ்லாத் தைப் பாதுகாத்து வைத்ததற்காகப் பின்வரும் சந்ததி

யார்கள் என்றென்றும் நன்றி செலுத்தப் பெரிதும் கடமைப்பட்டே இருந்துவருவார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தங்களுடைய மரணப்படுக்கையி லிருந்தபோழ்து ஹஜ்ரத் உமரைக் கூப்பிட்டு உபதேசம் புரிந்த வசனங்களே, அப்பெரியார் நபிகள் நாயகம் நிர்யாண மடைந்திருந்த இடத்தை விட்டு வெளியில் புறப்பட்டுச் சென்றதானது இஸ்லாத்தைப் பாதுகாத்து நன்கு நிலைநிறுத்த வேண்டுமென்னும் ஒரே நோக்கத்தினுலேதான் என்பதை நன்கு நிரூபித்துக் காட்டுகின்றன. இப்பெரியார் உமர்ரலி அவர்களைத் தங்கள் மரணப்படுக்கையின் அருகினில் வரவழைத்து, முதன்னுவுக்கு அனுப்ப வேண்டியிருந்த உதவிப் படைகளைக் குறித்து ஓர் ஆக்ஞையிட்டுக் காண்பித்தார்கள். இது குறித்து ஸர் வில்லியம் மூய்ர் துரையும் பின்வருமாறு தமது "தி கலீபேட்" என்னும் நூலில் வரைந்து வைத்திருக்கின்றார் :—

ஹஜ்ரத் அபூபக்ரின் கவலை

"அல் முதன்னுவுக்கு ஓர் உதவிப் படையை அழைத்துக் கொண்டு செல்லக்கடவீர். சிறிதும் தாமதிக்க வேண்டாம். இன்று எனக்கிருக்கும் தேகஸ்திதியை நோக்குங்கால் இன்றைப் பொழுதுக்குள்ளே யான் மரணமடைந்து விடுதல் கூடுமென்றே நினைக்கின்றேன்; அவ்வாருயின் நீவிர் இன்றுமாலை வரை இங்குத் தாமதித்திருக்க வேண்டாம்; சூரியாஸ்தமனம்வரை நான் மரணமடைய வில்லையாயின், நாளைச் சூரியோதயம்வரை இங்கிருக்க வேண்டாம். என்மாட்டு நீவிர் காண்பிக்கும் துக்கத்தினுல் இரக்ஷகனுக்குரிய இந்தக் கடமையினின்று நீவிர் தவிர்ந்து

விட வேண்டாம். நபிகள் திலகம்ஸல் மரணமடைந்த போழ்து யான் செய்தது இன்ன தென்பதை நீரே பார்த்துக்கொண் டிருந்தீர்; அந்த நபிபிரான்ஸல் நிர்யாணத்தைப் பார்க்கினும் வேறொரு பெரியதுக்கம் மன் பதைக்கு உண்டாகப்போவது ஒருபோதுமில்லை. அது பொழுது இரக்ஷகனுக்காகவும் அவனுடைய திருநபிக் காகவும் கச்சையை வரிந்து கட்டவொட்டாது அந்தத் துக்கம் என்னைத் தடுத்திருக்கு மாயின், தீனுல் இஸ்லாம் அப்பொழுது அதிகமான சங்கடத்தையே அடைந்திருக்கும்; புரட்சி இயக்கத்தின் பிழம்பானது நிச்சயமாகவே அதுசமயம் மதீனா நகரத்துள் கொளுத் தப்பட்டே இருந்தது."

எல்லா முஸ்லிம்களும் ஹஜ்ரத் அபூபக்ரின் கரத் தின்மீது ராஜவிசுவாசப் பிரமாணம்செய்துகொடுத்து முடிந்ததன் பின்னே ஆறுமாத காலம் வரை ஹஜ்ரத் அலீரலி அவர்கள்மட்டும் அவ்வா றொன்றும் ராஜவிசுவாசப் பிர மாணம் செய்துகொடுக்க வில்லை யென்று சில வதந்திகள் உலாவிக்கொண் டிருக்கின் றன. ஆயினும், இவ் வதந்திகளுக் கொன்றும் சரியான ஆதாரமென்பதே யில்லாது, எல்லாம் சந்தேகாஸ் பதத்துள்ளே ஆழ்ந்து கிடக்கின்றன. மேற்கூறிய செய்திகளுக்கு மாறாக, எல்லா முஸ்லிம்களும் ராஜவிசு வாசப் பிரமாணம் செய்துகொடுத்த அன்றே ஹஜ்ரத் அலீரலி அவர்களும் ராஜவிசுவாசப்பிரமாணம் செய்து கொடுத்து விட்டார்களென்று கூறக்கூடிய வேறுபல செய்திகளும் காணப்படாம லில்லை. அன்றைத்தினம் மதீனாவின் மஸ்ஜிதில் ராஜவிசுவாசப் பிரமாணத்திற் கென்று கூடியிருந்த பொதுக்கூட்டத்தில் ஹஜ்ரத்

ஹஜ்ரத் அலீயும்(ரலி) அபூபக்ரும்(ரலி)

அலீயும்[ரலி] ஜுபைரும்[ரலி] ஆஜிரில் இல்லையேபோல் காணப்படுகிறது. ஆதலின், அபூபக்ர்[ரலி] அவர்கள் 'தங்கள் விடுதியில் தங்கிவிட்ட அவ்விருவரையும் ஆள் விட்டனுப்பி வரவழைத்து, அவர்கள் அவ்வாறு வீட்டில் தங்கிவிட்டதனுல் தப்பபிப்பிராயம் ஏற்பட்டு இஸ்லாத்தின் பொதுஜன ஒற்றுமைக்குள்ளே பிளவும் தோன்றிவிடக் கூடுமென்று அறிவுறுத்திக் கூறினார்கள். அதுகேட்டு, உடனே அவ்விருவரும் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களையே கலீபாவாக ஏற்றுக் கொண்டு விட்டதாக அதற்குரிய ராஜவிசுவாசப் பிரமாணத்தையும் செய்துகொடுத்து முடித்தார்கள்.

நபிகள் நாயகத்தின் சொத்துக்களுக் கெல்லாம்—அப்படிப்பட்ட சொத்து ஏதேனும் இருந்திருக்குமாயின்—தங்களுக்கே வாரிஸ் கிரமத்தில் கிடைக்க வேண்டுமென்று ஹஜ்ரத் பாத்திமத்துஜ் ஜொஹ்ரா[ரலி] அவர்கள் விண்ணப்பித்துக் கொண்டதை ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் செவிமடுக்காது, அத்தகைய நபிமாரின் சொத்துக்கள் சிஷ்யர்களாகிய ஞானக் குழந்தைகளுக்கே உரியனவாகுமல்லது, சொந்தக் குழந்தைகளுக்கு உரித்தாவது கூடாதென்றே தீர்ப்புக்கூறி விட்டமையால், அந்தப் பெண் மணியாருக்கு மனவருத்தம் தோன்றி யிருந்ததேபோன்று அவர்களுடைய பிராணநாதராகிய ஹஜ்ரத் அலீ[ரலி] அவர்களுக்கும் அந்த கலீபாவின்மீது ஒருசிறிது மனத்தாங்கல் உண்டாயிருத்தல் கூடும்; இவ்வாறு ஏற்பட்டிருந்த ஒருசிறு அபிப்பிராய பேதத்தை வைத்துக் கொண்டே, கதை கட்டியவர்கள் ஹஜ்ரத் அலீ[ரலி] அவர்கள் கலீபாவின் கரத்தின் மீது ராஜவிசுவாசப் பிரமாணம் அரைவருஷ காலம்

வரை செய்துகொடுக்க வில்லையென்று சிருஷ்டித்து விட்டிருக்கலாம். ஆனால், நபிகள்திலகம்ஸல் நிர்யாண மடைந்து இரண்டு மாத காலத்திற்குள்ளே எதிரிகளின் படைகளால் மதீனா மாநகர் தாக்கப்பட்ட போழ்து, ஹஜ்ரத் அலீயும் ஜுபைரும் ஹஜ்ரத் அபூபக்ருடனே பூரண ராஜவிசுவாசத்துடன் ஒன்றித்து நின்று, இந்த கலீபாவின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, தற்காப்பிற்கு வேண்டிய எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டு நின்றிருக்கும் சரித்திரச் சான்றொன்றே, அவர்கள் ஆறுமாத காலம்வரை இந்த முதல்கலீபாவின் கரத்தின்மீது ராஜவிசுவாசப் பிரமாணம் செய்துகொடுக்க வில்லையென்று பரத்தப்பட்டிருக்கும் வதந்தியானது பொய்யென்று புறக்கணித்துத் தள்ளி விடக் கூடியதா யிருக்கின்றது.

ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதி லிருந்து, இஸ்லாத்தில் குடியரசுத் தலைமையை யார் வகிப்பதென்னும் ஒரு முக்கிய பிரச்சினை யானது அடியோடு தீர்க்கப்பட்டு விட்ட தென்றே கூறி முடிக்கலாம். இஸ்லாமிய ஜனநாயகக் கொள்கையின் பிரகாரம் அவ்வாரம்ப காலத்திலேயே பின் வரும் சந்ததியார்களுக்கு ஒரு வழிகாட்டியா யிருக்கும்பொருட்டுக் குடியரசுத் தலைவர் பொது மக்களாலே தாம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று உதஹரித்துக் காண்பிக்கப் பட்டிருக்கின்றது. எனினும், முதல் நான்கு சன்மார்க்க கலீபாக்களாய் விளங்கி வந்த குலபாயெராஷிதீன்களின் காலத்தோடு இந்த உயர்தரமான கொள்கையானது முஸ்லிம் ராஜ்ஜியத்தை விட்டு

*ஹஜ்ரத் அபூபக்ர் நியாய முறைப்படியே கலீபாவாக நியமனம்பெற்றிருக்கின்றார்*

ஒரேயடியாக ஒழிக்கப்பட்டே போய்விட்ட தென்னலாம். அந் நால்வருக்குப் பின்னே அரசப் பதவியென்பது பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பொறுத்த குடியரசாயில்லாது, பரம்பரைப் பாத்தியதையையே பின் பற்றி முடியரசு முறையாக மாறிப்போய் விட்டது. இஸ்லாத்தின் தேசிய விஷயங்களுக் குரிய, அதனை ஒன்று சேர்த்துப் பிணைத்து வைத்துக்கொண்டிருந்த கட்டுப்பாட்டையெல்லாம் தகர்த்தெறிதற்கு வேண்டிய பலஹீனமாகவே அந்தத் தனியரசு முறையானது வந்து லபித்துவிட்ட தென்னலாம்.

ஹஜ்ரத் அபூபக்ரின் கரத்தின் மீது ராஜவிசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்கப்பட்ட விஷயம் "உடனே திடீரென்று" தோன்றி விட்டதென்று கூறப்பட்டு வரும் செய்திகளைக் கண்டு நாம் ஏமாந்து போகத் தேவையில்லை. "உடனே திடீரென்று" என்று வரையப்பட் டிருக்கும் வார்த்தைகளைக் கண்டு, ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் நியாய முறைப்படி தேர்ந்தெடுக்கப் படவில்லை யென்று தீர்மானம் செய்வது ஒரு தகாத காரியமே யாகும். மேலே கூறிய வண்ணம் தேர்தல் தொழிலென்பது முழுவியவகார முறைப்படியே விவாதிக்கப்பட்டு, எல்லாக் கட்சிக்குமுரிய சாதக பாதகங்க ளெல்லாம் நன்கு பரிசீலனை செய்யப்பட்டே இறுதியாகத்தான் எல்லாருடைய ஏகோபித்த அபிப்பிராயத்தின் மீதே இப்பெரியார் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருந்தார். ஆதலின், மேற்கூறப்பட்ட வார்த்தைகள், அந்தத் தேர்தலானது எதிர்பாராவண்ணம் திடும்பிரவேசமாகத் தோன்றி விட்ட தென்பதை மட்டுமேதான் விளக்கிக் காட்டுகின்றன. நியாய முறைப்படி அதுசமயம் முதன் முத

லாகக் கவனிக்கப் பட்டிருக்க வேண்டிய காரியம் நபி கள்திலகத்தின் திருமேனியானது நல்லடக்கம் செய்யப் பட வேண்டியதாகவே இருந்திருக்கின்றது; ஆனால், அன்ஸார்கள் தங்கள் ஆலோசனை மண்டபத்தில் கூடிக்கொண்டு தனியாக ஒரு காரியத்தைச் செய்து முடித்துவிடத் தீர்மானித்து விட்டதனால், கலீபாவைத் தேர்ந்தெடுப்பதென்னும் அக்காரியமானது முதன்மை யாக மாறிப்போய் விட்டிருக்கின்றது; இந்த முறை யிலேதான் அந்தத் தேர்தல் விஷயமானது அம் முஸ் லிம்களுக் கெல்லாம் எதிர்பாராமல் நிகழ்ந்துவிட்ட ஒரு திடுகூறான காரியமாகப் புலப்பட்டுவிட்டது.

விஷயம் அவ்வாறு திடுமென்று தோன்றிவிடாது பிறகு தக்க அவகாசத்தின் மீதே சர்வ முஸ்லிம்களின் சங்கமொன்று கூட்டப்பட்டிருந்த போதினும், அப் பொழுதுகூட அவர்களுடைய தேர்தலானது ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்களுக்கே தான் சாதகமாக முடிந்தி ருக்கும். என்னெனின், இப்பெரியார் அத்துணைப் பெரிய உத்தியோகத்திற்கு லாயிக் குள்ளவர்களாக அதுசமயம் இருந்துவந்தார்கள். கல்வி யறிவு, மதவிஷ யத்தில் பயபக்தி விசுவாசம், குர்ஆனின் போதனைக ளுக்குரிய அந்தரங்கத் தாத்பரியத்தை ஆழச் சிந்தித் துப் பார்த்தல், மகா உயரிய சற்குணம் ஆகியவற்றி லெல்லாம் ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்கள் மற்றெல்லாத் தோழர்களைப் பார்க்கினும் தலை சிறந்தே விளங்கி வந் தார்கள். நபிகள்திலகம் ஸல் அவர்களுங்கூடத் தங்கள் இறுதி வியாதியின்போழ்து, இப் பெரியாரையே பொதுஜனத் தொழுகைகளைத் தொழுது நடாத்தி வைக்குமாறு ஏற்பாடு செய்திருந்தார்கள். நபிகள் பிரான் ஸல் மக்காவைவிட்டு மதீனாவிற்கு ஹிஜ்ரத்

புறப்பட்டக்கால், தங்களுடன் கூடத் துணையா யிருப்பதற்கு இப் பெரியாரையே பொறுக்கி யெடுத்துக் கொண்டதி லிருந்து, இந்த கலீபாவானவர் மனிதர்களைப்பற்றியும் மற்ற விஷயாதிகளைப்பற்றியும் அடைந்திருந்த அனுபவமும், இவர்களுடைய புத்திதீக்ஷண்யமும், சக்தியும் சாமர்த்தியமும் நபிகள்நாயகத்திடமிருந்தே ஒரு நல்ல யோக்கியதாம்ச பத்திரத்தைப் பெற்றுக்கொண் டிருந்ததென்று கூறி முடிக்கலாம்.

ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் கலீபாவின் பட்டத்தை ஏற்றுக்கொண்டவுடனே இவர்கள் செய்யத் தொடங்கிய முதற் காரியமானது, உஸாமாவின்[ரலி] தலைமையின் கீழ் ஒரு படையெடுப்பை ஷாம்தேச எல்லையை நோக்கி அனுப்புவதாகவே இருந்துவந்தது. நபிகள்திலகம்[ஸல்] தங்களுடைய தேக வியோகத்திற்குச் சற்றுமுன்னே ஷாம்தேசத்தின் தலைநகராய் விளங்கிய திமஷ்க்நகரிலிருந்துவந்த கிறிஸ்தவச் சிற்றரசனிடம் ஒரு படையை அனுப்பத் துணிந்து, அவன் தன்பால் அனுப்பப்பட்டிருந்த ஹாரிஸ்பின் உமைர் இஜ்தி என்னும் முஸ்லிம் தூதரை மூத்தாவென்னும் ஸ்தலத்தில் ஏன் அக்கிரமமாகக் கொலைசெய்து விட்டா னென்பதற்குச் சமாதானம் கேட்டு, அதற்கு வேண்டிய பரிகாரத்தைப் பெற்றுக்கொண்டு வரும்படி கட்டளையிட்டிருந்தார்கள். அன்றியும், இந்த ஹஜ்ரத் உஸாமாவின் தந்தையும் நாயகத்தின் அத்தியந்த உண்மை ஊழியர்களுள் ளொருவருமான, ஹஜ்ரத் ஜைத் பின் ஹாரிதாவும் இங்குத்தான் ஷஹீதானார்கள். இன்னமும், உரோமா புரியின் ராஜ்ஜியாதிகாரத்திற்கு உட்பட்

**ஹிஜ்ரீ 11-இல் (கி பி 632) உஸாமாவின் படையெடுப்பு சிரியாவுக்கனுப்பப்படுதல்**

டிருந்த அந்தச் சிரியாநாட்டுக் கிறிஸ்தவ மாகாணமானது அரப் நாட்டின் எல்லைப்புறத்தில் வசித்துவந்த சமாதான வாழ்க்கையுள்ள முஸ்லிம்களுக்கு அடிக்கடி இன்னல்களையே அதிகம் விளைத்துவந்து கொண்டிருந்தது ; இத் தொந்தரையையும் ஒருவாறு அடக்கி வைப்பான் வேண்டியே அவ்வாறு நபிகள்திலகம்ஸல் தங்கள் இறுதி நாட்களில் ஒரு படையை அனுப்பி வைக்க முற்பட்டு விட்டார்கள். அதன் தலைமைப் பதவியானது உஸாமா வென்னும் இருபதே பிராய முள்ள இந்த வாலிபர்வயமே ஒப்படைக்கப் பட்டிருந்தது.

நபிகள்நாயகம்ஸல் உஸாமாவின் தலைமையின் கீழே ஒரு படையெடுப்பை அனுப்பத் தொடங்கிய போழ்து, கீர்த்திப் பிரதாபம் பெரிதும் பெற்றுவிளங்கிய முஹாஜிரீன்களான சஹாபாக்க ளனேகர் அவ்வாலிபச் சேனைவீரரின் கீழேயே யிருந்து ஊழியம் புரியுமாறு கட்டளையிடப்பெற் றிருந்தார்கள். இவ்வாறு செய்ததில், இஸ்லாத்தின் அஸ்திபாரமாய் விளங்கிவரும் உயரிய கொள்கையாகிய சமத்துவமென்னும் தத்துவத்தை எம்பிரான்ஸல் அவர்கள் பிரத்தியக்ஷபூர்வமாகவே செய்துகாண்பித் திருக்கிறார்கள். ஜைதென்பார் ஓர் அடிமையின் குமாரராக விளங்கிவந்தார். ஆயினும், இஸ்லாத்தின் வட்டத்திற்குள்ளே அவரும் மற்றெல்லா முஸ்லிம்களையும் போலவேதான் சரிசமான சமத்துவ அந்தஸ்தை வகித்துவரலாயினர்; அபூபக்ர்ரலி உமர்ரலி போன்ற குறைஷி குலத்தின் மேன்மக்க ளெல்லாரும் அந்த ஜைதாவின் படையெடுப்பின் போழ்து ஜைதின் தலைமையின் கீழேயே

யிருந்து தொழில் புரியுமாறு நபிகட் டிலகத்தால் ஆணையிடப்பட் டிருந்தார்கள்.

நபிகள்பெருமான்ஸல் உஸாமாவின் படையெடுப்பிற்கு வேண்டிய சகல காரியங்களையும் தாங்களே செய்துமுடித்து, அவருடைய யுத்தக் கொடியையும் தங்கள் திருக்கரங்கொண்டே தையார் செய்தனுப்பினார்கள். அந்தக் குருமகானது கட்டளைக் கிணங்க உஸாமாவும் சிரியாவுக்குப் புறப்படத் தையாராகி, மதீனாவிற்கு வெளியிற் சென்று பாடிவீடும் செய்து கொண் டிருந்தார்; ஆனால், அன்னவர் புறப்படு முன்னரே நபிகள் நாதரின் சரீரசுகமானது அதிகமாகப் பாதிக்கப்பட்டே வந்தது. ஆகவே, உஸாமாவும் தமது படையெடுப்பைச் சிறிது பிற்படுத்த வேண்டியதாயிற்று. அதன்பின்பு எம்பிரான்ஸல் அவர்களும் தேகவியோக மாய்ப்போய், ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களும் கலீபாவின் ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார்கள். எனவே, அந்த இஸ்லாமிய குடியரசின் தலைமைப் பதவியை ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் ஏற்றுக்கொண்டவுடனே தங்கள் குருமகானின் இறுதிக் கட்டளையை நிறைவேற்றி வைக்கத் தொடங்கி, உஸாமாவை ஷாம்தேச எல்லையை நோக்கிப் புறப்பட்டுச் செல்லச் சொன்னார்கள். அதுசமயம் அரப்நாடு முழுவதும் ஒருவிதமான கொந்தளிப்பை அடைந்து நிலைதடுமாறி நின்று கொண் டிருந்தது. நபிகள் நாயகத்தின் இறுதி வாழ்க்கையின் போழ்து, பனூ ஹனீபா வென்னும் எமன்தேச வாசிகள், பனூ அஸத்கள் ஆகிய வர்க்கங்களிலிருந்து முஸைலமா, அஸ்வத், துலைஹா போன்ற பொய்த் தீர்க்கதரிசிகள் தோன்றி, அரப்தேசத்தின்

மக்களுக்கிடையே குழப்பத்தை யுண்டுபண்ணி, அவர்களையெல்லாம் தவருன வழியில் செலுத்தத் தொடங்கி விட்டார்கள். அப்படிப்பட்ட வேளையில் நபிகள் திலகம் நிர்யாண மடைந்துவிட்ட செய்தி அத்தேச முழுவதும் காட்டுத்தீயே போல் பரவத் தலைப்பட்டவுடனே, மேற்கூறிய பொய்த் திர்க்கதரிசிகளின் தலைமையின் கீழே அநேக வர்க்கத்தார்கள் கிளம்பி, மதீனுவி லிருந்துவந்த மத்திய ராஜ்யத்திற்கு விரோதமாகக் கலகமும் செய்யத் தலைப்பட்டு விட்டார்கள். அவர்களுடைய கலகச் சார்பாயுள்ள வீண் புரளிகளெல்லாம் அந்நாடு முழுவதும் பரவிவிடவே, தலைநகராகிய மதீனுவுங்கூட எந்த நேரத்திலும் தாக்கப் படுதல் கூடுமென்னும் அச்சமானது அதிகம் காணப் பட்டே வந்தது.

**பொது மக்கள் மொண மொணத்தல்**

இப்படிப்பட்ட வேளையிலே சிரியா நாட்டை நோக்கி ஒரு படையெடுப்பை அனுப்புவ தென்பது கனவிலும் கருதொணுத காரியமாகவே காணப்பட்டு வந்ததென்னலாம். ஆதலின், நபிகள் திலகத்தின் தோழர்கள் கலீபா அவர்களை நெருங்கி, அந்தப் படையெடுப்பை ரத்துசெய்து விடுமாறு வேண்டிக் கொண்டார்கள். மதீனுவிலிருந்த ஒரு பெரும் சைன்னியமும் அயல் நாட்டுக்கு அனுப்பப்பட்டு விட்டதென்னும் செய்தியைச் செவியுற்ருல், கலக கோஷ்டியார் தங்கள் தலைநகர்மீது படையெடுத்து வந்து கிலாபத் ராஜ்ஜியத்தையே அடியோடு அழித்துவிடக் கூடுமென்று அந்தத் தோழர்களெல்லாரும் விவாதிக்கத் தலைப்பட்டார்கள். அது கேட்டு, ஹஜ்ரத் அபூபக்ர் [ரலி] அவர்கள், “அல்லாஹ்வின் ரசூல் அவர்களாலேயே

தையார் செய்தனுப்பப் பட்ட சைன்னியத்தைத் தடைப்படுத்துவதற்கு யான் யார்? என்ன வந்தாலும் சரிதான்! மதீனமாநகர் தப்பிப் பிழைக்கட்டும்; அல்லது எதிரிகள் கைவயமே ஆய்விடட்டும்! அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, மதீன நகரிலுள்ள மனிதர்களெல்லாம் மாண்டுபோய், காட்டிலுள்ள மிருகங்கள் என் கால்களை வந்து கௌவி இழுக்கட்டும்; இந்த கிலாபத் ராஜ்ஜியமானது இருக்கட்டும்; அல்லது இல்லாமலொழியட்டும்! எஃது எவ்வாறாயினும், நபிகள் திலகத்தின் இறுதிக் கட்டளையானது அப்படியே நிறைவேற்றப் பட்டுத்தானாகவேண்டும்!" என்று அழுத்தமாகக் கூறினார்கள். அதன்பின்பு உமர்[ரலி] அவர்கள் மூலமாக மற்றெல்லாத் தோழர்களும் கலீபாவினிடம் தூதனுப்பி, உஸாமா வென்பவர் இளம் பிராயத்தினராய் இருந்து வந்ததனால், அத்துணைப்பெரியபடையெடுப்பைஅனுபவமிக்கமற்றொருவரிடமே ஒப்படைப்பதுதான் சாலவும் சிறந்ததாகுமென்று வேண்டிக் கொண்டார்கள். அது கேட்டும், இந்த கலீபாவானவர், "நபிகள் நாயகம்[ஸல்] அவர்களாலேயே தளபதியாக நியமிக்கப்பட்டிருக்கும் ஒருவரை யான் எவ்வாறு நீக்கிவைக்க முடியும்?" என்று அதிக அழுத்தமாக விடைகூறி மறுத்து விட்டார்கள்.

இறுதியாக அந்த உஸாமாவின் தலைமையின் கீழே ஒரு சைன்னியம் புறப்பட்டுவிட்டது; ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களும் கால்நடையாகச் சென்று, அவர்களை யெல்லாம் வழியனுப்பப் புறப்பட்டார்கள். அது சமயம் உஸமா வென்பார் அசுவத்தின் மீது ஆரோகணித்தவராய் இருந்து வந்ததனால், அவர்

**அபூபக்ரின்(ரலி) இனிய உபதேசம்**

கலீபாவை நோக்கி, இவர்களுக்காக ஓர் அசுவத்தைக் கொணர்ந்து அதன்மீது இப்பெரியார் ஏறிக்கொண்டு வர வேண்டும்; இன்றேல் தம்மையும் இறங்கி நடக்குமாறு அனுமதியளித்து, இந்த கலீபாவுடனே பாதசாரியாக நடத்திக்கொண்டு போகவேண்டு மென்று பலமுறையும் வேண்டிக்கொண்டார். ஆயினும், அதனுல் பயனென்றும் விளைந்து விடவில்லை. இறுதியிலே இப்பெரியார் அந்தத் தளபதியையும் ஏனைச் சைன்னியங்களையும் நோக்கி, இவ்வாறு நல்லுபதேசம் புரிந்தருளினுர்கள் :—

"இதோ பாருங்கள்! நீங்கள் எப்போதும் நம்பிக்கைத் துரோகம் புரியாதீர்கள்; உண்மையை விட்டு ஒரணுவும் அப்பாற் சென்று விடாதீர்கள். எவரையும் சித்திரவதை செய்யாதீர்கள். இன்னம் வயோதிகர்களையும், பெண்மணிகளையும், சிசுக்களையும் கொலை புரியாதீர்கள். பேரீச்சமரங்களை வெட்டி வீழ்த்தாதீர்கள்; மேலும், அவற்றைத் தீயிட்டுக் கொளுத்தாதீர்கள்; இன்னமும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் ஆகார மளிக்கக்கூடிய எப்படிப்பட்ட பழமரங்களையும் பாழாக்கிவிடாதீர்கள். ஆகாரத்துக்கு அத்தியாவசியமா யிருந்தாலொழிய ஆடுமாடுகளையும் ஒட்டகங்களையும் வதை செய்யாதீர்கள். தலையினை முண்டனம் செய்துகொண்டிருக்கும் பாதிரிமார்கள் பணிந்துவரும் பக்ஷத்தில் அவர்களுக்கு இன்னல் விளைக்காமல் மன்னித்துவிடுவீர்களாக. இனி ஆண்டவன் திருநாமத்தைக்கொண்டு படையெடுத்துச் செல்லுங்கள்; எதிரிகளின் ஆயுதங்களினின்றும் கொள்ளை நோயினின்றும் ஆண்டவனே உங்களைக் காத்து ரக்ஷிக்கக்கடவன்!"

இவ்வாருக இந்த கலீபாவானவர் பல பொறுக்கி யெடுக்கபட்ட முஸ்லிம்களைத் தன்னகத்தே உள்ளடக்கிக் கொண்டிருந்த அந்தச் சைன்னியத்திற்கு உபதேசம் புரிந்து உத்தரவும் கொடுத் தனுப்பினுர்கள். ஆனுல், உமர்ரலி அவர்கள் மட்டும் கலீபாவுடனே மதிநுவின்கண் இருந்துவிட அனுமதி யளிக்கப் பெற்றுர்கள். ஆனுல், நபிகள்திலகம் அவர்களால் உமர்ரலி அவர்களும் உஸாமாவின் படையுடனே சேர்க்கப் பட்டிருந்ததனுல், கலீபாவானவர் அந்த உஸாமாவின் அனுமதி பெற்றே உமர்ரலி அவர்களைத் தங்களுடனே இருக்குமாறு செய்துகொண்டார்கள்.

ஷாம் (சிரியா) தேயத்துக்கு உஸாமாவின் தலைமையின்கீழே ஒரு படையெடுப்பானது அனுப்பப்பட்டு விட்டமையால், மதீனுவின் பாதுகாப்பு அதிகமான பலஹீனத்தாலே பாதிக்கப்பட்டு வந்ததென்னலாம். அரப் நாடு முழுவதுமே ஒரு விதமான குழப்பத்துள்ளே மூழ்கிப்போய்க் கிடந்தது. முன்னமே கூறப்பட்டவண்ணம் அதற்கு முக்கிய காரணம் வெவ்வேறிடங்களில் பொய்த் தீர்க்கதரிசிகள் முளைத்தெழுந்ததே யாகும். நபிகட்டிலகம்ஸல் அந்த ஹிஜாஸ் பகுதியில் அவதரிக்கா முன்னும் அப்படிப்பட்ட பொய்யான தீர்க்கதரிசி யொருவரும் அந்நாட்டில் தோன்றியது கிடையாது; ஆனுல், அஹ்மத்நபிஸல் அவர்கள் அத்தேயத்தில் தோன்றி அதிகமான ஜயங்கொண்டு விட்டதுகண்டு, பலப்பல மக்கள் பெரும்பெரும் பொருமையெல்லாம் கொண்டு, அப்பிராந்தியத்தின் பல்வேறிடங்களில் தோன்றித் தங்களுக்குங்கூட ஆண்டவன்மாட்டிருந்து வேதஞான மெல்லாம் வெளிப்படத் தொடங்

நபிப்பட்டத்துக்குப் பொய் நஷ்வாக்காரர்கள்

கிற் றென்றுகூறிப் பொதுஜனங்களைத் தங்கள் வலை யுள்ளே சிக்கவைக்கத் துணித்து விட்டார்கள். இஃதொரு நூதன எதிர்ப்பா யிருப்பினும், இதனுல் இஸ்லாத்திற்கே பெரியதொரு பரமசங்கடம் நேரிட்டுவிடும் போற் காணப்பட்ட தென்னலாம். இப்படிப்பட்ட அமயத்தில், இறைவனே தன் சொந்தக் கரத்திஞல் நாட்டிய இஸ்லாத்தின் இளம்பயிரைப் பாதுகாத்து ரக்ஷிக்க முன்வந் திராவிடின், அப்பொழுதே அந்த எதிரிகளின் பொதுத் தாக்குதல்களால் நந்தீனுலிஸ்லாம் அடியோடு கல்லியெறியப்பட்டுப் போயிருக்கு மென்பது திண்ணம்.

எனினும், பொய்ந்நபி யொருவனுக்கு எத்துணைப் பெரிய உலகமக்க ளுதவி யிருப்பினும், அவன்வெற்றி பெறுவ தென்பது ஒருபொழுதும் சாலா தென்றும், மெய்யான நபியொருவர் தமது பிரசாரத்தின் குறுக்கே எத்துணைப் பெரிய முட்டுக் கட்டைகள் காணப்படினும், அவற்றினை யெல்லாம் தாண்டிக் கொண்டு அம் மகானுபாவர் இறுதியில் வெற்றிக் கொடி நாட்டிநிற்பதே சரதமென்றும் நிரூபித்துக் காண்பிப்பான்வேண்டியே எல்லாம்வல்லஅல்லாஹுத் தஆலவானவன் ஏற்கெனவே ஏற்பாடு செய்துவைத் திருந்ததே போலத்தான் எல்லாம் காணப்பட்டுவந்தன. சற்றேறக்குறைய நான்கு அல்லது ஐந்து பொய்த்தீர்க்க தரிசிகள் ஏக காலத்தில் கிளம்பி, இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளர்ச்சி செய்துவந்தார்கள். அந்த அந்தத் தீர்க்கதரிசியின் தலைமையில் அந்த அந்த வர்க்கத்தைச் சார்ந்த அநேக மக்கள்கள் சேர்ந்து கொண்டு விட்டார்கள். அதுபோழ்து இஸ்லா மார்க்கம் தனது தற்காப்பிற்கே தத்தளித்து வந்தும்,

சிறிது போழ்தைக்குள்ளே அந்தப் பொய்த் தீர்க்க தரிசிகளுள் ஒவ்வொருவனும் எவராலும் எதிர்பாரா வண்ணம் முற்ற முற்றத் தோல்வியுற்றே போய் முடிந்து விட்டான். இதுவே இறையருளாகும்.

உண்மையை ஊன்றிப் பார்ப்போமாயின், இஸ்லாத்தின் தோற்றமும் இதன் முழுவேகப் பிரசாரமும், எல்லாம் வல்ல இறைவனது திருக்கரமே இம் மார்க்கத்தின் க்ஷேமலாபத்தின்மீது அளவிறந்த அக்கரை காட்டிவந்திருக்கிற தென்னும் அற்புதத்தைச் செவ்வி தாய் எண்பித்துக் காட்டாமலிரா வென்றே நன் குணர்ந்து கொண்டு விடலாம். தனி மனிதராய ஒருவர் கிளம்பித் தம்முடைய இனத்தவராகிய யுத்த வெறிகொண்ட ஒரு முரட்டு ஜாதியாரைச் சீர்திருத்துவான் வேண்டி ஏகதெய்வ உண்மையையும் ஏக சகோதரத்துவக் கொள்கையையும் உபதேசிக்கத் தலைப்படுகின்றார். அது பொழுது அவருடைய இனத்தவரெல்லாரும் அப்பெரியாருக்குப் பக்க பலமாயிருப்பதை விடுத்து, அவரைத் தன்னந் தனியே கைவிட்டதோ டமையாது, அவருக்கே பரம விரோதிகளாகவும் ஜன்ம சத்துருக்களாகவும் மாறி விடுகிறார்கள். அம் மஹானுபாவர் இறுதியாகத் தமது பிறந்த ஊரையும் துறந்து வேற்றூர் சென்று உயிர் தப்புமாறு செய்துவிடப் படுகின்றார்கள் ; முதன்முதலாக அவரூர் மக்களே அம்மஹானின் ஆருயிரைப் போக்கிவிடச் சதியாலோசனைசெய்து பார்த்தார்கள். பின்னர்ப் பெரும்பெரும் யுத்தகளங்களுக் கெல்லாம் அரப்நாடு முழுவதுமே திரண்டுவந்து, ஆங்குச் சொரியப்பட்ட இரத்த வெள்ளத்துள்ளே அந்த அல்லாஹ்வின் திரு நபியவர்களையும் மூழ்கச் செய்து, அன்னாரின் சத்திய

பிரசாரத்தையும் ஆழ்த்தித் தாழ்த்திவிடப் பார்த்தார்கள்.

ஆனால், அல்லாஹ்வின் சோதனையால் அத்தத் தனிமையான, வேறொரு மனித சகாயமுமற்ற, எல்லாராலும் துரத்தித் துரத்தி யடிக்கப் பெற்ற ஒரு தன்னந் தனியான மனிதர் பெற்று விட்ட வெற்றியானது — வேறெந்த மனித சரிதையிலும் காணக் கிடைக்காத அத்துணைப் பெரிய இணையற்ற மகாவெற்றியானது— எதிர்மத வாதிகளும் கண்டு ஏக்கத்தால் இறும்பூதெய்தக் கூடியதாகவே காணப்படாநின்ற தென்பதில் இஞ்சித்தும் சந்தேக மென்பதே யில்லை. சற்றேறக் குறையக் கால் நூற்றாண்டின் காலஅளவி னுள்ளேயே அப் பெருமனார்ஸல் இகலோக ராஜ்ஜியத்திற் கோர் இணையற்ற ஏகசக்ராதிபதியாகவும், பரலோக ராஜ்ஜியத்துக்கொரு பரம குருமஹானாகவும் உயர்ந்து பரந்து விடுகிறார்கள். தனக்குப் பின்னே எல்லாம்வல்ல அல்லாஹு த்தஆலாவின் திருக்கர மிருந்து ஓர் அற்புதமே போன்று ஜயக் கொடி நாட்டிவந்த அந்தப் பெரிய மகா வெற்றிக்கு இணையாய தொன்றை வேறெந்த மனிதப் பிரயத்தனத்தாலும், மனிதத்தைரியத்தாலும், மனிதப் புத்திசாலித் தனத்தாலும் பெற்று விடுவ தென்பது ஒருகாலும் சாலாததே யாகும்.

தெய்வகடாக்ஷமே

அந்த அரபிகளைப் போன்ற யுத்தவெறியர்கள் ஆயுதப்பலங் கொண்டே அடக்கி யொடுக்கப்படக் கூடுமாயின், அந்தப் பொய்த் தீர்க்கதரிசிக ளெல்லாரும் தங்கள் பெருந்திரளான சிஷ்யர்களின் படைக்கலப் பலங்கொண்டே அந்நாட்டு மக்கள்களைத் தங்கள் கைவயமாக்கிக் கொண்டு சடிதியில் வெற்றிபெற்

திருப்பார்கள். முஸைலமா வென்னும் ஒரு பொய்த் தீர்க்கதரிசிமட்டும் தன்வயம் அறுபதினுயிரம் பலசாலிகளைச் சேகரம்செய்து வைத்திருந்தான். அத்தகைய பொய்யர்க ளனைவரும் அடியோடு தோல்வியடைந்து அதிசீக்கிரம் தொலைந்து போனதிலிருந்து, அந்த அரப் நாடு மதவிஷயத்திலும் ஆசார விஷயத்திலும் சிறிது போழ்தைக்குள்ளே சீர்திருத்த மடைந்துவிட்ட அதிசயத்திற் கெல்லாம் காரணம் பலாத்காரம் அன்றென்றே ஆண்டவன் தீர்ப்புக் கூறிவிட்டானென்பதையே ருஜுப்பித்துக் காண்பிக்கின்றது. அந்தப் பெரிய அரப் தேசமுழுதையும் அத்துணைக் குறுகிய கால எல்லைக்குள்ளே சீர்திருத்தி ஒழுங்குசெய்த வேலையில் ஒரு தன்னந்தனியான மனிதருக்கு எல்லாம் வல்ல இறைவனே தோன்ருத் துணையாய் நின்று உதவி புரிந்தே வந்திருக்கிருனென்பது கண்கூடாகக் காணப்படாநின்றது.

அஸ்வத் அன்ஸீ

நபிகள் திலகத்திற்கு விரோதமாய்க் கிளம்பிய பொய்த் தீர்க்கதரிசிகளுள் எமன் பிராந்தியத்தில் முளைத்த அஸ்வத் அன்ஸீ என்பவனே முதல்வனுவான். இவன் தன்னுடைய இனத்திற்கே தலைவனு யிருந்துகொண்டு, ஒரு தனவந்தனுகவும் காணப்பட்டான். இவன் ஆவியுலக வாசிகளுடனே தனக்குச் சம்பந்தமிருப்பதாகக் கூறிக் கொண்டு, தன்னுடைய இனத்தாரின் மீதெல்லாம் ஆதிக்யம் செலுத்தி வந்தான். சிறிது காலத்திற்குள்ளே இவன் அண்டை அயலிலுள்ள எல்லா வர்க்கத் தலைவர்களுடனும் இரகசிய உடன்படிக்கை செய்துகொண்டு, தனக்கு வேண்டிய பலமுழுதையும் சேகரித்துக் கொண்டு

விட்டவுடனே தீனுல் இஸ்லாத்திற்கு நேர்விரோத மாய்க் கிளம்பி, நபிகள் திலகத்தின் தூதர்களை யெல்லாம் தன் தேசத்தை விட்டுத் துரத்தியடிக்கத் துணிந்து விட்டான். இது நிகழ்ந்தது ஹிஜ்ரீ 10-ஆவது ஆண்டிலாகும். அதன் பின்பு அஸ்வத் நஜ்ரான்மீது படையெடுத்துச் சென்று, அப்பிராந்தியத்தைத் தன் கைவயப்படுத்திக் கொண்டு விட்டான். அவன் எமன்தேயத்தின் தலைநகராய் விளங்கி வந்த ஸன்ஆவையும் பிடித்துக்கொண்டு, ஆங்கிருந்துவந்த ஈரான் கவர்னரான பாஜான் என்பவரைக் கொன்று, அவருடைய மனைவியையும் மணமுடித்துக் கொண்டு விட்டான்.* இவ்வாறாக வெல்லாம் அவன் எமன் தேயத்துடனே அரப்நாட்டின் தெற்குப் பகுதி யனைத்தையும் தனது ஆதிக்யத்தின்கீழ்க் கொண்டு வந்து சேர்த்துக்கொண்டான். இந்தச் செய்தி நபிகள் திலகத்திற்கு எட்டியபொழுது, அப்பெருமானார் அவர்கள் முஆது பின் ஜபல்ரலி முதலிய ஒருசில உத்தியோகஸ்தர்களை அந்தத் திசையை நோக்கி அனுப்பி வைத்து, அஸ்வதின் கிளர்ச்சியை அடக்கிவரச் சொன்

---

* இந்த பாஜான் என்பவர் ஆதியில் ஈரான் தேசத்தின் கவர்னராகவேதா னிருந்தார். ஹிஜ்ரீ 7-ஆம் ஆண்டில் இம் மாகாணாதிபதி இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டு ஆங்கு முஸ்லிம் கவர்னராகவே யிருந்து வந்தார். ஹிஜ்ரீ 10-ஆம் ஆண்டில், அஸ்வத் அன்ஸீ பாஜானைக் கொன்று, அவருடைய மனைவியையும் தான் சிறைப்படுத்திக் கொண்டான். பைரோஜ் தைலமீ என்பவர், பாஜானுடைய சிறிய மாமனாரகையால், அவர் தம்முடைய அண்ணன் மகளைக் கலந்துகொண்டு மாளிகைக்குள்ளே நள்ளிரவில் நுழைந்து, அஸ்வத் அன்ஸீயைப் பரலோகப் பிராப்தி யடையும்படி செய்துமுடித்தார்.

ஞர்கள்.* ஆனல், ஒருநாளிரவில், எமன் தேயத்தில் கொல்லப்பட் டொழிந்திருந்த மகாணுதிபதியின் நெருங்கிய உறவினராய் விளங்கிய பைரோஜ் தைலமீ என்பார் அஸ்வதின் அரண்மனேக்குள்ளே ஒருவருக்கும் தெரியாமல் நுழைந்து, அவ் வயோக்கியனே எமலோகம் அனுப்பி முடித்துவிட்டார். அக்காரியம் நபிகள் திலகத்தின் நிர்யாணத்திற்கு இரண்டொருநாள் முன்னதாகத்தான் நிகழ்ந்திருந்தது. எனினும், அபூபக்ர் ரலி அவர்கள் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதன் பின்னே அஸ்வதின் கொலேச் செய்தியானது மதீனுவிற்குள் வந்து எட்டியது. அவனுடைய மரணத்தால் ஒருவாறு எமன் பிராந்தியத்தில் அடங்கிப் போயிருந்த புரட்சிக் கிளர்ச்சியானது நபிகள் நாதரின் மரணத்தைச் செவியுற்று மீட்டும் சிறிது தலே கிளப்பத் தொடங்கிற்று. எனவே, அந்தக் கிளர்ச்சியின் இயக்கமானது முதல் கலீபாவின் ஆரம்ப காலத்தில் ஒருசிறிது விஷமமே புரிந்துகொண் டிருந்ததென்னலாம்.

நம்பிரான் ஸல் அவர்களுக்கு விரோதமாகக் கிளம்பிய மற்றொரு பொய்த் தீர்க்கதரிசி யானவன் முஸைலமா பின் ஹபீ பாகக் காணப்பட்டான். இவன் பனூ ஹனீபா வர்க்கத்தில் தோன்றியவன்.

முஸைலமா

மதீனுவிற்குச் சென்று, நபிகள் நாயகத்தைப் பேட்டிகண்டு வந்த அவ் வர்க்கத்தின் மனிதர்களோடுகூட இந்த முஸைலமாவும் ஒருவனுகச்

* வேறு சில சரித்திராசிரியர்கள், அஸ்வத் அன்ஸீ என்பவனுக்குப் புத்திகற்பிப்பான் வேண்டி, ஹஜ்ரத் காலித் பின் வலீத், ஹஜ்ரத் தாபித் பின் கைஸ் அன்ஸாரீயும் வேறுபல முஹாஜிரீன்களும் அன்ஸார்களும் அனுப்பி வைக்கப்பட்டனர் என்று கூறு நிற்பார்கள்.

சென்றிருந்தான். ஆதலின், ஆங்கிருந்து திரும்பி வந்தவுடனே இவன் தானுமொரு தீர்க்கதரிசியென்று பொய்ப் பிரசாரம் புரியத் தொடங்கிவிட்டான். இவன் சிற்சில ஆபாஸமுள்ள வாக்கியங்களை யெல்லாம் சிருஷ்டி செய்து கொண்டு, அவையனைத்தும் ஆண்டவன் மாட்டிருந்து தனக்கு வெளியாக்கப்பட்ட ஞான விளக்கங்க ளென்றே கூறிக்கொண்டு, தன்னல் அற்புத வேலைகளும் பல செய்துகாட்ட முடியுமென்றும் விவாதித்து வந்தான். இவன் ஒரு நாள் நபிகள் திலகத்திற்கு ஒருநிருபம் விடுத்து, அதில் ஆண்டவனுடைய நபித்துவத்தில் தனக்கும் ஒரு பங்குண்டென்று அவ் வாண்டவனே தனக்கு அறிவித்திருப்பதாகவும், ஆதலின் அந்த அரப்நாட்டின் ஆட்சியானது குறைஷி குலத்தவருக்கும் தனக்கும் இடையில் இரு சரிபாதிகளாகப் பங்கிடப்பட்டுப் பிரித்துக் கொள்ளப் படுமாயின், தானும் நாயகமவர்களுடன் ஒத்துழைப்பதாய்ப் பிணைத்தியிருந்தான். இக் கடிதத்திற்கு விடையாக அனுப்பப்பட்ட நிருபத்தில் நபிகள் திலகம்ஸல் இவ்வாறு விளக்கிக் கூறியிருக்கிறர்கள் :—

" இவ்விகலோக ஆட்சி சம்பந்தப்பட்ட வரையில் இஃது எல்லாம்வல்ல இறைவனுக்கே சொந்தமாய் இருந்துவருதலினல்இதனை அவன் தான் நாடியவருக்கே அளித்தருள்கின்றான் ; ஆனல், இனி வரப்போகின்ற அவ்வுலக வாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில் சன்மார்க்க சீலர்களுக்கே அந்தப் பேரானந்தம் அளிக்கப் படுமென்பது திண்ணம்." இவ்வாறு எழுதி யனுப்பி விட்டு, நபிகள் பிரான்ஸல் அவர்கள் முஸைலமாவிடம் ஒரு தூதனையும் அனுப்பி, அவனை அவனது பொய்ப் பிரசாரத்தினின்று விலகிக் கொள்ளுமாறு நல்லபுத்தி

சொல்லிவரச் செய்தார்கள். ஆயின், அவன் அதற் கொன்றும் செவிதாழ்த்தாது, எமாமாவின் பகுதி யிலே தன் கலகத்தை ஆரம்பித்துவிட்டான்; பின் னர், இறுதியாக ஹஜ்ரத் அபூபக்ரின் ஆட்சியின் போழ்து முஸ்லிம்களுக்கும் அவனுக்கும் நிகழ்ந்த யுத் தத்தில் முஸைலமா வானவன் கொல்லப்பட்டு ஒழிந்து போய் விட்டான்.

நபிகள்திலகம் ஸல் ஒருமுறை தங்களுடைய உவம தரிசன மொன்றில் தங்கள் இருகரங்களிலும் இரண்டு "பேடிகள்" அணியப்பட் டிருந்ததாகவும், அவ் விரண்டு காப்புக்களையும் தாங்கள் ஒரே மூச்சில் ஊதி உடைத்தெறிந்து விட்டதாகவும் கண்டிருந்தார்கள். இச்சூக்ஷுமத் தோற்றத்தின் கருத்தானது, இவ் விரண்டு பொய்த் தீர்க்கதரிசிகளாய் விளங்கிய அஸ் வதையும் முஸைலமாவையுமே குறிக்குமென்று நபி கள்பிரானே கூறியிருந்தார்கள். அவ்வாறுகவே அவர் களது தீர்க்கதிருஷ்டியும் போய் முடிந்துவிட்ட தென் பதைப் பின்விளைந்த சம்பவங்கள் நன்கு நிரூபித்துக் காட்டுகின்றன வென்னலாம். அரப்நாட்டில் அது பொழுது கிளம்பிய நான்கு பொய்த் தீர்க்கதரிசிகளுள் அஸ்வதும் முஸைலமாவும் கொல்லப்பட்டுப் போய் விட்டார்கள். மற்றிரண்டு பேர்களாய் விளங்கிய துலை ஹாவும் ஸஜாஹும் இறுதியிலே இஸ்லாத்தை ஏற் றுக்கொண்டு, நல்ல முஸ்லிம்களாக மாறிவிட்டார்கள்.

துலைஹா ஏன்பவன், பனூ அஸத் வர்க்கத்தின் தலைவனுகவும் ஒரு கீர்த்திவாய்ந்த நஜ்தின் போர் வீரனுகவும் விளங்கிவந்தான். உயைனு பின் ஹிஸ்ன் இவனுடைய தளபதியா யிருந்தான். ஒருமுறை இவனுடைய வாக்கத்தார்

துலைஹா

ஒரு பாலைவனத்தின் வழியே சென்றுகொண் டிருந்த பொழுது ஆங்கெங்கும் தண்ணீரென்பதே காணப் படாது போயிற்று. அப்பொழுது துலைஹாவானவன் ஓரிடத்தைச் சுட்டிக்காட்டி, அங்கே தோண்டினால் நீரூற்றுக் காணப்படும் என்று கூறினன். அவ்வாறே அவர்கள் ஆங்குத்தோண்டித் தண்ணீரூற்றைக் கண்டு பிடித்துவிட்டதனால், துலைஹா என்பவன் அதனைத் தனக்குரிய ஓர் அற்புதமெனக் கூறித் தனக்கு நபிப்பட் டம் கிடைத்துவிட்டதாக வாதிக்கத் தொடங்கினன். நபிகள்திலகம்ஸல் நிர்யாண மடைந்து விட்டதன்பின் இவன் பகிரங்கமாக இஸ்லாமிய குடியரசுக்கு விரோத மாய்க் கிளர்ச்சி செய்யப் புறப்பட்டான். ஆனால், காலி திப்னு வலீத்ரலி அவர்களால் தோற்கடிக்கப்பட் டுத் துலைஹாவானவன சிரியா நாட்டை நோக்கி ஓட் டம்பிடித்தான்.* உயைனு கைது செய்யப்பட்டு ஹஜ் ரத் அபூபக்ர் அவர்கள் சமுகம் மதீனாவுக்கு அனுப்பப்

---

* இந்தத் துலைஹா வென்பார், பனூ அஸத் கூட்டத்தின் நபி யாவார். முஹம்மதோ பனூ ஹாஷிம் வர்க்கத்தின் நபியாவார். முஹம் மத் இறந்துபோனர்; துலைஹா உயிருடனிருக்கின்றார், என்று உயைனு பின் ஹிஸ்ன் பிஜாரீ கூறி, பனூ கித்பான் கூட்டத்தாரும் துலைஹாவை நபியென்று ஏற்றுக்கொள்ளுமாறு செய்தார். பின்னர், காலித் பின் வலீதுடன் கோஹெ ஸல்மாவுக்குச் சமீபமாய்த் துலைஹாவின் படை கள் எதிர்த்து யுத்தம்செய்ய நேர்ந்தபோழ்து, யுத்த தளகர்த்தராயிருந்த உயைனு (குடிலுக்குள் ளிருந்துகொண்டு அல்லாஹ்வினிடம் துஆச் செய்துகொண் டிருப்பவனே போலிருந்த) துலைஹாவினிடம் இரு முறை சென்று, ஏதேனும் ஆண்டவன் வஹீ அறிவித்தானு வென்று வினவினர். “இன்னும் ஜிப்ரீல் என்பால் வஹீ கொண்டு வரவில்லை,” என்று கூறி விட்டான். மூன்றும் முறையாக உயைனு, “யுத்தம் மிகக் கடுமையாய் நடக்கிறது; இப்பொழுதேனும் ஏதாவது வஹீ

பட்டார். உயைனு மதீனு வந்ததும் மீட்டும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டு இறுதிவரை நல்ல முஸ்லிமாகவேயிருந்தார். அதன் பின்பு அவருடைய வர்க்கத்தாருக்கு மன்னிப்பளிக்கப்பட்ட போழ்து, துலைஹாவும் மதீனுவிற்குத் திரும்பிவந்து, தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டு விட்டார்.

ஸஜாஹ்

ஸஜாஹ் பின்த் ஹாரித் தமீமா என்பாள், தமக்கு நபிப்பட்டம் கிடைத்ததென்று கூறத்தொடங்கியவர்களுள் நான்காவதாகிய ஒரு பெண்மணியாவாள். இவள் மத்திய அரப்நாட்டில் வசித்துவந்த பனூ எர்புஃ வர்க்கத்தில் தோன்றியவளா யிருந்தாள்.* எனினும், இவளுடைய வர்க்கத்தினர் மெஸபொட் டேமியாவுக்குச் சென்று, ஆங்கிருந்துவந்த பனூ துக்ல பென்னும் கிறிஸ்துமத வர்க்கத்துடனே ஒன்றித்து வாழ்ந்து வந்தார்கள். ஆதலின், ஸஜாஹ் ஒரு கிறிஸ்தவ மாதாகவே வளர்க்கப்பட்டு வந்தாள். இன்னம் இவள் ஜோஸ்யத்தில் மஹா தேர்ச்சியுள்ளவளாகவும் இருந்து வந்தாள். இவளது படைகளுக்கு, அஷ்அஸ் பின் கைஸ் என்பவன் தளகர்த்தனு யிருந்துவந்தான். நபிகள் பிரானது நிர்யாணத்திற்குப் பின்னே, அரப்நாடு முழுவதும் ஒருவிதக் குழப்பத்தில் இருந்துவந்ததைக்

---

வந்ததா ?" என்று வினவ, "இதோ! இப்பொழுதுதான் வஹீ வந்தது ; ஜிப்ரீல் 'அவர் (எதிரி) நம்பி யிருப்பதேபோல் நீரும் நம்பி யிருக்கின்றீர். எனவே நீர் மறந்துவிடக் கூடாத ஒரு விஷயம் உமக்குக் கிட்டப்போகிறது' என்று வந்து கூறிப்போனுர்," என்று துலைஹா கூறினுன்.—(ஸீரத்துஸ் ஸித்தீக், பக்கம் 83, 84 பார்க்க.)

* வேறு சில சரித்திராசிரியர்கள், இவள், பனூ துக்லப், அல்லது பனூ தக்லிபைச் சேர்ந்தவளாவாள் என்று வரைந்துள்ளார்கள்.

கண்டு, இவள் அதையொரு நல்ல சந்தர்ப்பமாக உபயோகித்துக் கொள்ள முன்வந்து, சுற்றுப் புறங்களில் வசித்துவந்த கிறிஸ்தவக் கூட்டங்களுட னெல்லாம் உடன்படிக்கை செய்துகொண்டு, மதீனாவின்மீது ஒரு பெரிய படையெடுப்பை நடாத்திச் சென்றாள். இவள் ஜூர்ப் என்னும் ஸ்தலத்தில் பனூ தமீம்களிடம் வந்து சேர்ந்தவுடன் தன்னுடைய சொந்த இனத்தவராகிய பனூ எர்பூஃ வர்க்கத்தினரை அழைத்துத் தன்னுடனே சேர்ந்துகொள்ளுமாறும், அப் படையெடுப்பில் ஜயமடைந்ததன் பின்னர் அவர்களுக் கொரு பகுதி நிலத்தைப் பகிர்ந்து கொடுக்கத் தான் விரும்புவதாகவும் வாக்குறுதி செய்து கொடுத்தாள். இவ்வுறுதி மொழியை ஏற்றுக்கொண்ட பனூ எர்பூஃ வர்க்கத்தினர் இவளுடைய கலக கோஷ்டியுடனே சேர்ந்துகொண்டு, மாலிக் பின் நுவைரா வென்பானையும் தங்களுக்குத் தளபதியாக ஏற்படுத்திக் கொண்டார்கள். ஆனால், மிகுதியிருந்த பனூதமீம்க ளெல்லாரும் ஸஜாஹின் ஆலோசனையை ஏற்க மறுத்துவிட்டதனால், இவள் படைக்கலப் பலங்கொண்டே அவர்களையெல்லாம் தோற்கடிக்க முற்பட்டுவந்தாள். ஆனால், அம் முயற்சியில் தோல்வியுற்றாள். பின்னர் மாலிக் பின் நுவைராவும், இடையே இவளுடன் வந்து சேர்ந்த வகீஃ பின் மாலிக்கும் அபிப்பிராய பேதங் காரணமாக ஸஜாஹின் படையினின்று பிரிந்து, தம் தம் சொந்த இருப்பிடம் திரும்பிச்சென்று விட்டனர். ஆகையால், இவள் தான நேரே மதீனாவின்மீது படையெடுத்துச் செல்வது உசிதமல்லவென்றெண்ணி, முதன்முதலாய் முஸைலமத்துல் கத்தாப்

என்பவனைவென்று பின்னர் மதீனாவின்மீது படை யெடுக்கலாம் என்று தீர்மானித்தாள்.

ஆனால், அதுசமயம் முஸைலமா முஸ்லிம்களுடன் யுத்தம் செய்யவேண்டிய அமயமா யிருந்தபடியால், ஸஜாஹ் என்பாளுடன் யுத்தம்புரிவது கஷ்ட மான காரியமென் றெண்ணி, இவளுடன் தனித்துப் பேசி ஓர் உடன்படிக்கையைச் செய்துகொள்ளலா மென்ற எண்ணங்கொண்டு, அநேக விதமான சம் மானங்களை யெல்லாம் இவளுக் கனுப்பிச் சமாதா னத்திற்காகத் தூதும் விடுத்தனுப்பினான். இதைக் கண்ட இவள் தானும் வந்து முஸைலமாவை நேரில் கண்டுகொள்ள விருப்பங் கொண்டுவிட்டாள்; ஆக லான், முஸைலமா தனக்குச் சொந்தமான ஹதீக் கதுர் ரஹ்மான் (அருளாளன் நந்தனவனம்) என்னும் அழகிய பூந்தோட்டத்தில் அருமையான டேராக்களை அமைக்கும்படி செய்து, அவைகளி லொன்றான, ஸஜாஹும் முஸைலமாவும் (பொய்ந் நபியாவும் நபி யும்) தனியே சந்திக்கப்போகும் டேராவில், நறு மணங்களிட்டு அதிக சுகந்தவாசனை யுடையதாய்ச் செய்து வைத்திருந்தான். ஆகையால், இரு நபிக ளென்னப்பட்டவர்களும் குறிப்பிட்ட டேராவுக்குள் தனிமையாய் அளவளாவி வார்த்தை யாடிக்கொண் டிருந்தார்கள். இவ்வாறாக, அவ்விருவரும் சம்பா ஷித்துக்கொண் டிருந்தபோழ்து, அவ் வொவ்வொரு வரும் மற்றவரின் நபிப்பட்டத்தை ஏற்றுக்கொண்டு விட்டனர். இதன் பயனாக அந்த ஆண் தீர்க்கதரிசி யும், இந்தப் பெண் தீர்க்கதரிசினியும் ஒருவரையொரு வர் டேராவுக்குள்ளேயே மணமுடித்துக் கொண்டு விட்டார்கள். இந்தப் பெண் நபி, சமாதான உடன்

படிக்கைக்காக, ஆண் நபியைக் கண்டுபேச டேரா வுக்குள் பிரவேசித்தாள். ஆயினும், டேராவுக்குள் சென்றதன் பின்பு, மூன்றுநாள் மட்டும் பெண் நபியும் ஆண்நபியும் வெளிப்போந்தார்க ளில்லை. இங்ஙனம் மூன்றுநாள் மட்டும் டேராவுக்குள் ளிருந்து விட்டு, இவள் தன்னுடைய சொந்த வர்க்கத்தின ராகிய பனூ தக்லிபிடம் திரும்பிப்போய்ச் சேர்ந்து விட்டாள். அதன்பின்னர் முஸ்லிம்களின் படைகள் அதிகமாய் இருந்ததைக் கேள்வியுற்று, இவளுடைய தைரியம் குன்றிப் போய்விட்டதனுல், அம் முஸ்லிம் களுடனே எதிர்த்து நின்று யுத்தம்புரிய மனம் கொள்ளாது போய், இறுதியாக முஆவியாவின் ஆட்சியின் காலத்திலே இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டு விட்டாள்.*

கலகக் கிளர்ச்சிக்குமூல காரணம்

இப்பொழுது நாம் கவனிக்க வேண்டிய முக் கியமான விஷயம் ஒன்றுளது. நபிகள்திலகம்ஸல் நிர்யாணமடைந்து கண்மூடியவுடனே அரப்நாட்டில் இருந்து வந்த பற்பல வர்க்கத்தினர்க ளெல்லாரும் தீனுல் இஸ்லாத்திற்கு விரோதமாக வெறுத்துக் கிளம் பிக் கிளர்ச்சிசெய்யத் தலைப்பட்டதன் காரணந் தான் யாதா யிருத்தல் கூடும்? இதனுல், அப்படிப்

---

* வேறு சில சரித்திராசிரியரின் அபிப்பிராயத்தின்படி, முஸைல மா, ஹஜ்ரத் ஹபஷீயின் கரத்தால் சொல்லப்பட்டதன் பின், அவன் மனைவியான ஸஜாஹ் என்பாள், புஸ்ரா என்னும் நகருக்குச் சென்று, அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்து (முஸ்லிமாக மாருமலே) மரண மடைந்து விட்டாள் என்ற விஷயம் அறியக்கிடக்கின்றது. (தாரீக் தப்ரீ-பக்கம், 1863 பார்க்க).

பட்ட மனிதர்க ளெல்லாரும் பலாத்காரத்தைக் கொண்டேதான் இஸ்லாத்தைத் தழுவுமாறு நிர்ப்பந்தப் படுத்தப் பட்டார்களோ வென்னும் சந்தேகமும் ஒருபக்கல் எழுந்துவிடுதல் கூடும்; அவ்வாறு பலவந்தமாக இஸ்லாத்தில் சேர்க்கப்பட்டிருந்ததனுல்தான் அவர்க ளனைவரும் நபிகள் நாதர்ஸல் பரிபூரணதசை யடைந்தவுடனே மீட்டும் சுயேச்சை யடைவான்வேண்டிக் கிளர்ச்சி செய்தனரோ வென்றும் பலர் ஐயங்கொண்டு விடலாம். ஆனுல், அவ்வாறொன்றும் பலவந்தம் இல்லாமலே அவர்களெல்லாரும் தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருப்பார்க ளாயின், பிறகேன் இவ்வாறாக எங்குப் பார்த்தாலும் கலகங்கள் பல கிளம்பி, அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசையே விழுங்கிவிடும்போல் காணப்பட்டன?

அவர்களுள் சிற்சில வர்க்கத்தினர் இஸ்லாத்தைவிட்டு விலகிக்கொண்டார்க ளென்பதும் சரித்திர பூர்வமான உண்மையே யாகும்; ஆனுல், இவ்வாறு ஒருசிலர் இஸ்லாத்தை வெறுத்தொதுக்கியதனுல் அரப்நாடு முழுவதுமே பாதிக்கப்பட்டுவிட்டதென்று கூறுவதுமட்டும் எவ்வகைச் சரித்திரச் சான்ருலும் நிரூபிக்கப் படுவதைக் கண்டுகொள்ள மாட்டார்கள். நபிகள் பெருமானது நிர்யாணத்திற்கு நெடுநாள் முன்னதாகவே இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டிருந்த முஸ்லிம்க ளெல்லாரும் மார்க்கத்தின் அனுஷ்டானத்திலும் சித்தாந்தத்திலும் ஆழமான அனுபவத்தையும் அறிவையும் பெற்றுக்கொண் டிருந்த காரணத்தினுல் அவர்களுள்ளிருந்து ஒருவரேனும் இஸ்லாம் மார்க்கத்தை

வெறுக்கத் துணிந்தனரில்லை. இப்படிப்பட்ட முஸ்லிம்களின் மத உறுதியானது அநேக சந்தர்ப்பங்களில் மிகமிகக் கடுமையான சோதனைக்குள்ளாக்கப்பட் டிருந்தும், அவர்களுள் எவருமே அந்தச் சோதனையில் பின்வாங்கிய தில்லை. இஸ்லாத்தை இல்லாமலொழித்துவிட எதிரிகள் எடுத்துக்கொண்டிருந்த பற்பல கொடிய முயற்சிகளினூடேயெல்லாம் இப்படிப்பட்ட முஸ்லிம்கள் மிக்க உறுதியுடனேயே நபிகள் திலகத்தின் பக்கத்தில் ஒன்றித்து நின்றிருக்கிறார்கள்; தங்களுடைய மதநம்பிக்கையில் வைத்துள்ள உறுதியானது எத்துணைப் பெரிய கொடிய யுத்தகளத்திலும் சற்றும் துளங்கியதே கிடையாது. இவர்க ளெல்லாரும் தங்கள் தீனுல் இஸ்லாத்தின்பொருட்டு உயிரின் தியாகத்தையும் ஒரு சர்வசாதாரணமான காரியமென்றே நினைந்து, அவ்வாறே அர்ப்பணமும் செய்துவந் திருக்கிறார்கள். நபிகணாதரின்ஸல் நிர்யாணத்திற்கு இரண்டாண்டு முன்னரே இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருந்த மனிதர்களுங்கூட இப்படிப்பட்ட உறுதியுள்ளவர்களாகவேதாம் இருந்துவந் திருக்கிறார்கள். என்னெனின், மக்கமாநகரைச் சூழ்ந்திருந்த பகுதிகளிலெல்லாம் பெருங்கிளர்ச்சிகள் காணப்பட்டுவந்தபோழ்தும், அந்நகர் முழுவதும் சாந்தமும் அமைதியுமே பரவியிருக்கக் காண்கின்றோம். அந் நகரத்துக்குள் ளிருந்த மனிதர்களுள் ஒருவர்கூட இஸ்லாத்தை விட்டுவிட்டதாகவேனும், அல்லது இதற்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்ததாகவேனும் கூறுவதற்குச் சரித்திரத்தில் ஆதாரமொன்றுமில்லை. ஆனால், ஆங்கிருந்துவந்த மனிதர்களுள் பெரும்பான்மையோர், நபிகள் நாயகத்

தின் பரிபூரண தசைக்குச் சற்று முன்னதாகத்தான் தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருந்தார்கள். இன்னம், அவர்க ளெல்லாரும் எந்தவிதமான பல வந்தமு மில்லாமல் சுயமனப் பூர்வமாகவேதான் இம் மார்க்கத்தைத் தழுவிக்கொண்டார்க ளென்பதும் சரித்திர சம்பந்தமான ஒரு சாட்சியமே யாகும்.

ஆயின், ஒரு புதியமதத்தை அங்கீகரித்துக்கொள்வ தென்பது ஒரு காரியமாகும்; ஆனால், அம் மதத்தின் அந்தரங்க ஆத்மார்த்த தத்துவங்களை யெல்லாம் ஆதியோடந்தமாக அறிந் துணர்ந்து கொள்ளுவ தென்பது மற் றொரு காரியமாகும். எனவே, நபிபெருமானது இறுதிக் காலத்தில் இம் மார்க்கத்தைத் தழுவிக்கொண்டவர்க ளெல்லாரும் இதன் ஆழிய அந்தரங்கத் தாத்பரியத்தை அறிந்துகொள்ளுதற்குப் போதிய அவகாசத்தைப் பெற்றிருந்தன ரில்லை. இப்படிப்பட்டவர்க ளெல்லா ரும், அப்பொழுதுதான் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் பட்ட சிறுகுழந்தைகள் அக்கணமே உபாத்தியாயர் மரணமடைந்து விட்டதைக் கண்டு கட்டவிழ்த்து விடப்பட்ட காவாலிகளேபோல் கலகங்கள்பல செய்து வரக்கூடிய நிலைமையையே நிகர்த்து நின்றார்கள்.*

மதத்தின் ஆழிய தத்துவமாம்

---

* இங்கு மற்றொரு விஷயத்தையும் கவனிக்க வேண்டும். நம் பிரான்[ஸல்] அவர்கள், தாமொரு நபியென்று சொல்லிக்கொண்டேதான் பெரியபெரிய கீர்த்தியையும் செல்வாக்கையும் அடைந்தார்கள் என்று எண்ணியதாற்றான், அஸ்வத் அன்ஸீ, முஸைலமத்துல் கத்தாப், துலை ஹா, ஸஜாஹ், ஸல்மா பின்த் மாலிக், அஷ்அத் பின் கைஸ், உயைனா பின் ஹிஸ்ன்பஜாரீ, மாலிக் பின் நுவைரா போன்றவர்கள், நபிமார்க ளென்றும் தலைவர்களென்றும் கூறி, நபிகள்நாயகம்[ஸல்] அவர்களுடைய இறுதிக்காலத்திலும் இரசூல்[ஸல்] அவர்கள் நிர்யாண மடைந்ததன் பின்

அரப் தேசத்தில் திரிந்துவந்த எழுதப் படிக்கத் தெரியாத, சமூகாசார ஒழுக்க மென்பதையே சற்றும் அறிந்துகொண்டிராத "பதவீகள்" அதிசீக்கிரத்தில், அஃதாவது, அவர்கள் இம்மார்க்கத்தைத் தழுவிய ஒரு சில மாதங்களுக்குள்ளே எல்லா விதமான லௌகிக வைதிக சீர்திருத்தங்க ளனைத்தையும் பெற்றுக் கொண்டு விடுவதென்பது ஒரு சிறிதும் முடியாத காரிய மன்றோ? ஆகவேதான் தங்களையெல்லாம் லௌகிக வைதிக சம்பந்தமாயுள்ள சமூகக் கட்டுப் பாட்டின்கீழ் அடக்கியாண்டு கொண்டிருந்த நபிகள் நாயகமவர்கள் பரிபூரணதசை யடைந்துவிட்டார்க ளென்னும் செய்தியைக்கேட்டு, அவர்க ளெல்லாரும் அவிழ்த்து விடப்பட்ட காட்டுமிருகங்களே போல யதேச்சையாகக் கிளர்ச்சிசெய்யத் துணிந்துவிட்டார் கள்.

இதற்கொப்ப, நுஃமான் பின் முன்திர் என்பவன் பஹ்ரைன் பகுதியிலும், லக்கீத் பின் மாலிக் என்பான் உம்மான் பகுதியிலும், கந்தாப்பகுதியில் அநேக தாந்தோன்றித் தம்பிரான்களும் வெளிப்பட்டு, அவ்வப் பகுதிகளில் தாங்கள் தாங்களே அரசர்களெனப் பிரகடனப்படுத்திக் கொண்டதுடன், இஸ்லாத்தையும் தொலைத்துத் தலைமுழுகிவிடவேண்டு மென்றும் கங்கணங்கட்டி நின்றனர்கள். இதைக்

வீணான கலகங்கள்

னும் கிளர்ச்சி செய்துகொண்டும், வீணான கலகத்தையும் குழப்பத்தையும் மக்கள்பால் உண்டுபண்ணிக்கொண்டு மிருந்தார்கள். இவைகளுக் கெல் லாம், தாங்களும் ரசூலுல்லாஹ் அவர்களைப் போல் மஹான்களாய்ச் சமைந்துவிட வேண்டுமென்று தவறுதலாக அப் பொய்ந் நபிமார்களெல் லாம் எண்ணியதே காரணமாகும்.

கண்டதும் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள், அலா பின் ஹல்ரமீய்யையும், ஹுதைஜைபா பின் முஹ்ஸினையும், ஜியாத் பின் லபீத் அவர்களையும் முறையே அனுப்பி, அவர்களுடைய வீண்கலகங்களை யெல்லாம் அடக்கி முடித்தார்கள். ஆனால், அவ்வரப் நாடுமுழுவதும் ஆங் காங்கே காணப்பட்ட ஒருசில யூதர்களையும் கிறிஸ்த வர்களையும் தவிர்த்து, ஏனையோ ரெல்லாம் தத்தமக் குரிய விக்கிரஹ ஆராதனையையும் பலதெய்வக் கொள்கையையும் அடியோடு உதறித் தள்ளிவிட்டுச் சுயமே சுத்த பரிபூரணச் சுகவாரி யென்னப்படும் ஏக தெய்வ இஸ்லாத்தினுள்ளே வந்து சேர்ந்து கொண்டு விட்டசீர்திருத்தமொன்றே—லௌகிகவைதிகசரித்திர ஏடுகளில் வேறெங்கும் காணப்பட மாட்டாத இத்தகைய பெரிய பிறழ்ச்சிச் சம்பவமொன்றே— அத்துணைப் பெரிய மாறுதலை உண்டுபண்ணிவிட்ட மகானவர்களின் மகோன்னதப் பெருமையை நன்கு விளக்கிக் காட்டுகின்ற தென்னலாம். ஒருவரோ டொருவர் போக்குவரத்து எளிதில் வைத்துக்கொள்ள முடியாத அந்தப் பண்டைக் காலத்தில் அந்தப் பரந்த பாமரநாட்டில் ஆங்காங்கே சிதறிக்கிடந்த மனிதர்க ளெல்லாம் நபிகள் திலகத்தின் இறுதிநாட்களில் இஸ் லாத்தை ஏற்றுக்கொண் டிருந்ததனால், அவர்களை யெல்லாம் அத்துணைக்குறுகிய கால எல்லையாகிய ஒரு சில மாதங்களுக்குள்ளே இஸ்லாமிய சித்தாந்தங்களி லும் அனுஷ்டானங்களிலும் நன்கு பயிற்றுவித்து விடுவதென்பது ஒருபொழுதும் ஒருவராலும் முடி யாத காரியமாகவே இருந்திருக்கின்றது.

நபிகள் திலகத்திடம் தூது கோஷ்டிகளாக வந்து இஸ்லாத்தின் வித்துக்களை நெடுந்தூரப் பிரதேசங்களுக்கெல்லாம் சுமந்து சென்ற மனிதர்களனைவரும் இம் மார்க்கத்தின் ஆழிய தத்துவங்களை நன்குணர்ந்து கொண்டிருந்த போதினும், அப்படிப்பட்டவர்களெல்லாம் ஒரு மகா சமுத்திரத்தின் சிறுசிறு துளிகளாகவே அங்கங்கே சிதறிக் கிடந்தார்கள். எனினும், அப் பெரும்பான்மையான பொதுமக்கள்களெல்லாம் இஸ்லாத்தின் போதனைகளை ஒருவாறு உணர்ந்து கொள்ளுதற்கு வேண்டிய பிரயத்தனங்களையெல்லாம் நபிகள் திலகம் தங்களால் இயன்றமட்டும் செய்துகொண்டே வந்திருக்கிறார்கள். நபிகள் நாதருடனே நெருங்கிப்பழகி, தீனுல் இஸ்லாத்தின் தத்துவானுஷ்டானங்களையெல்லாம் நன்கு அறிந்துகொண்டிருந்த தோழர்களுள்ளிருந்து பிரசாரகர்கள் அடிக்கடி வெவ்வேறு வர்க்கத்தாரிடம் அனுப்பப்பட்டே வந்தார்கள். ஆயினும், அவ் வரப்நாடு முழுதுமுள்ள சகல மன்பதைக்கும் வேண்டிய பிரசாரகர்களையெல்லாம் உற்பத்திசெய்து அனுப்புவதென்பது அச்சுருங்கிய காலஅளவிற்குள்ளே ஒருபொழுதும் முடியாத பெருங் காரியமாகவும் காணப்பட்டே வந்தது.

*தூதுவந்த கோஷ்டியினர் பலர்*

நபிகள்திலகத்தின் இறுதிக்காலத்தில் அநேக வர்க்கத்தார்கள் ஒருவர்பின் னொருவராக நபிகள் நாதரிடம் தூதுகோஷ்டியை அனுப்பிக்கொண்டே யிருந்தார்கள். அவர்கள் அனைவருக்கும் வேண்டிய பிரசாரகர்களை அனுப்பிவைப்பதென்பது மதீனாவிலுள்ள முஸ்லிம்களால் கூடாமலே போய்விட்டதென்னலாம். மற்றும், மதீனாவி லிருந்துவந்த எல்லா முதற்றர முஸ்லிம்

களையும் அத் தலைநகரைவிட்டுப் புறநாடுகளுக்கு அனுப்பிவிடுவதென்பதும் ஓர் உசிதமான காரியமாய்க் காணப்படவில்லை. இவ்வாறு செய்வதைக் குர்ஆன் ஷரீபும் ஒருவாறு தடுத்துவந் திருக்கிறது; அவ்வேத உபதேசத்தின் பிரகாரம் இஸ்லாத்தின் சக்தி முழுதையும் சிதறவிடுவதைப் பார்க்கினும் அதனை ஒன்றுசேர்த்து மத்திய ஸ்தலத்தில் தேக்கி வைத்திருப்பதே சாலச் சிறந்ததாய்க் காணப்படாநின்றது; அந்தத் தலைநகராய் விளங்கிவந்த மதீனுவானது இஸ்லாமிய கலாஞானத்தின் மத்திபஸ்தலமாகத் திகழ்ந்துவர வேண்டி யிருந்தது; அங்கேதான் சுற்றுப்புறத்து மனிதர்களெல்லாம் விஜயம் செய்து, இஸ்லாத்தின் விதிமுறைகளனைத்தையும் தெரிந்துகொண்டு போகவேண்டும். எனவே, ஆங்கிருந்தேதான் மற்ற விடங்களுக்கெல்லாம் இஸ்லாத்தின் லெளகிக வைதிக சித்தாந்த அனுஷ்டான வித்துக்களெல்லாம் வெளியே பரத்தப்படுதல் வேண்டும்.

"மூமினுனவர்களெல்லாரும் (எல்லோரும்) அப்படியே புறப்பட்டுச் சென்றுவிடுவது நன்றன்று; எனவே, அவர்களினின்றும் ஒவ்வொரு பிரிவாருள்ளும் ஒரு கூட்டத்தார் மார்க்கசம்பந்தமான ஞானத்தைப் பெற்று, தங்கள் மனிதர்கள்பால் அவர்கள் திரும்பியக்கால் தங்கள் வர்க்கத்தவரான அவர்களிடம் (அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்ளும்படி) அவர்கள் அச்சமுறுத்தி எச்சரிக்கை செய்ய வேண்டாமா?" (குர். 9: 122).

ஆனல், இப்படிப்பட்ட திட்டமானது முதிர்ச்சி பெறுதற்குச் சிறிது கால எல்லையும் வேண்டப்படுமல்லவா? ஆயின், நபிகள்திலகம் இத்திட்டத்துக்கு

அஸ்திபாரமிட்டு விட்டார்களாயினும், பூர்த்தி செய்து வைத்தற்குப் போதிய அவகாசம் அவர்களுடைய இறுதிக்காலத்தில் இல்லாமலே போய்விட்ட தென்னலாம். இதனால் அப்பாலைவனத்தில் வசித்துவந்த பெரும்பான்மையான மக்கள்கள் அவ்விறுதிக் காலத்திலேயே தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டிருந்ததனால், இதன் உண்மையான பெருமைகளையும் ஆழிய தத்துவங்களையும் ஒரு சிறிதும் உணர்ந்து கொள்ள முடியாதவர்களா யிருந்துகொண்டு, இம் மார்க்கத்தை இலேசாக மதித்து வெளியே சென்று நின்றுகொண்டு, இதனுட்சியையும் எதிர்க்கத் தலைப் பட்டுவிட்டார்கள்.

எனினும், இதன் சார்பாகக் கூறுமிடத்து, மற்றொரு முக்கியமான விஷயத்தையும் நன்கு ஞாபகத்தில் பதியவைத்துக் கொள்ளுதல் வேண்டும். என்னெனின், அதுசமயம் அரபுநாடு முழுவதுமே தீனுல் இஸ்லாத்தைவிட்டு விலகிக்கொண்ட தென்று கூறத்துணிவதானது, சரித்திரபூர்வமாக ஆராயப் புகுமிடத்து, பெரும் பொய்யாகவே வந்துமுடியும் என்பதே தானுகும். அப் பரந்தநாடு முழுவதும் பல்லாயிரக் கணக்கான மக்கள் இஸ்லாத்தின் வட்டத்திற் குள்ளேயே இருந்து வந்தார்கள். ஆனல், பொய்த் தீர்க்கதரிசிகளின் ஆர்ப்பாட்டத்தால் தாத்காலிகமாக அம் முஸ்லிம்க ளெல்லாரும் தலைநகராகிய மதீனுவுடனே நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொள்ள முடியாதவர்களாய்ப் போய்விட்டார்கள். அவர்கள் இஸ்லாத்தை வெறுத்தொதுக்கித் தள்ளவு மில்லை; இம் மார்க்கத்துக்கு விரோதமாகக் கிளம்பிய பகைவர்களுடனே

ஜ(க்)காத் கொடுக்க மறுத்தவர்கள்

பகிரங்கமாகக் கலந்து கொள்ளவு மில்லை; ஆயின், கிளர்ச்சிக்காரர்களின் தொந்தரை மிகுதியால் அம் முஸ்லிம்க ளெல்லாரும் இஸ்லாமிய அரசாங்கத் தின் இராஜதானி நகருடனே நெருங்கிய சம்பந்தம் வெளிப்படையாக வைத்துக் கொள்ள முடியாது போய்விட்டார்கள். மற்றும்பலர் தங்கள்மீது ஜ(க்)காத் தென்னும் ஏழை விகிதம் விதிக்கப்படக்கூடா தென்று மட்டுமே எதிர்வாதம் பேசிக்கொண் டிருந்தார்கள்.*

அரபிகளின் யதேச்சாபிரியம்

அந்த அரபிக ளெல்லாரும் சுயேச்சையிலே பிறந்து சுயேச்சையிலேயே வளர்ந்து வந்த காரணத் தால் அந்தப் பாலைவன வாசிகளுக்குக் கட்டுப்பாடென்னும் அரசியல் முறைப் படியாயுள்ள மத்திய அரசாங்கம் இப்ப டிப்பட்ட தென்னும் கருத்தென்பதே ஒருசிறிதும் விளங்காமற் போய்க் கிடந்தது; ஆதிக்யமும் அதிகார மும் மத்திய ஸ்தானத்தில் வகிக்கப்பட வேண்டு மென்றும், அப்படிப்பட்ட அரசாங்கத்திற்கு மற்றெல் லாரும் அடங்கிநடக்க வேண்டுமென்றும் கூறப்பட்டு வரும் ராஜீயக்கொள்கை இன்னதுதா னென்பதை அவர்கள் அறவே அறியமாட்டார்கள். அந்தக் காட் டரபிக ளெல்லாரும் இவ் வுலகிலுள்ள மற்றெல்லா வற்றைப் பார்க்கினும் தத்தமக்குரிய இனத்தாரின்

---

* ஜ(க்)காத் தென்பது ஏழை முஸ்லிம்களின் நன்மையின் பொருட்டுப் பணக்கார முஸ்லிம்களிட மிருந்து வசூலிக்கப்படும் ஒருவகை (நாற்பதிலொரு) விகிதவரியாகும். பொதுப்படையாக நோக்கு மிடத்து, ஓராண்டின் மிகுதிப்பொருள் ரூ. 52-8-0 ஆக இருக்கும் போழ்து, அம்முதலுக்கும் அதற்கு மேற்பட்ட தொகைகளுக்கும் 40-இல் ஒன்று விகிதம் வசூலிக்கப்படுவதே அந்த ஏழை விகிதத்தின் கணக் காகும்.

சொந்தச் சுயேச்சையையே மகா பெரிதென மதித்து வந்தார்கள். இஸ்லாத்திற்கு முன்னே பன்னூற்றுக் கணக்கான ஆண்டுகளாக எப்படிப்பட்ட தங்கு தடையுமின்றி யதேச்சையாய் அலைந்து திரிந்துகொண்டிருந்த அவ்வரபிகள் தத்தமக்குரிய சொந்த அதிகாரத்தையல்லது பிறிதோர் அதிகாரத்திற்கு அடங்கி நடப்பதென்பதை அணுத்துணையும் சகிக்கக் கூடாதவர்களாகவே இருந்து வந்தார்கள். ஆனால், இஸ்லாமோ, அப்படிப்பட்ட ஒன்ருேடொன்று இணக்கமில்லாது தனித்தனியான இதரத்தை (பாதரஸத்தை)ப் போன்று சிதறிக்கிடந்த பல்வேறு வர்க்கத்தினர்களையெல்லாம் ஒரே ஒற்றுமையாய் உள்ள ஏக சகோதரத்துவத்திற் குள்ளே இணைத்து வைக்க முயன்றுவந்தது.

ஜ(க்)காத் கொடுக்க மறுத்த காரணம்

அந்த அரப்தேயப் பாலைவனத்தின் கருமணல்களே போலே உதிர்ந்துகிடந்த மக்கள்களைக் கொண்டு இஸ்லாம் மார்க்கம் ஒற்றுமையும் பலமும் சகோதரப் பிணிப்பும் மிகுந்துள்ள ஒரே ஜாதியாராகப் பிணைத்து வைப்பதற்குப் பாடுபட்டு வந்திருக்கிறது. இந்த இரகசியத்தை அந்த அரபிகள் அறிந்துகொள்ள முடியாதவர்க ளாகவே காணப்பட்டு வந்தார்கள். தேசிய ஒற்றுமை முன்னேற்றத்தின் நிமித்தம் பகிரங்கப் பொதுகஜாஞ ஒன்று (பைத்துல் மால்) ஏற்படுத்தப் படுவதன் பெருமையை அவர்கள் எங்ஙனம் அக்காலத்திலே அறிந்திருத்தல் கூடும்? எனவேதான் அவர்களுள் பலர் ஜ(க்)காத் தென்னும் கட்டாயவரியைக் கொடுக்க மறுத்துவிட்டார்கள். இன்னம், தேசமுழுவதும் இருந்துவந்த மிகக் குழப்பமான நிலை

மையைக் கண்டதும், அவர்கள் அவ்வாறு ஜ(க்)காத் விகிதத்தைக் கொடுக்க மறுத்தற்கு வேண்டிய மனோ தைரியத்தை அஃது அளித்துவிட்டதென்னலாம். ஆனால், ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் மட்டும் இவ் விஷயத்தில் மிகக் கடுமையாகவே இருந்துவந்தார்கள். அரப்தேச ஒற்றுமை, அரபிகளின் கட்டுப்பாடு என்னும் நோக்கமே அவர்களது முதன்மையான நன்னோக்கமா யிருந்துவந்தது; ஆகவே, அவ்வாறு பொதுவரிகளைக் கொடுக்க மறுத்தோரை மன்னித்துவிடுவதென்றால், அஃதொன்றே அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசை வேர்கல்லிப் புரட்டிக் கீழே உருட்டித் தள்ளி விடக் கூடுமென்று நன்கு தெரிந்துகொண்டு விட்டார்கள். இஸ்லாத்தின் க்ஷேமமானது முஸ்லிம்கள் கட்டுப்பாடாய் இருக்கக்கூடிய ஒரு வகைத் தேசிய உணர்ச்சியையே முழுதும் சார்ந்திருக்கிறதென்று இம்மகான் தீர்க்க திருஷ்டியுடனே தீரத் தெளிந்து கொண்டிருந்தார்கள்.

முதல் கலீபாவின் தீரம்

இக் காரணத்தினாலேதான் இந்த முதல் கலீபாவானவர் வரிகொடுப்பதில்லையென்னும் அந்தச் சட்ட மறுப் பியக்கத்தை எவ்வாற்றானும் நசுக்கியே அழித்தொழித்துவிட வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு விட்டார்கள். எனவே, இப்பெரியார், ஜ(க்)காத்தைக் கொடுக்க மறுத்த எல்லா வர்க்கத்தினர்களுக்கும், அவரவர்கள் தத்தம்மால் செலுத்தப்பட வேண்டியிருந்த ஜ(க்)காத்துத் தொகையை உடனே கொண்டுவந்து கொடுத்துவிட்டாலல்லது, அவரவர்மீதும் யுத்தந் தொடுக்கப்படுமென்னும் கடுமையான கட்டளையை இறுதியாக அனுப்பி விட்டார்கள். என்னெனின்,

மத்திய அரசாங்கத்துக்கு வரிசெலுத்த மறுப்பதென்பது அதற்கு விரோதமாகக் கலகம் கிளப்புவதாக மாட்டாதன்றோ?

ஆகவே, மேற்கூறியவாறாக வெல்லாம் நபிகள் திலகத்தின் நிர்யாணத்திற்குப் பிறகு ஏற்பட்டுவிட்ட குழப்பத்திற்கு மூன்று விதமான காரணங்கள் காணப்பட்டு வந்தன வென்னலாம்: முதன்முதலாக, பொய்த் தீர்க்கதரிசிகளின் மாயவலைகளுள்ளே ஒருசிலர் சிக்கிச் சுழன்றுகொண் டிருந்தனர். இரண்டாவதாக, மத்தியகஜானாவில் வரி கொண்டுவந்து செலுத்த மறுத்தவர்கள், கலகக்காரர்களுடனே கலந்து கொண்டவர்களே போலக் காணப்பட்டு வந்தார்கள். மூன்றாவதாக, முஸ்லிம்களாயிருந்தும் இராஜதானி முஸ்லிம்களுடனே கலந்துகொள்ள முடியாமற் போய்விட்டவர்கள். இப்படிப்பட்டவர்கள் மதீனாவுடன் சேர்ந்து கொள்ள முடியாமலும், கலக கோஷ்டியாரை எதிர்த்துத் தாக்கச் சக்தியில்லாமலும் போய்விட்ட காரணத்தினாலே ஒன்றும் செய்துகொள்ள முடியாதவர்களாய்ப் போய் வெறுமையாகக் கையைக் கட்டிக் கொண் டிருந்துவிட்டார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக்ரலி அவர்கள் கலீபாவின் ஸ்தானத்தை ஏற்றுவகிக்க ஆரம்பித்தகாலத்தில் அரப் நாட்டின் நிலைமையானது அவ்வா றிருந்துவந்தது. அவ்வண்ணமாக நாலு திக்குக்களிலும் சங்கடங்களும் கிளர்ச்சிகளும் இருந்து வந்திருந்தும், இந்த கலீபாவானவர் சிறிதும் துளக்கமில்லா மனத்துடனே தைரியமாக எழுந்துநின்று, அந்தக் குடியரசு ராஜ்ஜியத்தில் காணப்பட்ட முதற்றரமுள்ள தீரபுருஷர்களை யெல்லாம் பொறுக்கி யெடுத்து, நபிகள் திலகத்தின் கட்

டனைக்கிணங்க, சிரியாநாட்டை நோக்கி ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். அதுபோழ்து மதீனாவை விட்டு எல்லாப் போர்வீரர்களையும் அப்புறப் படுத்தி விட்டு, அவ் வபாயகரமான வேளையிலே ராஜதானியின் தலைநகரைப் போதுமான பாதுகாப்பில்லாது விட்டுவிட்டதானது, ராஜ்ஜியதந்திர நிபுணத்துவத்திற்கு முரணா யிருக்கின்றதென்று ஒருசிலர் தீர்மானம் செய்துவிடுதல் கூடும். எனினும், இவ்வாறு ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் மிகத் துணிச்சலுடனே செய்து முடித்த காரியமானது அப்பெரியாரது மனோதைரியத்தையும் சத்தியத்தின் மாட்டுள்ள கடைப்பிடியையும் அதிபகிரங்கமாகவே வெளிப்படுத்திக் காட்டிக்கொண்டிருக்கிறது. இவ்வாறு அந்தத் தலைவர் செய்துகாண்பித்த உதாஹரணத்தினால் ஏனைய முஸ்லிம்களும் அளவில்லாத தைரியத்தையே அடைந்துகொண்டு விட்டார்களென்றே கூறி முடிக்கலாம்; ஆதலின், மதீனாவின்கண்ணே விடப்பட்டிருந்த ஒருசில முஸ்லிம்களே அத்தலைநகரைத் தற்காத்து இரக்ஷிக்கவும் துணிந்து விட்டார்கள். ஆகவே, மதீனாவின்கண்ணும் அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் கிடைத்தற்குரிய சகல மனிதர்களும் ஒன்று திரட்டப்பட்டு, அந்நகரைநோக்கி வெளியிலிருந்து வருதற்குரிய எல்லாவிதமான பாதைகளும் சர்வ ஜாக்கிரதையுடனே அல்லும் பகலுமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தன.

துலைஹாவின் தூண்டுதல்

பொய்த் தீர்க்க தரிசிகளுள் ஒருவனாய் விளங்கி வந்த துலைஹா வென்பான் தன்னுடைய சகோதரனை யனுப்பி, மதீனாவிற்கு வட புறத்தில் வசித்துவந்த பதவீ வர்க்கத்தினரையெல்லாம் கிளர்ச்சிசெய்யுமாறு

தூண்டிவிட்டான். அந்தக் கிளர்ச்சியால் பெருந்திரளான சேனையொன்று திரட்டப்பட்டு விட்டபோதினும், அவர்களெல்லாம் இஸ்லாத்திற்கு விரோதமான மனப் பான்மையைக் கொண்டிராதவர்களாகவே இருந்துவந்ததனால், துலைஹாவுடன் சேர்ந்து கொண்டு தீனுல் இஸ்லாத்திற்கு விரோதமாக யுத்தம் தொடங்க விருப்பமில்லாதவர்களாகவே அமர்ந்து வந்தார்கள். அவர்கள் இவ்வாறு செய்ததற்குக் காரணமும் இல்லாமற் போய்விடவில்லை. என்னெனின், அவர்களனைவரும் கலீபாவிடம் தூதுகோஷ்டியொன்றை யனுப்பிவைத்து, ஜ(க்)காத் விகிதம் கொடுப்பதினின்று தங்களை விலக்கிவிடுமாறு வேண்டிக்கொண் டிருந்தார்கள். இவ்வாறு அவர்கள் கேட்டனுப்பியதை மதீனாவாசிகள் ஒரு தெய்வகடாக்ஷமென்றே கருதத் துணிந்து விட்டார்கள் : அதுசமயம் அரப்நாடு இருந்து வந்த நிலைமையை யுன்னி, அந்த பதவீகளின் கோரிக்கையின் பிரகாரம் அந்த ஜ(க்)காத் விகிதத்தை மன்னித்து விடுவதே சாலச் சிறந்ததென்று அபிப்பிராயங் கூறவும் பலர் ஆரம்பித்து விட்டார்கள்.

கலீபாவின் தீர்க்க திருஷ்டி

ஆனால், ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் மட்டும் நெடியதொரு தீர்க்கதிருஷ்டி வாய்க்கப் பெற்றவர்களாக அமைந்திருந்தார்கள். இப்படிப் பட்ட ஜ(க்)காத் விஷயத்தில் அந்த பதவீகளின் கோரிக்கைக்கு இணங்கி விடுவதனால் எத்துணைப்பெரிய விபரீதங்களெல்லாம் பின்னர் விளைந்துவிடக் கூடுமென்பதை இந்த கலீபாவானவர் மிகநன்கு யறிந்துகொண்டே யிருந்தார்கள். இவ்வாறு ஒரு வர்க்கத்தாரின் வேண்டுகோளுக்கு

இணங்கிவிடக் கூடுமாயின், இவ் வண்ணமாகவே மற்றெல்லாரும் ஒவ்வொருவராக அந்த ஜ(க்)காத்தி னின்று விலகிக் கொள்ளவே விண்ணப்பம் அடிக்கடி செய்துகொண் டிருப்பார்களென்பதை இந்த கலீபா வானவர் செவ்வனே உணர்ந்து கொண்டு விட்டார் கள். அதுவேயுமன்றி, ஜ(க்)காத் கொடுக்க வேண்டு மென்பது குர்ஆன் ஷரீபில் கூறப்பட்டிருக்கும் இஸ் லாத்தின் ஐந்து முக்கிய கடமைகளுள் ஓர் அத்தியா வசியக் கடமையாக இருந்துவருங்கால், ஆண்டவனால் ஆணையிடப்பட்டுள்ள அந்த அத்தியாவசியக் கடமை யைத் தள்ளி விடுவதற்குத் தங்களுக்கொன்றும் அதி காரமில்லை யென்றே ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் நிதானித்துப் பார்க்கத் தொடங்கினார்கள். எனவே, இந்த கலீபாவானவர் சமயோசிதம் என்னப்படும் எல்லாவிதமான ராஜ்ஜியதந்திரங்களையும் ஒருபக்கல் ஒதுக்கி வைத்துவிட்டு, நாலு திசைகளிலும் கம்மிக் கொண்டிருந்த எல்லாவிதமான இருண்ட கார் மேகங்களென்னப்படும் யுத்த ஆரவாரங்களுக்கு முன்னேயே தங்கள் தீர்மானமே சரியானதென்று ஒரே பிடிவாதமாகப் பற்றிப்பிடித்துக் கொண்டு விட் டார்கள். “ஜ(க்)காத் விகிதத்தினின்று ஓர் ஒட்ட கத்தைக் கட்டுதற்குரிய கயிற்றின் அளவேனும் பைத் துல்மாலில் சேர்க்கப்படாமல் விட்டு விடப்படக் கூடு மாயின், அதற்காகவுங்கூட யுத்தம் தொடங்கப்படும்,” என்று ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் மிகக் கடுமை யாகக் கூறிவிட்டார்கள். இவ்வாறாக இந்தப் புதிய குடியரசுத் தலைவர் ஒரே மூர்த்தன்னியமாகக் கூறி விட்டதனால், மதீனாவின் நிலைமையானது இன்னம் மகாமோசமான நிலைமைக்கே வந்து முடிந்துவிட்ட

தென்னலாம். ஆகவே இந்த கலீபாவானவர் எல்லா முஸ்லிம்களையும் திரட்டி, அவர்களெல்லாரும் ஒவ்வொரு விநாடியும் தத்தமக்குரிய சர்வ ஜாக்கிரதையுடனேயே இருந்துவர வேண்டுமென்று அறிவித்து வைத்தார்கள். எந்த நிமிஷத்திலும் மதீனாநகர் எதிரிகளால் தாக்கப்பட்டுவிடக் கூடும்; ஆதலின், ஹஜ்ரத் அலீ[ரலி] ஜுபைர்[ரலி] தல்ஹா[ரலி] ஆகிய மூவரும் அந்தத் தலைநகரைப் பாதுகாத்தற்குரிய அதிபர்களாக நியமிக்கப்பட்டு விட்டார்கள்.

இஸ்லாத்தின் மத்திய ராஜ்ஜியத்திற்கு விரோதமாகக் கிளம்பிய கலகக்காரர்கள் துல்கஸ்ஸா என்னுமிடத்தில் வந்து சேர்ந்து, பாடிவீடும் செய்து கொண்டார்கள். அங்கே மூன்றுநாட்களைக் கழித்துவிட்டு, அவர்களனைவரும் மதீனாவின் மீது படையெடுத்து வந்தார்கள். அதுசமயம் மதீனாவின் தலைவாயிலில் காவல் காத்துக்கொண் டிருந்தவர்கள் உடனே கலீபாவுக்குச் செய்தியனுப்பி வைத்தார்கள். அக்கணமே ஆங்கிருந்து வந்த முஸ்லிம்களெல்லாரும் எதிரிகளைத் தாக்க எதிர்நோக்கிச் சென்றார்கள். ஆனால், அந்நகர் மீது படையெடுத்து வந்த பதவீகள் அப்படிப்பட்ட எதிர்ப்பை ஆங்கிருந்து எதிர்பார்த்திருக்கவில்லை. ஷாம்தேசத்தை நோக்கிப் பெருந்திரளான படையொன்று அனுப்பப்பட் டிருந்தமையால் மதீனாவானது முழுவதும் தற்காப்புச் சைன்லியம் இல்லாமலேயே இருந்துவந்த தென்றேதான் அந்தக் காட்டரபிகள் எல்லாரும் கருதிக்கொண் டிருந்தார்கள். ஆயின், அவர்களுடைய எதிர்நோக்கத்திற்கு விரோதமாக முஸ்லிம்கள் ஒருமிக்கத் திரண்டு வந்ததைக் கண்டு,

**மதீனாவின் மீது எதிரிகள், தாக்கியது தடுக்கப் பட்டது**

அந்த பதவீகள் அனைவரும் புறமுதுகிட்டு ஓட்டம் பிடித்து விட்டார்கள். ஆனால், முஸ்லிம்கள் மட்டும் சிறிது தூரம்வரை அந்தக் கலக கோஷ்டியாரைத் துரத்திக்கொண்டே சென்று விட்டுத்தான் திரும்பி வந்தார்கள்.

ஆயினும், அன்றிரா முதுவதும் ஹஜ்ரத் அபூ பக்ர் ரலி அவர்கள் தங்களால் திரட்டக்கூடிய மனிதர்களை யெல்லாம் ஒன்று சேர்த்துக்கொண்டு மறுநாட் காலையில் பொழுதுபுலரும் தருணத்திற்குச் சற்று முன்னே மீட்டும் அந்தப் பதவீகள் மீது தாவிச் சென்றார்கள். இத்தகைய எதிர்ப்பைத் தடுத்துக்கொள்ள மாட்டாது அந்தக் காட்டரபிகள் ஓட்டம்பிடித்து விட்டார்கள். ஆனால், இந்த கலீபாவானவர் துல்கஸ்ஸா வென்னு மிடத்தில் ஒரு சைன்னியத்தை இருக்கச் செய்துவிட்டு, மதீனாவிற்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். இத்தகைய வெற்றியால் அதிகமான பிரயோஜனமும் உண்டாகாமற் போய்விட வில்லை. என்னெனின், முஸ்லிம்க ளெல்லாருக்கும் அதிகமான மனோதைரியம் உண்டாய்விட்டதென்னலாம்; அதுசமயம் எதிர்த்து வந்த பதவீகளுக்கும் ஒரு சரியான பாடமே செம்மையாகக் கற்றுக் கொடுக்கப்பட்டது. ஆகவே, மதீனாவின்கண் இருந்து வந்த மத்திய ராஜ்ஜியமானது எப்படிப்பட்ட கிளர்ச்சிகளாலும் கவிழ்த்துவிடப்பட முடியாதவாறு அத்துணைப் பலம் பொருந்தியதாக இருந்ததென்பதை நன்கு தெரிந்துகொண்டு விட்டார்கள். சிரியாநாட்டை நோக்கிப் பெரும்படையொன்று அனுப்பப்பட்டிருந்துங்கூட மதீனாவின் கண் எஞ்சியிருந்த ஒருசில முஸ்லிம்களே அந்தக் கலகக்கார எதிரிகளை யெல்லாம்

தடுத்துத் துரத்தியடிக்கக் கூடியவாறு அத்துணைச் சக்திபெற் றிருந்தார்களென்பதும் செவ்வனே துலக்கமாய்விட்டது. இதனால் மதீனாவின் குடியரசுப் பெருமையானது நாற்புறத்தும் நெடுந்தூரம்வரை பரவிச் சென்றுகொண் டிருந்தது; ஆதலின், அதுவரை ஐ(க்) காத்விகிதத்தை அனுப்பா திருந்துவந்த கோஷ்டியார்களெல்லாரும் ஆங்காங்கிருந்து தத்தமக்குரிய பாக்கித் தொகைகளை யெல்லாம் இடையறாது அனுப்பத் தலைப்பட்டு விட்டார்கள். ஆகவே, கலகக்காரர்களும் பொய்த் தீர்க்கதரிசிகளும் தத்தமக்கிருந்துவந்த தைரியத்தை யெல்லாம் சிறுகச்சிறுக இழக்கத் தலைப்பட்டு விட்டார்கள். இப்படிப்பட்ட வெற்றிகளெல்லாம் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் எடுத்துக்கொண்டிருந்த தைரியமான உறுதிப்பாட்டின் காரணத்தினாலேதான் ஒன்றன்பின் ஒன்றாக அம் முஸ்லிம்களுக்குக் கைகூடி வந்திருக்கின்றன. அற்றைநாளில் காணப்பட்டுவந்த மகாபயங்கரமுள்ள கடும்புயற் காற்றுடன் கூடிய பேரலை நிறைந்த கலகக் கொந்தளிப்புக் கடலினூடே இஸ்லாமெனும் மரக்கலத்தை ஒரு பத்திரமான துறைமுகத்திற்குள்ளே கொண்டுபோய்ச் சேர்த்த பெருமையனைத்தும் அந்த முதல் கலீபாவாய் விளங்கிவந்த ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களையே சார்ந்ததா யிருக்கின்றது.

இதற் கிடையே உஸாமா வென்பார் தம்முடைய ஷாம்தேச வேலையை ஒருவாறு முடித்துக்கொண்டு, அளவிறந்த வெற்றியுடனே தலைநகருக்குத் திரும்பி வந்து சேர்ந்தார். உடனே கலீபாவானவர் அந்த உஸாமாவை மதீனாவின் தற்காப்புத் தலைவராக நியமித்து விட்டு, தாமே ஒரு சிறிய சைன்னியத்துடனே, கலகக்காரர்கள் குழுமியிருந்த ரப்லாவென்னும் (மதீனாவி

லிருந்து 3 நாள் பிரயாண தூரத்திலுள்ள) இடத்தை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்கள். அவ் விடத்திலே அந்தக் கலகக்காரர்கள் தோல்வியடைந்து, ஆங்கிருந்து ஓட்டம்பிடித்துச் சென்று, துலைஹாவின் கலககோஷ்டியுடனே சேர்ந்துகொண்டு விட்டார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள், இஸ்லாத்தின் குடியரசுக்கு விரோதமாய்க் கிளர்ச்சிசெய்து கலகம் பண்ணக் கிளம்பிய கூட்டத்தார்களையெல்லாம் அடியோடு நிர்மூலமாக்கி விடுதற்காகவே கங்கணங் கட்டிக்கொண்டு புறப்பட்டுவிட்டார்கள். அது காலை இருந்துவந்த முஸ்லிம் சைன்னியத்தையெல்லாம் பதினொரு படைகளாகப் பிரித்து, அவற்றுள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு கைதேர்ந்த தளபதியின் கீழே அமர்த்திவைத்து, அவர்களனைவரையும் ஏக காலத்தில் வெவ்வேறிடங்களுக்கு அனுப்பி வைத்தார்கள். காலிதிப்னு வலீதென்பார்ரலி முதன்முதலாகத் துலைஹாவை எதிர்த்துச்செல்ல வேண்டுமென்றும், அதன்பின்பு மாலிக் பின் நுவைராவின்மீது படையெடுத்துச் செல்லவேண்டுமென்றும், கட்டளையிடப்பட்டிருந்தார். இக்ரிமா பின் அபூஜஹ்ல் என்பார்ரலி முஸைலமாவை எதிர்த்துத் தாக்கும்பொருட்டு அனுப்பப்பட்டார்; ஷரஹ்பீல் பின் ஹஸனா என்பார்ரலி இக்ரிமாவுக்குத் துணைப்படை கொண்டு செல்ல வேண்டுமென்று ஆணையிடப்பட்டிருந்தார். முஹாஜிர் பின் அபூ உமைய்யா என்பார்ரலி அஸ்வத் அன்ஸீயின் படைகள்மீதும் எமன்மீதும் ஹலரமௌத்தின் மீதும் படையெடுத்துச் செல்லவேண்டுமென்று திட்டப் படுத்தப்பட்டார். மற்றொருபடை சிரியா தேசத்தின்

பற்பல இடங்களுக்குப் படைகளை அனுப்பியது

எல்லைப்புறத்தைப் பாதுகாத்து வரும்பொருட்டு, காலித் பின் ஸயீதின் தலைமையில் ஆங்கனுப்பப்பட்டு விட்டது; மற்றிரண்டு படைகள் ஹுஜைபா பின் முஹ்ஸின் ரலி அர்பஜா பின் ஹர்தமாவின் தலைமையில் உம்மானிலும் மெஹ்ராவிலும் கிளம்பிய எதிர்ப்புக்களை அடக்கிவருமாறு அனுப்பி வைக்கப்பட்டன; இன்னமொரு படை அம்ரிப்னு ஆஸ் ரலி அவர்கள் தலைமையில் குஜாஆ என்னும் கூட்டத்தாரின் கிளர்ச்சியை நசுக்கி வருமாறு திட்டப்படுத்தப் பட்டது. வேறொரு படை முயின் பின் ஹாஜிஜ் ரலி அவர்கள் தலைமையில் பனூ ஸலீம், ஹவாஜின் என்னும் இரண்டு வர்க்கங்களுடனும் எதிர்த்துப் போர்புரிய நிச்சய மாக்கப்பட்டது. இப்படியே, ஸுவைத் பின் முக்ரின் ரலி அவர்கள் தலைமையில், திஹாமாவில் கிளம்பிய கலகக்காரர்களையும், அலா பின் ஹல்ரமீ ரலி அவர்கள் தலைமையில், பஹ்ரைனில் உண்டாயிருந்த குழப்பத்தையும் அடக்கிவர வேண்டுமென்று சைன்னிய ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், ஹஜ்ரத் அபூபக்ர்சித்தீக் ரலி அவர்கள்மட்டும் மதீனாவையே தங்கள் மத்திய ஸ்தலமாக வைத்துக் கொண்டு, எல்லாப் படைகளின் இயக்கத்தையும் பொதுத் தலைவ ரென்னும் முறையிலே கவனித்த வண்ணம் அவைகளுக்கு வேண்டிய கட்டளைகளையெல்லாம் தனித்தனியே அனுப்பிக்கொண் டிருந்தார்கள்*. இன்னம் அப்பெரியார் தங்களுடைய கீழ்ப்பட்ட

* ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக் ரலி அவர்களுடைய கிலாபத்தின் போழ்து, ஹஜ்ரத் உமரெபாரூக் ரலி அவர்கள் பிரதமமந்திரியா யிருந்தார்கள். அன்றியும் பாரூக் ரலி அவர்களே, காஜியுல் குஜாத் (பிரதம நீதிபதி) உத்தியோகத்தையும் பார்த்துவந்தார்கள். ஹஜ்ரத் அலீ ரலி ஹஜ்ரத் உதுமான் பின் அப்பான் ரலி ஜைத் பின் தாபித் ரலி அப்துல்லா பின்

உத்தியோகஸ்தர்க ளுக்கும், அங்கங்கே வசித்துவந்த கூட்டத்தினர்க ளுக்கும் அடியிற் காணுமாறு ஒரு சுற்றுவிளம்பரம் அனுப்பி வைத்தார்கள் ; அவ்வவ் விடத்திலுள்ள மாந்தர்களுடனே வியவகாரத்தை நடத்திவருங்கால், அவ்வுத்தியோகஸ்தர்க ளனைவரும் அதிக நிதானத்துடனும் பக்ஷத்துடனுமேயே நடந்து கொள்ள வேண்டு மென்றும், யுத்தத்தில் இறங்கு முன்னே அந்தத் தளபதிகள் எல்லாரும் எதிர்த்துநிற் கும் கூட்டத்தினரை இஸ்லாத்தின் பக்கல் அழைக்க வேண்டு மென்றும், அவ்வக் கூட்டத்தினர் இவர்க ளுடைய சமாதான அழைப்பைச் சர்ந்தமாக ஏற்றுக் கொள்வார்களாயின், அவர்களுடனே யுத்தம் தொடங் கக்கூடாதென்றும், அம்மனிதர்கள் இவர்களுடைய அழைப்பை அங்கீகரிக்க மறுத்து, மீட்டும் கலக எண் ணங்கொண்டிருந்தால் மட்டுமேதான் அவர்கள்மீது இம் முஸ்லிம்கள் யுத்தம் தொடங்க வேண்டுமென்றும் அந்த விளம்பரத்தில் அழுத்தமாகக் குறிப்பிடப்பட் டிருந்தன. முஸ்லிம்கள் தொழுகைக்கு அழைக்கும் வழக்கத்திற்கு ஏற்றமாதிரியில் பாங்குசொல்லிவரும் பழக்கத்தை மேற்கொண் டிருத்தலே அவ்வக் கூட்டத் தினர் முஸ்லிம்களா யிருக்கிறார்க ளென்பதைத் தெரிந்துகொள்ளுதற்குரிய போதிய அடையாளமாகக் கருதப்பட வேண்டுமென்றும் அந்தச் சுற்றுவிளம்பரத் தில் ஒரு நிபந்தனை சுட்டிக்காட்டப்பட் டிருந்தது.

---

அர்க்கம்ரலி ஏனை மந்திரிகளா யிருந்துவந்தார்கள். அவசியப்படும் அமயத்தில் இம்மந்திரிமார்களே கணக்கரே போல எழுதிக்கொண்டு மிருப்பார்கள். ஹஜ்ரத் அபூ உபைதா பின் ஜர்ராஹ்ரலி அவர்கள் பைத் துல்மாலின் (பொதுநிதி நிலயத்தின்) தலைவரா யிருந்துகொண்டிருந் தார்கள்.

அவ்வா றெல்லாம் பல்வேறு படைகளைப் பலப் பல ஸ்தலங்களுக்கும் அனுப்பியதன் நோக்கம் இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளப்பப்பட்ட கலகங்களை யெல்லாம் நசுக்குவதாகவே தான் இருந்துவந்த தென்பதை ஒவ்வொருவரும் நிச்சயமாகத் தத்தம் உள்ளத்தின்கண்ணே உறுதிப்படுத்தி வைத்துக்கொள்ளுதல்வேண்டும். அரசாங்கத்திற்கு விரோதமாகக் கிளப்பப்படும் அராஜகப் புரட்சியியக்கங்களையெல்லாம் அடியோடு நசுக்கியொழித்து, அவற்றிற்குரிய தலைவர்களையும் தூக்குமரத்திற் கனுப்பி, அவசியமாயின் அக்கலககோஷ்டியார்மீது யுத்தமும் தொடங்குவ தென்பதும் சட்டத்திற் கிணங்கிய காரியமே யென்றுதான் ஒவ்வொரு நாகரிகமுள்ள அரசாங்கமும், இக் காலத்திலுங்கூட எண்ணிவருகின்றது. ஆனல், இதனைப் பார்க்கினும் அவர்கள் மீதெல்லாம் படையெடுத்துச் செல்வதற்கு வேறுபல காரணங்களும் அதுசமயம் இல்லாது போகவில்லை. முதன்முதலாக அந்தக் கலககோஷ்டியார்க ளெல்லாம் அங்கங்கே காணப்பட்ட சமாதானத்துக் குட்பட்டு நடந்துவந்த முஸ்லிம்களையெல்லாம் வேண்டுமென்றே அக்கிரமமாகக் கொலை புரிந்து கொண்டு, இராஜப் புரட்சியும் அராஜகக் கிளர்ச்சியும் அதிகம் செய்துவந்தார்கள். இன்னம், அவர்கள் இஸ்லாத்தின் குடியரசுக்குரிய சட்டதிட்டங்களை யெல்லாம் அடியோடு புரட்டிக் கவிழ்த்துவிடப் பார்த்தார்கள். அப்படிப்பட்ட அபாயகரமான வேளையில் கலீபாவானவர் எள்ளத்துணை யேனும் இலேசாக விட்டிருப்பார்க ளாயின், காரியம் அதிகமாகக் கெட்டுப்போய், இஸ்லாமிய ராஜ்ஜிய முழுதிலுமே

அவ்வாறு படைக ளனுப்பியதன் நோக்கம்

பெரியதோர் அராஜகப் புரட்சிக்கே இடம்பாடுண்டா யிருக்கும். இன்னமும், அப்படிப்பட்ட கலக கோஷ்டியார்களுக்கு இடையிடையே வதிந்துவந்த, இஸ்லாத்தின் மாட்டுள்ள தங்கள் ஈமானை (உறுதியை)த் தளர்த்திக் கொள்ளாது பூரணராஜவிசுவாசத்துடனே இருந்துவந்தவர்க ளெல்லாரும் மத்திய ராஜ்ஜியத்துடனே சம்பந்தம் வைத்துக்கொள்ள முடியாமல் தடுக்கப்பட்டுக் கிடந்தார்கள். உதாஹரணமாக, ஹலரமௌத், பஹ்றைன் போன்ற நெடுந்தூரப் பிராந்தியங்களிலுங்கூட ராஜவிசுவாசமுள்ள முஸ்லிம்களுக் கிடையிடையே கலகக்காரர்களும் முளைத்துக் கொண் டிருந்தார்கள்.

இன்னம், அநேக இடங்களில் இஸ்லாமிய ராஜ்ஜியத்திற்கு விரோதமாய்க் கிளம்பிய ஒவ்வொரு கூட்டத்திற்கும் அருகருகே ராஜவிசுவாசமுள்ள முஸ்லிம்களும் இருந்துகொண்டு, அக்கலக கோஷ்டியார்களுட னெல்லாம் சேர்ந்துகொண்டு, கிளர்ச்சி செய்ய மறுத்துவந்தார்கள். இவ்வாறெல்லாம் இருந்துவந்த சந்தர்ப்பங்களுக் கிடையில், கலீபாவானவர், யுத்தம் தொடங்குவதற்கு முன்னரே அவ்வக் கூட்டமும் முஸ்லிம்களா யிருந்தனரா ? இல்லையா ? என்பதை ஆங்காங்குச் சென்ற தளபதியும் அறிந்து கொள்ளவேண்டு மென்று விடுத்த கட்டளையானது முற்றிலும் நியாயமுள்ள தாகவே காணப்படா நின்றது ; ஆனால், எந்த முகாந்தரத்தைக் கொண்டும் இத்தகைய கலீபாவின் தாக்கீதானது முஸ்லிம்களல்லாதவர்களை யெல்லாம் முஸ்லிம்களாய் விடுமாறு கட்டாயப் படுத்துவதற் காகவேதான் விடுக்கப் பட்டதென்று அனுமானிப்பதற்கு அணுத்துணையும்

காரணம் புலப்படவில்லை. உண்மையாகவே, இஸ்லாம் மதத்திற்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்துவந்த கலகக்காரர்கள் இன்னார் என்றும், இராஜவிசுவாசமுள்ள முஸ்லிம்கள் இன்னாரென்றும் பாகுபாடுசெய்து பிரித்துணர்ந்து கொள்ளுதற்கு அப்படிப்பட்ட சுற்றுவிளம்பரமொன்று எல்லாத் தளபதிகளுக்கும் எல்லாப் பொதுமக்களுக்கும் அறிவிக்கப்படல் வேண்டுவது ஓர் அத்தியாவசியமாகவே அதுசமயம் காணப்பட்டு வந்திருக்கிறது. ஒரு கூட்டத்தினர் இஸ்லாத்திற்கு விரோதமாகக் கலகம் செய்ததைக் கண்டு, அதற்குள்ளே ஐக்கியமாய்க்கிடந்த சகல கோஷ்டியார்களும் அப்படிப்பட்ட கலகத்தில் சேர்ந்தவர்களே யென்று தீர்மானிக்கப்பட்டுப் பொதுவாகவே தண்டிக்கப் படாமலிருக்கும்பொருட்டும் அவ்வாறு தாக்கீது விடுக்கவேண்டுவது ஓர் அவசியமாகக் காணப்பட்டு வந்தது. அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசுக்கு விரோதமாகக் கிளப்பப்பட்டுவந்த அந்திக் கலகத்தை யெல்லாம் சிறுபொறியா யிருக்கும்போதே அணைத்து விட வேண்டுமென்பது ஓர் அத்தியாவசியக் கடமையாகக் காணப்பட்டுவந்தது. அந்த அராஜகக் கிளர்ச்சியை முளையிலேயே கிள்ளியெறியா விடின், பிறகு ஒருசில தினங்களுக்குள்ளேயே அந்தக் கலகச் செடியானது ஒரு வைரமுற்றிய காழ்மரமாக முதிர்ந்து, இஸ்லாத்தையே அந்த அரப்நாட்டைவிட்டு அப்புறம் கல்லி யெறிந்துவிடுதற் குரிய பலம் நிரம்பியதாகப் படர்ந்து போயிருத்தல் கூடுமென்பதில் ஒருசிறிதும் சந்தேகமென்பதே யில்லை.

முதன் முதலாக, காலிதிப்னு வலீ தென்பார் துலைஹாவின்மீது படையெடுத்துச் சென்ற வைப

வத்தையே ஆரம்பித்துக் கொள்வோம். இந்த காலி தென்பவர்ரலி அளவுகடந்த பராக்கிர மம் வாய்ந்த மகா சுத்த வீரராய் விளங்கிவந்தார். இவரைப் போன்ற போர்வீரரையும் தளகர்த்தரையும் தேச

காலித் (ரலி) துலைஹாவைத் தோற்கடிக் கின்றார்

சரித்திரத்தின் மற்றெந்த ஏட்டிலும் நாம் கண்டு கொள்ளப் போவதில்லை. இப்படிப்பட்ட காலிதென் பார் தம்முடைய படைகளை யெல்லாம் திரட்டிக் கொண்டு, துலைஹாவை நோக்கி எதிர்த்துச் சென்றார்; இதற்குள்ளே கத்பான் என்னும் வர்க்கத்தினர் தம் முடைய தலைவராய் விளங்கிய உயைனாவுடனே வந்து துலைஹாவின் சைன்னியத்துடனே கூடச் சேர்ந்து கொண்டு விட்டார்கள். பனூதை வர்க்கத்தின் மனிதர் களுட் சிலரும் துலைஹாவின் கட்சியில் சேர்ந்து கொண்டு விட்டார்கள். அவர்களை எதிர்த்துச்சென்ற காலிதென்பார் தூதர்களை அனுப்பிச் செய்துவந்த ஏற்பாட்டினால் பனூதை வர்க்கத்தினர் மட்டும் இஸ் லாத்தின் பக்கலில்வந்து சேர்ந்துகொண்டு விட்டார் கள். ஆனால், காலிதின் படையானது புஜாகா என் னும் யுத்தகளத்தில் துலைஹாவைத் தோற்கடித்து விட்டது. உயைனா வென்பார் யுத்தக் கைதியாகப் பிடிக்கப்பட்டு, மதீனாவுக்குக் கொண்டுவந்து சேர்க்கப் பட்டார். ஆங்கு வந்தவுடன் அந்த உயைனா வென் பார் தம்முடைய கழிவிரக்கத்தைக் காண்பித்து, தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டுவிட்டார்; துலை ஹாவோ ஷாம்தேசத்தை நாடி ஓடிப்போய்விட்டான். ஆனால், காலிதென்பார் அவ்விடத்தில் சிறிதுகாலம் தங்கியிருந்து, சமாதானத்தை ஏற்படுத்திவிட்டு வந் தார். இந்தத் தளபதியானவர், பனூஅஸத் வர்க்கத்

தினரை மன்னித்து, கொலையாளிகளாய்க் காணப் பட்டவர்களை மட்டுமே தண்டித்து முடித்தார். இப் படிப்பட்ட வெற்றியா லெல்லாம், துலைஹாவின் கல கத்தால் இஸ்லாமிய இராஜதானி நகருடனே சம்பந் தம் வைத்துக்கொள்ள முடியாது பிரிக்கப்பட்டுப் போய்க்கிடந்த கூட்டத்தினர்க ளெல்லாரும் மீட்டும் இஸ்லாத்தின் மத்திப ஸ்தானத்துடனே தொடர்பை ஏற்படுத்திக்கொண்டு விட்டார்கள்.

துலைஹாவை மேற்கூறியவாறு தோற்கடித்து விட்டதன் பின்பு, காலி திப்னு வலீத்ரலி பனூ தமீம் வர்க்கத்தினரை நோக்கிச் சென்றார். இவ் வர்க்கத்தைச் சார்ந்தவராகவே பனூ எர்பூஃ கூட்டத்தினரும் காணப் பட்டு வந்தனர். இவர்கள் தங்கள் தலைவராய் விளங் கிய மாலிக் பின் நுவைராவுடனே சென்று, பொய்த் தீர்க்கதரிசினியாய் விளங்கிவந்த ஸஜாஹுடனே சேர்ந்துகொண்டு விட்டார்கள். ஆனால், பனூ தமீம் வர்க்கத்தைச் சார்ந்திருந்த ஏனைக் கூட்டத்தின ரெல் லாம் ஒவ்வொருவராக வந்து காலிதுடனே ஒன்றித்து விட்டார்கள். ஆகவே, பனூ எர்பூஃ என்னும் கூட் டம் மட்டுமேதான் இஸ்லாத்திற்கு விரோதமாக எதிர்த்துநிற்கத் துணிந்துவிட்டது. ஆதலின், இவர் களை நோக்கிச் சென்று, பதாஹ் என்னும் ஸ்தலத்தில் தங்கள் படைகளை யெல்லாம் நான்கு திக்குக்களிலும் ஒழுங்கான முறைப்படி அணிவகுத்து நிறுத்தி, காலி திப்னு வலீத் கடுமையாகத் தாக்கத் தொடங்கினர். ஆனால், கடுங்கல்லைக் கண்டு ஓட்டம் பிடிக்கும் காகத் தின் கூட்டமே போன்று, அவ்வெதிரிக ளெல்லாரும் சேர்ந்து காலிதைக் காணுமுன்னே ஓட்டம் பிடித்துச்

மாலிக் பின் நுவைரா

சிதறிப் போய்விட்டார்கள். அவ்வாறு ஓட்டம் பிடித்தவர்களை வாளா விட்டுவிடுமாறு மற்ற முஸ்லிம்களெல்லாரும் அறிவுறுத்திய போதினும், காலித் மட்டும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று, அவ்வோட்டம் பிடித்தவர்களுள் பலரைக் கைதிகளாகப் பிடித்துக் கொண்டுவந்து விட்டார்; அவர்களுக்குள்ளே மாலிக் பின் நுவைராவும் ஒருவராகக் காணப்பட்டார். அதுசமயம் காலிதின் கட்டளையொன்றின் சரியான தாத்பரியத்தை அறிந்துகொள்ளாது ஒரு சில முஸ்லிம்கள் சென்று மாலிக்கையும் சேர்த்துச் சில யுத்தக் கைதிகளைக் கொன்று தீர்த்துவிட்டார்கள். பின்னர், மாலிக்கின் மனைவியான விதவை உம்மு தமீமை, காலித் பின் வலீத் விவாகம் செய்துகொண்டார். இது குறித்து, கலீபா அபூபக்ர்[ரலி] அவர்கள்பால் ஒரு பர்யாத் தாக்கல் செய்யப்பட்டது. உடனே இந்த கலீபாவும் காலி தென்பாரை வரவழைத்து விசாரணை செய்துபார்த்தார். ஆனால், அவ்விசாரணையின்போழ்து, காலிதின்மீது குற்றமொன்றும் இல்லையென்னும் விஷயம் ஏற்பட்டுவிட்டமையான், அன்னவர் குற்றவாளி யல்லவென்றே தீர்மானிக்கப்பட்டு, விடுதலையும் கொடுக்கப் பட்டுவிட்டார்.

மேற் கூறியவாறு அப்பகுதியில் சமாதானத்தை நிறுவியதன் பின்னர், காலி திப்னு வலீத் முஸைலமாவை நோக்கிச் செல்லவேண்டுமென்று கலீபாவால் கட்டளையிடப் பெற்றார். இந்தப் படையெடுப்பானது முதன் முதலில் இக்ரிமாவிடமும் ஷுரஹ்பீலிடமும் ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆனால், முஸைலமாவின் படைகளோ முஸ்லிம் படைகளைப் பார்க்கினும்

காலித் முஸைலமாவைத் தோற்கடித்தல்

பன்மடங்கில் மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந் ததேபோல் காணப்பட்டு வந்தன. அவர்களுடனே அதிக நிதானத்துடனும் சாமர்த்தியத்துடனும் நடந்து கொள்ளாது, இக்ரிமா வென்பார் துரிதப்பட்டு எதிரி களை அவசரமாகத் தாக்கத்துணிந்து, அதிசீக்கிரத்தில் பெரியதொரு தோல்வியையும் பெற்றுக்கொண்டு விட்டார். ஆகவே, காலிதின் வெற்றிக்கொடி நாட் டிய வீரர்களெல்லாரும், இதுசமயம் முஸைலமாவை நோக்கிப் புறப்பட்டுச் செல்லுமாறு உத்தரவிடப் பட்டுவிட்டு, இக்ரிமாவும் அம்மானை நோக்கிச் செல்லு மாறு ஆணையிடப்பட்டார்.

முஸைலமாவின் கொடியின்கீழே அறுபதினுயிரம் போர் வீரர்கள் குழுமி நின்றூர்கள். ஆனுல், காலிதின் சைன்னியமோ மிகமிகச் சிறியதாகவே காணப்பட்டு வந்தது. ஆயின், முஸ்லிம்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந்தபோதினும், இவர்களுடைய மத நம்பிக்கையும் வீராவேசமும் மிகப் பெரியனவாகவே காணப்பட்டு வந்தன வென்னலாம். இத்தன்மைத் தாய முஸ்லிம்களுக்கும், முஸைலமாவின் படைகளுக் கும் நடுவே நிகழ்ந்த யுத்தமானது யமாமாவின் படு களத்தில் மிகக் கடுமையாக நிகழ்த்தப்பட்டு வந்தது. இந்த யமாமாவின் யுத்தமானது இஸ்லாத்தின் சரித்தி ரத்தில் ஒரு பெயர்போன யுத்தமாகவே காணப்பட்டு வருகிறது. என்னென்னின், இருதரப்பிலும் அதிக சாமர்த்தியமுள்ள சுத்தவீரத்தனமெல்லாம் காட்டப் பட்டு வந்தன. அன்று நிகழ்ந்த யுத்தத்தில் முஸ்லிம் கள் அநேகமுறை துரத்தியடிக்கப்பட்டார்கள். ஆனுல், அம்முஸ்லிம் வீரர்கள் ஒவ்வொரு முறையும் பின்னரி

டைந்து பின்னிடைந்து மீட்டும் மீட்டும் அதிகமான பராக்கிரமத்துடனேயே அவ்வெதிரிகளின்மீது தாவிப் பாய்ந்தார்கள். எனவே, இறுதியாக முஸைலமாவின் படைகளெல்லாம் வெருண்டோடுமாறு புறமுதுகு காட்டித் துரத்தித் துரத்தி யடிக்கப்பட்டன.

அவ்வாறு பின்னிடைந்து ஓடியவர்கள் நெடியதோர் ஆரற்சுவரால் சூழப்பெற்றிருந்த ஒரு தோட்டத்தி னுள்ளே சென்று புகலிடம் தேடிக்கொண்டார்கள். போதிய பாதுகாப்புடன் விளங்கிவந்த அந்தத் தோட்டமும் முஸ்லிம்களால் முற்றுகை யிடப்பட்டு, மிகச் சீக்கிரத்திலே அவர்களால் கைப்பற்றி வாகை மாலையும் சூட்டிக்கொள்ளப் பட்டது. அதுபோழ்து முஸ்லிம் வீரர்களுள் ஒருவராய் விளங்கிவந்த பராபின் மாலிக் என்பார் பேராச்சரியகர முள்ள சாமர்த்திய மொன்றைக் காண்பிக்கத் தொடங்கிவிட்டார்: இவர் தம்முடைய தோழர்களின் உதவியைக்கொண்டு அத் தோட்டத்தின் உயரிய மதிலின்மீது தூக்கிவிடப்பட்டார். அவ்வாறு அதன் உச்சியைத் தாவிப்பிடித்த பராவென்பார் சிறிதும் தங்குதடையின்றி, "நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து, குளித்துமணற் கொண்ட கல்லா இளமை" என்னுமாபோன்று, திடீரென்று எதிரிகள் நெருங்கிக் குழுமியிருந்த அத்தோட்டத்தினுள்ளே தாவிக்குதித்தார். இவ்வாறு குதித்தவர் தமது கரத்தில் பற்றியிருந்த கட்கத்தைக்கொண்டு வலப்புறமும் இடப்புறமும் வீசிவீசிக் கொண்டே சென்று அத் தோட்டத்தின் தலைவாயிலை யண்மி, அதிக தைரியத்துடனே அதன் கதவுகளைத் திறந்து விட்டுவிட்டார்.

அதன் பின்பு நிகழ்ந்த யுத்தத்தில் முஸைலமா வென்பான், வஹ்ஷீ* யென்னும் நாமத்தை வகித்திருந்த ஒரு ஹபஷீ (நீகிரோவ) அடிமையால் கொல்லப்பட் டொழிந்தான். உடனே முஸைலமாவின் படைகளெல்லாம் சிதறியோடத் தலைப்பட்டன. இப்படிப்பட்ட மாகொடிய யுத்தத்தில் ஏழாயிரம் முஸ்லிம்கள்வரை வீரசுவர்க்கம் புக்கு மறைந்தார்கள்; இவர்களுடனே, குர்ஆன் ஷரீபை முழுவதும் பாராயணம் பண்ணியிருந்த ஹாபில்கள் அநேகரும் சேர்ந்து போய்விட்டார்கள். ஆனால், எதிரிகளின் படையில் எண்ணிறந்த மனிதர்கள் அந்த யமாமாவின் யுத்தத்தில் யமலோகம் சென்று சேர்ந்துவிட்டார்கள். பனூ ஹனீபா வென்னும் கூட்டத்தினர் முஸ்லிம்கள் முன்னே அடிபணிந்து வந்து விட்டார்கள்; இவர்களுள்ளிருந்து ஒரு தூதுகோஷ்டியார் மதீனாவை நோக்கிச் சென்று, ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களைப் பேட்டிகாண நெருங்கியபோழ்து, அந்த கலீபாவானவர் முஸைலமாவால் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்டு வந்த நல்லுபதேசங்கள் யாவை யென்று அறிந்து கொள்ள அவாக்கொண்டு வினவினார்கள். அப்பொழுது அங்கு வந்தவர்கள் முஸைலமாவின் சிற்சில போதனைகளை இந்த கலீபாவின் முன்னே ஓதிக் காண்பித்தார்கள்; அதுகேட்டு, ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் அப்படிப்பட்ட முட்டாட்டன்முள்ள உபதேசங்களை யெல்லாம் அவர்கள் எவ்வாறு செவியேற்று மன

* இவ்வஹ்ஷீ குத்திய ஈட்டிக்குத்துத்தான் ஹஜ்ரத் ஹம்ஜா(ரலி) அவர்களை உஹுத் யுத்த களத்தில் வீரசுவர்க்கம் புகுமாறு செய்துவிட்டது.

மொப்பி வந்தார்க ளென்று அதிகமான ஆச்சரியங் கொண்டு விட்டார்கள்.

காலி திப்னு வலீதென்பார்ரலி மேற்கூறியவாறு கலகக்காரர்களின் பலம் நிரம்பிய முக்கியமான மத்திப ஸ்தானத்தில் ஜயக்கொடி நாட்டி வந்து கொண் டிருந்தக்கால், அரப்நாட்டின் மற்றும்பல பகுதிகளுக்கெல்லாம் அனுப் பப்பட்டிருந்த முஸ்லிம் சேனுவீரர் களும் தத்தமக்குரிய வெற்றி மாலைகளையே சூடிக் கொண்டு வந்தார்கள். அவ்வாறு இஸ்லாத்திற்கு வெற்றியளித்த பகுதிகளுள் பஹ்ரைன் என்பதும் ஒன்ருகும். நபிகள் திலகத்தின் நிர்யாண விஷயமானது அந்த பஹ்ரைன் பகுதியை எட்டியதன் பின்பு சிறிது போழ்தைக்குள்ளே அம் மாகாணத்தின் முஸ் லிம் அதிபதியாய் விளங்கிவந்த முன்திர் பின் ஸாவீ என்பாரும் காலகதியால் தேகவியோகமாய்ப் போய் விட்டார். இதனுல் அம்மாகாணத்தில் கலகமொன்று கிளம்பத் தலைப்பட்டுவிட்டது. ஆங்கு வதிந்து வந்த பனூ அப்துல் கைஸ் என்னும் ஒரு வர்க்கம் மட்டுமே இஸ்லாத்தை ஏற்றுக்கொண் டிருந்த வண்ணமே இருந்துவந்தது. ஆனுல், மற்ருெரு வர்க்கமாகிய பனூ பக்ரென்னும் கோஷ்டியார், தீனுல் இஸ்லாத் தைத் துறந்துவிட்டுப் பகிரங்கமாகவே மத்திய ராஜ்ஜி யத்திற்கு விரோதமாகக் கலகஞ் செய்யக் கிளம்பிவிட் டனர். ஆகவே, அவ்விரு வர்க்கத்தினர்களுக்கிடையே ஒரு யுத்தம் தொடங்கி விட்டது ; அதற்காக பனூ பக்ர்கள் பாரசீக நாட்டிலிருந்து உதவிகோரினுர்கள் ; பனூ அப்துல் கைஸ் வர்க்கத்தார்கள் மதீனுவிலிருந்து உதவி கோரினுர்கள் ; கோரிய உதவிவந்து கிடைக்கு

பஹ்ரைன் கலகம் அடியோடொழிக்கப் பட்டது

முன், பனூபக்ர் பனூ அப்துல்கைஸ் ஆகிய இரண்டு கூட்டத்தாருக் கிடையே கொடிய யுத்தம் ஆரம்ப மாயிற்று. எனவே, இந்த யுத்தத்தில் முதன் முதலாக பனூபக்ர்கள் தோல்வியடைந்தவர்களே போலக் காணப்பட்டார்க ளெனினும், இறுதியில் பனூபக்ர் வர்க்கத்தினரே பனூ அப்துல் கைஸைத் தோல்வி யுறுமாறு செய்து விட்டனர். ஆகையால், முஸ்லிம் களாயிருந்த பனூ அப்துல் கைஸ் வர்க்கத்தார் தங்களைப்பாது காத்துக் கொள்ளும் எண்ணங்கொண்டு, ஜுவாஸீ கோட்டைக்குள் நுழைந்து, அதனைப் புகலிடமாய்க் கொண்டனர். பனூபக்ர்களோ, அக் கோட்டையை முற்றுகையிட்ட வண்ணமே பல நாட்கள் வரை அங்கேயே இருந்து வந்தார்கள். கோட்டைக் குள்ளிருந்த மனிதர்கள் உண்ண உணவின்றி வருந்த வேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டார்கள். ஆதலால், அவர்கள் தங்களுடைய கஷ்டநிலையான விஷயத்தை வரைந்து, ஒரு தூதர்மூலம் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர் கள்பால் அனுப்பி, சீக்கிரம் தங்களுக்குரிய உதவியை யளிக்கவேண்டு மெனக் கோரியிருந்தார்கள். அவர் களுடைய உதவிக்காக அலா பின் ஹல்ரமீ என்பாரது தலைமையின்கீழே முஸ்லிம்களடங்கிய படையொன்று கலீபாவினால் அனுப்பி வைக்கப்பட்டது. அதனால் பனூ பக்ர்களும் பாரசீகர்களும் சேர்ந்துசெய்த யுத்த மானது அடியோடு முறியடிக்கப்பட்டு விட்டது. அதன் பின்பு தோல்வியடைந்தவர்கள், அர்தும் என்னும் கோட்டைக்குட் சென்று தங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஓடினார்கள். அக் கோட்டைக்குள் பனூபக்ரும், ஈரான் (பாரசீக) சக்ராதிபதியின் படைத் தலைவரான முன்திர் பின் நுஃமான் என்பவ

ரும் இருந்துகொண் டிருந்தனர். ஆகையால், அக் கோட்டையையும் முஸ்லிம்கள் தாக்குவா ராயினர் கள். ஆங்கும் முஸ்லிம்களுக்கே வெற்றி கிட்டிற்று. அதுசமயம், பனூபக்ரைச் சார்ந்த அநேக மனிதர் களும், பாரசீகப் படையைச் சேர்ந்த சைன்னியங்க ளநேகமும் கொல்லப்பட்டுப் போயின. அப்பால் எஞ்சி யிருந்தவர்கள், கண்மண் ணென்றும் தெரியா மல் தப்பியோடி விட்டார்கள். ஆனால், முன்திர் பின் நுஃமான் என்னும் படைத்தலைவர் தம் பூரண மனத் துடன் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார். அத ஞல் பஹ்ரைன் மாகாணம் முழுவதும் அப்படிப்பட்ட இராஜப்புரட்சிக் கலகத்தினின்று அடியோடு நீங்கி, மீட்டும் இஸ்லாத்தின்வயமே ஆய்விட்டதென்னலாம்.

அம்மான் எனும் மெஹ்ரா மீட்டும் பிடிபடல்

அம்மான், மெஹ்ரா என்னும் மற்றிரண்டு பகுதிகளிலும் கிளப்பப்பட்ட கலகங்களும் அவ் வாறே அடியோடு நசுக்கப்பட்டுப் போய்விட்டன. அந்தப் படையெடுப்பானது ஹுதைஜைபா என்பவரால் நடாத்திச் செல்லப்பட்டது. இக்ரிமா, யமாமா ஜயத்துக்குப் பின்னே திரும்பி வந்து சேரவில்லையாகையால், இவரும் ஹுதைஜைபாவின் உதவிக்கென்று அனுப்பி வைக்கப் பட்டார். அம்மான் என்னுமிடத்தில் லக்கீத் பின் மாலிக் இஸ்தீ என்னும் நாமமுடையா னொருவன் தனக்கும் தீர்க்கதரிசிப்பட்டம் வந்துவிட்டதாகத் தஃவா செய்துகொண்டு, அம் மாகாணத்தின் தலைநக ராய் விளங்கிய தப்பா வென்னுமிடத்தில் ஒரு பெரிய சைன்னியத்தையும் தன்கைவயம் வைத்துக்கொண் டிருந்தான். ஆனால், முஸ்லிம்களால் அவன் கொல்லப் பட்டும், அவனுடைய சைன்னியங்கள் முற்றும் தோற்

கடிக்கப்பட்டும், அவ் விடத்தில் வெற்றிக்கொடியே நாட்டப்பட்டது. இக்ரிமாவென்பார் ஹுஜைபாவை அம்மானில் வைத்துவிட்டு, மெஹ்ராவை நோக்கித் தாமேசென்று அவ்விடத்திலும் கலகத்தையடக்கிச் சமாதானத்தையும் சட்டஆட்சியையும் நிலைநிறுத்தி வைத்தார்.

ஜியாத் பின் லபீதென்பார் ஹலரமௌத்திலும் கந்தாவிலும் ஜ(க்)காத் தென்னும் ஏழைவிகிதத்தை வசூல்செய்வதற்காக நியமிக்கப்பட்டிருந்தார். நபிகள் திலகம் பரிபூரண தசையை அடைந்துவிட்டதன் பின்னே அஷ்அத் பின் கைஸ் என்பானொருவன் தன்னுடைய வர்க்கத்தினருடனே தீனுல் இஸ்லாத்தை விட்டு விலகிக்கொண்டு, ஹலரமௌத்தில் கலகக் கொடியை நாட்டிவைத்தான். ஆனால், ஜியாதென்பார் முஸ்லிம் படைகளைத் திரட்டிக் கொண்டுபோய் அந்த அஷ்அத் துடனே போர் தொடங்கினர்

எமனும் ஹலரமௌத்தும் அடக்கிவைக்கப்பட்டன

ஆனால்,அவர் அவன் கையில் தோல்வியுற்று மதீனாவிற்கு ஓட்டம்பிடித்தார். ஆங்கு ஹஜ்ரத் சித்திக்[ரலி] அவர்கள் போதிய சைன்னியத்தைக் கொடுத்து, ஜியாத் பின் லபீத்தை ஹலரமௌத் கந்தாக் கலகத்தை அடக்கிவருமாறு அனுப்பி வைத்தார்கள். அவர் இங்கு வந்ததன்பின்பு முஸ்லிம்களுக்கும் அஷ்அத் பின் கைஸ் படைகளுக்கும் பலமுறை போர் நிகழ்ந்ததெனினும், அதனால் எப்பக்கத்துக்கும் வெற்றியுண்டாகவில்லை. இதை யுணர்ந்ததும் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள், இக்ரிமா பின் அபூஜஹ்லும், முஹாஜிர் பின் உமையாவும் ஜியாதுக்கு உதவியாய்ச் செல்லவேண்டுமென உத்தரவு பிறப்பித்தார்கள். இவ் விருவரும்

கந்தா வந்து சேர்ந்ததன் பின்னர், அஷ்அத்துடன் பல முறை யுத்தம் செய்யும்படி அவசியம் நேர்ந்தது. இறுதியாய் அஷ்அத் தோல்வியுற்று ஒரு கோட்டைக்குள்ளே போய் ஒளிந்துகொண்டார். எனினும், அவரைக் கைதுசெய்து மதீனாவுக் கனுப்பிவைத்தார்கள். அவர் மதீனா வந்ததும், தாம் பூரணமனத்துடன் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார். அவரது அக்கிரமத்துக்காக அவரைக் கொன்றுவிட வேண்டுமெனப் பலர் பெரிதும் முயற்சிசெய்தனர். ஆனால், ஹஜ்ரத் சித்தீக்ரலி அவர்கள் அஷ்அத்தின் தீரத்தையும் திறமையையும் பின்னர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டதையும் உன்னி, மன்னித்துவிடுவதே உசிதமான காரியமென்று தீர்ப்பளித்துவிட்டார்கள். பின்னர், அஷ்அத் பின் கைஸ் கோரிக் கொண்டபடி தங்களுடைய சோதரியான உம்மு பர்தாவை அஷ்அத்துக்கு விவாகமும் செய்துகொடுத்து விட்டார்கள். இது சரியான ஒரு தீர்க்கதிருஷ்டியின் மீதேதான் நடந்தேறியிருக்கின்றது. என்னெனின், பின்னர் அஷ்அத் பின் கைஸ் இராக் யுத்தத்தின்போழ்து, முஸ்லிம்கள் சார்பாய் நின்று மிக்க உற்சாகத்துடனும் மகா தீரத்தன்மையுடனும் போராடி, எவ்வளவோ துன்பங்களையெல்லாம் தகர்த்தெறிந்து, இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் மிக்க பேருதவியைச் செய்துள்ளார்.

உரோம ராஜ்ஜியத்துடனும் பாரசிக ராஜ்ஜியத்துடனும் போராட்டம்

நபிகள் நாயகம் நிர்யாண மடைந்து ஓராண்டுக்குள்ளே, அப் பெருமானார் காலத்தில் இஸ்லாத்தின் மத்திய ராஜ்ஜியத்துடன் சேர்ந்து பின்னர்ப் பிரிந்து நின்று கலகம்செய்யத் துணிந்துவிட்ட எல்லாப் பகுதிகளிலும் முளைத்திருந்த கலகங்களும் குழப்பங்

களுமெல்லாம் ஹஜ்ரத் அபூபக்ரவர்களால் அடியோடு அடக்கி யொடுக்கி நசுக்கப்பட்டுப் போய்விட்டன வென்னலாம். இவ்வாருக இஸ்லாமிய ராஜ்ஜியத்தினை முழுதும் செப்பஞ்செய்து சீர்திருத்திக்கொண்டதன் பின்னே கலீபா அவர்கள் பாரசிக எல்லைப்புறத்திலும், சிரியாமாகாண எல்லைப்புறத்திலும் தகுந்தவிதமான பாதுகாப்பை யெல்லாம் செய்துகொள்ளத் தீர்மானித்து விட்டார்கள். இதனுல் நெடியதொரு யுத்தம் தொடர்ந்துவரத் தலைப்பட்டு, பின்னர் இரண்டாவது கலீபாவாய் வந்த ஹஜ்ரத் உமர்ரலி அவர்களது ஆட்சியின்போழ்து அந்த உரோமராஜ்ஜியமும் பாரசீகராஜ்ஜியமும் இறுதியாக முஸ்லிம்களது ஆட்சியின் கீழே வந்து அமர்ந்துவிட்டன.

பஹ்ரைன் கலகத்தின்போழ்து அக்கலககோஷ்டியார் பாரசீகத்திலிருந்து உதவி கோரின ரென்பதும், அதற்காக அப் பாரசிக ராஜ்ஜியமும் உதவியளித்த தென்பதும் இதற்கு முன்னம் உங்களுக் கெல்லாம் நன்கு தெரிந்த விஷயமேயாகும். இவ்வாறு பாரசிக ராஜ்ஜியம் செய்ததானது, முஸ்லிம் ராஜ்ஜியத்துக்கு நேர்விரோதம் செய்ததாகவும் கலீபாவை வலுவில் சண்டைக் கிழுத்ததாகவுமேதான் கருதப்படும். இவ்வுண்மையை நம் நண்பர்கள் நன்கு ஞாபகத்தில் பதிய வைத்துக்கொள்ளுதல் ஆவசியகமாகும். என்னெனின், இதுதான் முஸ்லிம் ராஜ்ஜியம் பாரசிக ராஜ்ஜியத்துடனே மல்லாடத் தொடங்கியதற்கு மூலகாரணமாயிருந்துவருகிறது. அந்தப் பாரசிக ராஜ்ஜியமே முதன் முதலாக முஸ்லிம்கள்மீது பகைமை கொண்டு, பஹ்ரைன் கலகக்காரர்களுக்கு வெளிப்படையாக உதவி

புரிவான்வேண்டி அம் முஸ்லிம்களது எல்லைக்குள்ளே தன் சேனைகளை அனுப்பிவைத்தது.

இன்னம், மெஸபொட்டேமியாவின் (இராக்கின்) பக்கத்திலிருந்தும் பாரசீகர்களின் ஆதிக்யமானது அதிகமான தொந்தரையை அளித்துக்கொண் டிருந்தது; ஆங்கிருந்தே தான் ஒரு பொய்த் தீர்க்கதரிசினியாய்க் கிளம்பிய ஸஜாஹ் என்பவளும் முளைத்தெழுந்து வந்தாள். இவள் இஸ்லாத்தின் தலைநகராய் விளங்கிய மதீனாவின்மீதே படையெடுத்து வந்தாள்; ஆனால், மத்திய அரேபியாவிலுள்ள யமாமாவரை படையெடுத்து வந்ததன் பிறகேதான் இவள் துரத்தியடிக்கப் பட்டாள். ஓர் அற்பக் கூட்டத்திலிருந்து தோன்றிய இந்தப் பெண்பிள்ளை யானவள், இவளுக்கருகிலிருந்த பலசாலிகளாய் விளங்கிய பாரசீகர்களால் தூண்டிவிடப்பட்டுத் துணைபுரிவதாகவும் வாக்களிக்கப் பட் டிருந்தாலல்லது, இஸ்லாத்தின் மத்திய ராஜ்ஜியத்தின்மீது படையெடுத்துவர எங்ஙனம் துணிந்திருப்பாள்? எவ்வாறு யிருப்பினும், பாரசீக எல்லையிலிருந்து, அஃதாவது, பாரசீகர்களின் ஆதிக்யத்திற்குள் ளிருந்துவந்த ஒரு கூட்டத்தினர் அரப்நாட்டின் மீது படையெடுத்து வருவதென்பதே, அந்தப் பாரசீக தேசத்தினர் மற்றொரு முறையாகவும் வலுவில் இஸ்லாத்திற்கு விரோதமாக இன்னல் விளைக்கத் துணிந்ததாகவே கருதப்பட்டுவிடும்.

இஸ்லாத்திற்கு விரோதமாய் எழுந்த பாரசீகர்கள்

ஆகவே, அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களுக் கிடையில் இயற்கையாகவே இஸ்லாமிய ராஜ்ஜியமானது, பாரசீக எல்லைப்புறத்திலிருந்து பலமான எதிர்ப்பை எதிர்பார்த்திருக்க வேண்டுவ தாயிற்று. ஆதலின்

இயற்கையாகவேதான் இஸ்லாமிய ராஜ்ஜியம் அந்தப் பகுதியிலுள்ள எல்லைப்புறங்களைத் தற்காப்பினிமித் தம் பந்தோபஸ்து செய்துகொள்ள வேண்டிய ஆவசியகமும் அதிகம் காணப்பட்டுவந்தது. எனவேதான் முதன் முதலாக அனுப்பப்பட்ட படையெடுப்புக்களெல்லாம் புராத்நதிக்கு மேற்குப் பகுதியிலுள்ள அராபியர் குடியேற்ற நாடுகளை நோக்கியே அனுப்பப்பட்டிருக்கின்றன. உண்மையிலே அம் முஸ்லிம்கள் புராத் நதியைக் கடந்து மெஸபொட்டேமியாவுக் குள்ளே நுழைந்திருந்த போதினும், அஃதோர் அக்கிரமமற்ற, செய்கையாகவேதான் இருந்திருக்கும். என்னெனின், எதிரிகளின் நாட்டினுள்ளே நுழைந்து அவர்களைத் தோற்கடிக்க முயல்வது யுத்தகாலச் சட்டத்திற்கு ஒத்ததாகவேதான் கருதப்பட்டு வருகின்றது; இதுதான் இக்காலச் சர்வ தேசசங்க முறைகளாலும் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றது. முஸ்லிம்களுக்கு விரோதமாக யுத்தம் ஆரம்பிக்கப்பட்டு விட்டது. இன்னம், பாரசீகப்படைகளும் அரப்நாட்டுக்குள்ளே பிரவேசித்துக் கலகக்காரர்களுக்கு உதவிசெய்து மிருக்கின்றன. இதற்குப் பின்வரும் முஸ்லிம்கள் வாளா கையைக் கட்டிக் கொண்டிருப்ப தென்பது தற்கொலை புரிந்து கொள்வதற்குச் சமமாகவேதான் கருதப்பட்டு வருதல் கூடும்.

சரித்திராசிரியர்களின் ஆராய்ச்சி யின்மை

அரபியர் சேனைகளுக்கு வேலை கொடுத்துக் கொண் டிருக்கும் பொருட்டும், உள்நாட்டுக் கலகங்களை விட்டு அவர்களுடைய கவனத்தை யெல்லாம் அப்பால் திருப்பும் பொருட்டுமேதான் ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்கள் வேண்டுமென்றே அண்டை

அயலிலுள்ள தேசங்களுட னெல்லாம் வலுவில் சண்டைபிடிக்கத் தொடங்கினுர்கள் என்று குற்றஞ் சாட்டிவரும் தேச சரித்திரக்காரர்களெல்லாம் மேலே கூறியுள்ள சரித்திர சம்பந்தமான நியாயச் சம்பவங் களை யெல்லாம் ஒருசிறிதும் ஓர்ந்துபார்ப்பது கிடை யார் து. இவ்வாறு அச் சரித்திராசிரியர்கள் இயம்பு வதற்குக் காரணம் இஸ்லாம் மார்க்கம் வாளாயுதத் தின் முனையைக்கொண்டேதான் எங்கும் பரத்தப் பட்ட தென்று ஒருசில அயல்மத நயவஞ்சகர்களால் கிளத்தப்பட்டு வரும் ஒரு சாதாரணமான பொய்க் கூற்ருகவே இருந்துவருகிறது. நபிகள் திலகத்தின் ஆயுட்காலத்தில் அவர்களால் யாதொரு யுத்தமும் இஸ்லாமிய பிரசாரத்திற் கென்று சுயமே தொடுக்கப் பட்ட தில்லை யென்று அறிந்துகொண்டு விட்டதன் பின்னே கலீபாக்களின் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்த்து, அங்கேனும் இப்படிப்பட்ட வாளாயுதப் பிரசாரத்திற்கு இடமிருக்கிறதா வென்று துருவிப் பார்த்துத் திரிகின்ருர்கள். அந்த கலீபாக்களின் சரித்திரத்தில், அக்கம் பக்கத்திலுள்ள ராஜ்ஜியங்க ளுடனெல்லாம் யுத்தங்கள் நிகழ்ந்திருப்பதைக் கண்டு, தங்கள் மனத்தின்கண் முற்கூட்டியே படிந்துகிடந்த துவேஷ அபிப்பிராயத்தைக் கொண்டு அப்படிப்பட்ட யுத்தங்க ளனைத்தும் இஸ்லாமிய பிரசாரத்திற் கென்றேதான் வலுவிலே வாளாயுதப் பலங்கொண்டு தொடங்கப்பட்டன வென்றுகூற முற்பட்டு விடுகிருர் கள். ஆனுல், அத்தகைய யுத்தங்களுக் கெல்லாம் மூல காரணம் அண்டை அயலி லிருந்துவந்த ராஜ்ஜியங்க ளாகவேதாம் முதன்முதலில் காணப்பட்டு வந்திருக் கின்றன வென்பதை அடியோடு மறந்துவிடுகிருர்கள்.

மேற்கூறியவா றெல்லாம் நிகழ்த்திய விஷயத்தில் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் இஸ்லாமிய பிரசார வேட்கையினுலோ அல்லது பிற தேசங்களைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டு மென்னும் அவாவினுலோ தான் தூண்டப்பட்டு வந்தார்களென்று கூறப்பட்டு வரும் அக்கிரமமான குற்றச்சாட்டினின்றும் அப் பெரியாரை விடுவித்தற்கு அதுசமயம் அரப்நாட்டின் கண்ணே நடைபெற்று வந்த சம்பவங்களை யெல்லாம் ஒருசிறிது ஓர்ந்துபார்த்தலே போதுமானதா யிருந்துவிடும். இஸ்லாத்தின் இருக்கையையே அடியோடு பாதிக்கக்கூடிய முறையிலேயே கிளம்பிய ஒரு மகா அபாயகரமான அராஜகக் கிளர்ச்சியானது இப்பொழுதுதான் இந்த கலீபாவின் திடசித்தத்தால் அடக்கப்பட்டிருக்கின்றது. ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் கலீபாவாக நியமனம் பெற்றவுடனே முதன்முதலாகச் செய்யவேண்டியிருந்த முன்யோசனையுடன் கூடிய முக்கிய காரியமானது, உள்நாட்டிலுள்ள சைன்னியங்களை யெல்லாம் ஒருசேரத் திரட்டித் தக்க தலைவர்களின் கீழே ஓரிடத்திலே வைத்து, ஒருமிக்கப் பலப்படுத்தி வைக்க வேண்டியதாகவே இருந்துவந்த தென்னலாம். ஆனுல், இவ்வாறு செய்து முடித்தற்குப் போதிய அவகாசமும் பக்கபலமும் அவ்வாரம்ப காலத்திலே இல்லாமற் போய்விட்டது ஒரு தடுக்க முடியாத காரியமாகவே காணப்பட்டது. ஆதலினுல்தான், அபூபக்ர்ரலி அவர்கள் இஸ்லாமிய ராஜ்ஜியத்திற்கு விரோதமாகக் கிளம்பிக் கலகம் செய்தவர்களை யெல்லாம் அடக்கி யொடுக்கியதன் பின்னே அவர்களுக் கெல்லாம் கடுமையான

இராஜாங்க விரோதக் கலகமே எல்லைப் புறப் பாதுகாப்புக்கு அவசியத்தை அளித்தது

தண்டனையைக் கொடுக்க முன்வந்தார்களில்லை; இற்றை நாளிலுங்கூடப் பயபக்தியென்னும் காரணத்தைக் கொண்டும் ஜயித்தவருக்குரிய செல்வாக்கென்னும் காரணத்தைக் கொண்டும் மகா நாகரிகமுள்ள தேசத்தவர்களும் தங்களுக்கு விரோதமாகக் கலகம் செய்தவர்களை அடக்கியதன் பின்னே அவர்கள்மீது மிகக்கடுமையான தண்டனைகளையும் தண்டங்களையும் விதித்துவருவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம்.

ஆனால், அந்த முஸ்லிம் ராஜ்ஜியத்திற்கு விரோதமாகக் கலகம்செய்த எந்த மனிதனும் சமாதானம் நிறுவப்பட்டதன் பின்பு தொந்தரைக் குள்ளாக்கப் பட்டதேயில்லை. அப்படிப்பட்ட ராஜதுரோகக் கலகங்களில் ஈடுபட்டதற்காக ஒரு மனிதனேனும் கொல்லப்படவில்லை. ஆயின், அவ்வக் கலகக் கூட்டத்தின் தலைவர்களெல்லாருங்கூடப் பொதுவாக மன்னிக்கப் பட்டே விட்டார்கள். ஆனால், அதுபோழ்து இருந்து வந்த நிலைமையை உற்று நோக்குங்கால், அவ்வாரம்ப காலத்தில் கலகம் செய்து இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளம்பிய பகுதிகளில் மீட்டும் அப்படிப்பட்ட ராஜ துரோகக் கலகம் முளைத்தெழா திருக்கும் பொருட்டு அவ்வவ் விடத்திலும் பலமான சைன்னியங்கள் நிறுவப்படவேண்டிய அவசியம் ஒன்று ஏற்பட்டுவிட்டது. வெளிப்படையான கலகங்கள் அடக்கப்பட்டு விட்டபோதினும், இன்னமும் அதிருப்தி கொண்ட சிலர் ஆங்காங்கே காணப்படுதல் கூடுமாதலின், எந்த நிமிடத்திலும் எந்த இடத்திலிருந்தும் கலகத்தீ யென்பது மீண்டும் மூண்டுவிடுதல் சாலும். ஆகவே, இராணுவப் படைகளின் அமல் இருந்தாலல்லது, அக்கலக கோஷ்டியார்களெல்லாரும் அடங்கி

யொடுங்கி இருக்க மாட்டார்கள். ஆதலின், சமாதானத்தையும் சரியான ஆட்சியையும் நிலைநிறுத்துவதே இந்த கலீபாவின் முதற் கடமையாகவும் முதற் கவலையாகவுமே இருந்துவந்த தென்னலாம்; இப்படிப் பட்ட காரியத்தைச் செய்து முடிப்பதென்பது பலமான இராணுவ ஸ்தலங்களை அந்த இஸ்லாமிய ராஜ்ஜிய முழுவதும் அங்கங்கே ஏற்படுத்த வேண்டியது ஓர் ஆவசியகமாகக் காணப்பட்டே வந்தது.

கொள்ளையா அல்லது நாடு பிடித்தலா

இப்படிப்பட்ட நிர்ப்பந்தங்களெல்லாம் இஸ்லாத்தின் மத்திய ரராஜ்ஜியத்திற்குள்ளே ஏற்பட்டிருந்தக்கால், அதற்கென்றே இராணுவத்திற்குக் கிடைக்கக்கூடிய ஒவ்வொரு பலசாலியும் அதிகம் தேவைப்பட்டு வந்தான். விஷயம் இவ்வாறிருக்க, அந்த அரப் தேசத்தின் எல்லைப்புறத்திற்கு முஸ்லிம் சைன்னியங்கள் அனுப்பப்பட்டதற்கெல்லாம் மூலகாரணம் கொள்ளைப் பொருளின்மீது வைத்துள்ள பேராசையாதல், அல்லது பிறதேசங்களைப் பிடித்து இஸ்லாமிய ராஜ்ஜியத்தை விருத்தி செய்தலேயாதல் என்று ஒரு சிலர் கூறத் துணிவதானது எத்தகைய விபரீதமாய் இருக்கின்றதென்பதை நன்கு நோட்டமிட்டுப் பார்க்கக் கடவீர்களாக. இஸ்லாத்தையே விழுங்கிவிடும் வேதாளமே போன்று முளைத்தெழுந்து வந்த அராஜகக் கலகங்க ளெல்லாம் அப்பொழுதுதான் அடக்கியொடுக்கப்பட்டிருந்தன; அப்படிப்பட்ட அசந்தர்ப்பமான வேளையிலே முஸ்லிம்களின் கலீபாவானவர் தேசம் பிடிப்பதிலும் கொள்ளையடிப்பதிலும் இறங்கத் துணிந்தாரென்று கூறத்துணிவதானது எத்துணை முட்டாட்டனமான காரியமாக இருக்கிறதென்

பது குருடனுக்கும் விளங்கக்கூடிய கண்கூடாய காரியமாகவே இருந்து வருகின்றது; எல்லைப்புறங் களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பத்திரப்படுத்து வான் வேண்டி இந்த கலீபாவானவர் முஸ்லிம் சைன் னியங்களை ஆங்கெல்லாம் அனுப்பிவைத்ததி லிருந்தே அவ்விடங்களில் இருந்துவந்த அபாயத்தின் விபரீ தத்தை ஒருவாறு ஊகித்துக் கொள்ளுகின்றோம். இஸ்லாமிய மத்திய ராஜ்ஜியத்திற்குள்ளே போது மான அளவுக்கு மேற்பட்ட கலகங்களெல்லாம் கிளைத் துக்கொண டிருந்தக்கால், எல்லைப்புறங்களில் இருந்து வந்த அபாயமானது அக் கலகங்களைப் பார்க்கினும் அதிக பயங்கரமாய் இருந்துவந்த காரணத்தினாலே தான் உடனே திடீரென்று அப்பகுதிகளுக்குப் படை களை அனுப்பவேண்டிய தாயிற்று. இவ்வாறு இந்த கலீபா அவர்கள் செய்ததற்குக் காரணம் கொள்ளைப் பொருளின்மீது வைத்துள்ள கொடிய துராசையாக மாட்டாது. ஆனால், இவர்களுடைய தீர்க்க திருஷ்டி யானது அந்தப் பொல்லாத எல்லைப்புற அபாயத்தை உடனே ஒழித்துவிட வேண்டுமென்று நன்குணர்ந்து கொண்டுவிட்டத னாலேதான், மத்திய ராஜ்ஜியம் சிக்கிக்கொண்டிருந்த அபாயத்தையும் பொருட்படுத் தாது இவ்விஷயத்தை ஆண்டவன்பால் ஒப்படைத்து விட்டுச் சற்றும் தாமதமில்லாது எல்லைப்புற விஷயங் களை மிக அழுத்தமாக பைஸல் செய்யத் தீர்மானித்து விட்டார்கள். இதனால் இப் பெரியாரின் ராஜ்யதந் திர நிபுணத்துவமானது எத்துணைப் பெரிதா யிருந்து வந்த தென்பதை நாமெல்லாம் ஒருவாறு ஊகித்துக் கொள்ளக் கடவோம். பாரசிக எல்லைப்புறத்திலும் சிரியாநாட்டு எல்லைப்புறத்திலும் தலைதூக்கத் தொடங்-

கிய கிளர்ச்சியனைத்தையும் முளையிலேயே அபூபக்ர் சித்தீக்ரலி அவர்கள் அவ்வாறு கிள்ளியெறியத் துணிந் திராவிடின், அந்த அபாயமானது பெருவெள்ளமாகப் புரண்டோடிவந்து இஸ்லாமியராஜ்யத்தையே விழுங்கி விட்டுப் போயிருக்குமென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மில்லை. அவ்வாறு நிகழ்ந்திருக்குமாயின், அன்றிருந்த இஸ்லாமிய ராஜ்ஜிய முழுதும் அதோகதியாகத்தான் கலகலத்துப் போயிருக்குமென்பது திண்ணமேயாம். வெள்ளம் வருமுன்பே அணைகோலி யிராவிடின், அந் தப் பால்ய இஸ்லாமிய குடியரசானது அப்பெரு வெள்ளத்தில் மூழ்கியே நடுச் சமுத்திரம்வரை எட்டி யிருக்குமென்பது ஒருதலை.

அரப்நாட்டி லிருந்துவந்த பதவீவர்க்கத்தார் உள் நாட்டுக்குள் விஷமத்தனம் புரியாதிருக்குமாறு தடுத்து வைக்கும் பொருட்டே தான் அவர்க ளெல்லாரும் கொள்ளையடித்துக் கொள் ளும் அந்தரங்க நோக்கத்துடனே எல் லைப்புறங்களுக்கு அனுப்பிவைக்கப்பட் டார்களென்றும், அக் காரணத்தாலே தான் பாரசீக ராஜ்ஜியத்துடனும் ரோம ராஜ்ஜியத்துடனும் இந்த கலீ பாவானவர் வலுவிலே சென்று மல்லாடத் தொடங் கினரென்றும் கூறப்பட்டுவரும் கதையானது ஒரு வெறுங் கட்டுக்கதையாகவே இருந்துவருகின்றது. இஸ்லாத்தின் செங்கோலின்மீது மிகவும் அற்பமா யுள்ள நம்பிக்கையை வைத்துக்கொண்டிருந்த அந்தக் கலக கோஷ்டியார்கள் இரண்டு மகா சாம்ராஜ்ஜியங் களுடனே எதிர்த்து நின்று போர் புரிதற்குரிய பொறுப்பு வாய்ந்த கடமைகளை ஒப்படைக்கப் பெற்

எல்லைப் புறங் களுக்குப் படை களை அனுப்பி யதில் ஹஜ்ரத் அபூபக்ர் அவர் களுக்கு இருந்து வந்த முக்கிய நோக்கம்

ரூர்களென்பதும் எத்தகைய புத்திமானுலும் ஏற்றுக் கொள்ளத் தகாததாகவே இருந்து வருகின்றது. ஆனால், அக்காலத்திய சரித்திரத்தின் ஏடுகளைப் புரட்டிப் பார்க்குமளவில், அற்றை நாளில் அநேக வருடங்கள்வரை அதுபோழ்து இஸ்லாத்திற்கு விரோதமாகக் கலகஞ் செய்தவர்கள் இராணுவத்தில் சேர்க்கப்படக் கூடா தென்றே தடுத்து வைக்கப்பட் டிருந்தார்களென்று நாம் மிகச் செவ்விதாய்த் தெரிந்து கொள்கிறோம். இஸ்லாத்தின்மீது அளவிறந்த குரோதங் கொண்டிருந்த ஸர் வில்லியம் மூய்ர் போன்ற சரித்திராசிரியருங்கூட அந்த எல்லைப்புறப் படையெடுப்புக்களைப் பற்றிக் கூறத் துணியுங்கால், அவற்றின் ஆரம்ப காலத்தில் அபூபக்ர்ரலி அதற்கு 'முன்னே கலகத்தில் சேர்ந்திருந்த எந்தவிதமான மனிதனும் எல்லைப்புறப் படையெடுப்பிற்காக இராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப்படக் கூடாதென்று தடையுத்தரவு பிறப்பித்திருந்தார்களென்று அங்கீகரித்துக் கொண்டிருந்திருக்கின்றூர். இத்தகைய தடையுத்தரவானது இந்த முதல் கலீபாவின் ஆட்சியின் காலமுழுதும் ரத்து செய்யப்படாமல் அமலிலேயே இருந்துவந்திருக்கின்றது. அந்த மூய்ர் துரை எழுதியிருக்கும் விஷயத்திலிருந்தே, மற்றொரு விஷயத்தையும் நாம் நன்கு தெரிந்துகொண்டு விடுகிறோம்.

அஃதாவது, இந்த கலீபாவானவர் மரணப்படுக்கையி லிருந்த போழ்து, மெஸபொட்டேமியாவிலிருந்துவந்த முதன்னா என்பாரிட மிருந்து ஒருசெய்தி கொண்டுவரப்பட்டது; எல்லைப்புறத்தில் இருந்துவந்த அபாயமானது நாளுக்குநாள் அதிகரித்து வந்ததாகவும், ஆதலின், அப்படிப்பட்ட பயங்கரமான நிலைமை

யுடனே எதிர்த்துநின்று மல்லாடுதற்குப் போதிய அதிகப்படியான படைகளைக் கிளப்பும் பொருட்டு அதற்கு முன்னே இஸ்லாத்திற்கு விரோதமாய்ச் செய்யப்பட்டுவந்த கலகங்களில் பங்கெடுத்துக் கொண்டிருந்த மனிதர்களெல்லாரும் இராணுவத்தில் சேர அனுமதி யளிக்கப்பட வேண்டு மென்றும் அந்த முதன்னு வென்பார் கோரிக்கொண்டார். ஆனால், அதேமூச்சில், உள்நாட்டுக் கலகங்களினின்று ஒதுக்கி வைத்து, அந்தக் கலக கோஷ்டியார்களை யெல்லாம் கொள்ளைப் பொருளின்மீது ஆசைகாட்டி வெளியில் ஈர்க்கும் பொருட்டேதான் பாரசீகத்துடனும் சிரியா நாட்டுடனும் கலீபாவானவர் வலுவிலே சண்டை செய்ய இறங்கினர் என்று கூறுகின்றார்கள். என்னே பொருத்தக்கேடு! இராணுவத்தில் சேர்ந்துகொள்வதற்கே அப்படிப் பட்டவர்களுக்கு அனுமதியில்லாத போழ்து, அவர்களுக்காக எவ்வாறு அந்தப் படையெடுப்புக்கள் கிளப்பப்பட்டிருத்தல் கூடும்? எனவே, இப்படிப்பட்ட குற்றச்சாட் டானது ஒருசிறிதும் ஆதாரமற்ற முழுச்சிருஷ்டி யாகவேதான் காணப்படாநின்றதென்று நாம் நன்கு முடிபுகட்டி விடலாம்.

ஆனால், அந்தப் படையெடுப்புக்க ளெல்லாம் ஆரம்பிக்கப்பட்டு நெடுநாட்களுக்குப் பின்னரே அத்தகைய தடையுத்தரவானது ஒருவாறு ரத்து செய்யப்பட்ட தென்பது மெய்யேயாகும்; பாரசிகர்களும் உரோமர்களும் யுத்தகளங்களில் தத்தமக்குரிய ஏராளமான படைகளை யெல்லாம் கொண்டுவந்து நிறுத்திவிட்ட பின்பு, இஸ்லாத்தின் சைன்னியங்களையும் அவற்றிற் கேற்றவாறு போதுமான அளவில் பெருக்கி வைக்கவேண்டிய அவசியம் நேரிட்டுவிட்ட

தன் பின்னரேதான் அப்படிப்பட்ட பழைய கலக கோஷ்டியார்களெல்லாரும் இராணுவத்தில் சேர்க்கப் பட்டு வந்தார்கள். ஆயின், பின்னே நிகழ்ந்த சம்பவத்தைக்கொண்டு, எல்லைப்புறப் படையெடுப்புக்கு ஆரம்பத்தி லிருந்துவந்த மூலகாரணமே அத்தகைய கலக கோஷ்டியார்களுக்கு வெளியில் வேலைகொடுப்பதாகவேதான் இருந்துவந்த தென்று கூறுவதானது குதிரைக்கு முன்னே வண்டியை வைத்துப் பூட்டும் கதையாகத்தான் காணப் படாநின்றது. ஆதலின், அத்தயைஎல்லைப்புறப் படையெடுப்புக்களுக் கெல்லாம் மூலகாரணமா யிருந்துவந்த செய்திகளுக்காக அப்போதைய சரித்திரசம்பவங்களை ஆராய்ந்து பார்ப்பது தான் ஒரே நியாயமான முறையாக இருந்துவருதல் கூடும்; ஆனால், பிற்பட்ட காலங்களில் நிகழ்வுற்ற சம்பவங்களைக் கொண்டு முற்பட்ட காரியங்களுக்குக் காரணம்வகுப்பது ஒரு முட்டாட்டனமான முரணிய தர்க்கவாதமாகவே இருந்துவருகின்றது; அஃதாவது, இரண்டாவது கலீபாவின் ஆட்சியின் போழ்து தழைத்தோங்கிவந்த பல்வேறு வகைச் சம்பவங்களுக் கெல்லாம் மூலகாரணம் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் வலுவிலே உரோம ராஜ்ஜியத் துடனும் பாரசீக ராஜ்ஜியத் துடனும் சண்டைக்குச் சென்றதுதானென்று கூறத் துணிவதானது சரித்திரச் சான்றுகளுக் கெல்லாம் நேர் முரணாகவேதான் அமைந்து கிடக்கின்றதென்று நாம் சந்தேகமில்லாதே சாற்றி வைக்கக் கடவோம்.

அந்த எல்லைப்புற ராஜ்ஜியங்களுக்கும் இஸ்லாமிய ராஜ்ஜியத்திற்கும் இடையிலே தொடங்கிவிட்ட

யுத்தங்களின் மெய்யான காரணங்களைக் கண்டுபிடிக்க

கிலாபத்ராஜ்ஜியத்தின்மென்மையும் மற்றிரண்டு ராஜ்ஜியங்களின் வன்மையும்

வேண்டுமாயின், அக்காலத்தில் அவ்வெல்லா ராஜ்ஜியங்களிலும் இருந்துவந்த இராணுவபலம் ஆதிய எல்லா விஷயங்களையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தல் அவசியமாகும். அதுசமயம் இருந்துவந்த சரித்திர சம்பவங்க ளனைத்தையும் மேல்நோக்காகவே துருவிப் பார்த்தபோதினும், அற்றைநாள் அரபியர்கள், பாரசீகம் உரோம் போன்ற மகா பெரிய சாம்ராஜ்ஜியம் இரண்டனுடனே சண்டையிட வலுவிலே துணிந்திருப்பார்க ளென்று ஊகிப்பதற்கொன்றும் இடமில்லாமலே இருந்துவருகின்றதென்னலாம். இன்னம், இஸ்லாத்தின் முதல்கலீபாவாய் விளங்கிய ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களைப் போன்ற ஒரு நிதான புத்தியுள்ள பெரியார் அப்படிப்பட்ட முரட்டுத்தனமுள்ள மூடயுத்தங்களில் சுயமே இறங்கியிருக்கத் துணியார். பாரசீகமும் உரோமராஜ்ஜியமும் அக்காலத்தில் மிகப்பெரிய வலிமை வாய்ந்தனவாய் இருந்துவந்தன வென்பது சரித்திர முணர்ந்த ஓர் உண்மையே யாகும்; அவ்விரு மகா ராஜ்ஜியங்களின் நாமதேயமே அற்றைநாள் அரபியருக் கெல்லாம் ஒரு பெரிய திகிலினை உண்டுபண்ணிக்கொண் டிருந்தது. ஆனால், அந்த ஆரம்பக் குடியரசாகிய அரபிராஜ்ஜியத்தின் சக்தியும் சாமர்த்தியமும், மற்றிரு ராஜ்ஜியங்களுடனே ஒப்புநோக்கிப் பார்க்கப்படுங்கால், மகாமகா அற்பமாகவேதான் அமைந்து கிடந்தன வென்னலாம். அக்கால ஹிஜாஜ் மாகாணத்தின் பலப்பல பகுதிகளெல்லாம் அக்கம் பக்கத்தி லிருந்துவந்த அந்த உரோம ராஜ்ஜியத்திற்கும், பாரசீக ராஜ்ஜியத்திற்

குமே அடிமைப்பட்டுக் கிடந்தன. கிழக்குப் பகுதியி லுள்ள ஒரு விசாலமான பிராந்தியத்தின்மீது பாரசீக ராஜ்ஜியம் அதிகாரம் வகித்துவந்தது; ஆனால், வடக்குப் பகுதியிலுள்ள பெரும்பகுதியான பிராந்தியங் களெல்லாம் உரோம ராஜ்ஜியத்தின் கீழே யடங்கி யொடுங்கிக் கிடந்தன.

இன்னமும், ஒவ்வொரு ராஜ்ஜியத்திலும் ஏராள மான சைன்னியங்க ளெல்லாம் சேமப்படைகளாகத் திரட்டி வைக்கப்பட் டிருந்தன; அவர்க ளிடத்தில் அக் காலத்திற்கு வேண்டிய எல்லாவிதமான எதிர்ப்புப் படைக்கலங்களும் தற்காப்புப் படைக் கலங்களும் அதிகமாகவே தையார் செய்து வைக்கப்பட் டிருந்தன. மற்றும் யுத்த முஸ்தீ புக்கு வேண்டிய சகலவிதமான ஆயத்தங்களும் அதிக மாகவே ஆயத்தம் செய்துவைக்கப்பட் டிருந்தன. இவையெல்லா மல்லது, ஒவ்வொரு ராஜ்ஜியத்தின் பொக்கிஷக் குவியலும் அளவிறந்ததாகவே இருந்து கொண் டிருந்ததென்பதும் சரித்திரங்கண்ட உண்மை யாகவே இருந்து வருகின்றது. ஆனால், அவற்றிற்கு மாறாக அரபிராஜ்ஜியமென்னப்படுவதோ, அத்துணைப் பெரிய மகாராஜ்ஜியங்களுட னெல்லாம் எதிர்த்து நின்று மல்லாடுதற்குரிய ஆட்படையையேனும் வாட் படையையேனும் ஒருசிறிதும் பெற்றிருந்த தில்லை. அப்பொழுதுதான் அநேகவித உள்நாட்டுக் கலகங்களி லின்று அந்த கிலாபத் ராஜ்ஜியம் தப்பிப் பிழைத்து ஒருவித ஜயபேரிகை யுடனே வெளிவந்து நின்று கொண் டிருந்தது. அதுசமயம், அதற்கு முன்வரை கலக கோஷ்டியார்களாய் நின்றிலங்கிய அரபிகளெல்-

கலககோஷ்டி யாரைப் படை யெடுப்பில் சேர்த்துக் கொள்ள முடியுமா

லாரும் நம்பப்படுதற்கும் புதிய படையெடுப்பில் சேர்த்துக்கொள்ளப் படுதற்கும் போதிய அருகதை வாய்ந்தவர்களா யில்லை யென்பதும் நமக்கு நன்ருகத் தெரியும். இஸ்லாமிய ராஜ்ஜியத்தையே கவிழ்த்து விடுதற்குக் கங்கணம்கட்டிக் கிளம்பிய அந்தக் கலக கோஷ்டியார்க ளெல்லாரும் எவ்வாறு இதுசமயம் பாரசீக, உரோமராஜ்ஜிய எதிரிகளுடனே சேர்ந்து கொண்டு இன்னமும் கொடுமையான தீமைக ளனைத்தையும் செய்துமுடிக்க மாட்டார்க ளென்று எவரே துணிந்து கூற முற்படுவர் ?

அக்காலத்தி லிருந்துவந்த அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசுக்கு நிரந்தரமான சைன்னியமொன்றும் அன்றுகாறும் ஏற்படுத்தப்பட்டிருக்கவில்லை. அவ்வாறு ஏற்படுத்துவதற்குப் போதிய சம்பளமும் உம்பளமும் அவர்களுடைய கஜானுவில் ஒருசிறிதும் இருந்ததில்லை ; படைக்கலங்களைப் பற்றியோ, ஒன்றும் சொல்லத் தேவையில்லை. ஆகவே, அவ்வாருய நிலைமையி லிருந்துவந்த அந்த முஸ்லிம் ராஜ்ஜியமானது ஏககாலத்தில் மிக்க வன்மை பொருந்திய இருபெரும் மகாராஜ்ஜியங்களுடனே எதிர்த்துநின்று போர் புரிதற்காக வலுவிலே புறப்பட்டுச் செல்லத் துணிந்துவிட்டதென்று கூறுவது எத்துணைமட்டும் நியாயமா யிருக்குமென்பதை இதன் வாசகர்களே நன்கு நிதானித்துக்கொண்டு விடலாம். இஸ்லாமிய சரித்திரத்தை ஊன்றிப்படிக்க ஆர்வங் கொண்டு நிற்கும் எல்லா நிஷ்பக்ஷபாதமுள்ள மாணவர்களுக்கும் மேற்கூறிய விஷயம் நன்கு பரிசீலனை செய்து ஆராய்ந்து பார்த்தற்குரிய ஒருசெய்தியாகவே காணப்படாநின்றது.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள்மீது சுமத்தப்பட்டு வரும் மற்றோர் ஆதாரமற்ற குற்றச்சாட்டு யாதெனின், பாரசீகத்தின்மீதும் சிரியாவின்மீதும் நம் கலீபாவானவர் படைகளைத்திரட்டி யனுப்பியதற்குக் காரணம், தம்முடைய புதியமதத்தை ஆங்கெல்லாம் பரத்தி விட வேண்டுமென்னும் மூர்க்ககுண மாகவேதான் இருந்துவந்ததென்பதாகும். இதற்கொன்றும் சரித்திரபூர்வமாகவுள்ள சான்றென்பதே கிடையாது. அது போழ்து அவ்வரபிகள் இருந்துவந்த அதிக பலஹீன மான நிலைமைகளை யெல்லாம் கூர்ந்து நோக்குங்கால், அவர்கள் அப்படிப்பட்ட இரண்டு மகாராஜ்ஜியங்களை ஜயித்து, அவற்றின்மீதெல்லாம் தங்கள் புதிய மார்க்கத்தை நிறுவச்செய்வதென்பது ஒருசிறிதும் முடியாத காரியமாகவே இருந்துவந்ததென்பதை நாம் மிகச்செவ்விதா யறிந்துகொண்டு விடுகிறோம். ஆனால், அதற்கு மாறாக, அந்த ஆதிகால அரப் முஸ்லிம்களெல்லாரும் எந்தநிமிஷத்திலும் அந்த அண்டை அயலிலுள்ள மகாராஜ்ஜியங்களால் அடியோடு நசுக்கியொழித்துவிடப்படக் கூடியவர்களாகவே இருந்துவந்தார்களென்பது ஒருதலை. இதுதான் அக்காலத்திய சரித்திரச் சான்றுகளி லிருந்து அறிந்துகொள்ளக் கிடக்கும் உண்மையாக உணரப்பட்டு வருகின்றது.

ஆதிகால அரப் முஸ்லிம்களின் நிலைமை

இறுதியாக நோக்குமிடத்து, ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களை அப்படிப்பட்ட அபாயகரமாயுள்ள படையெடுப்புக்களை அனுப்பிவைக்குமாறு தூண்டிவிட்டது எதுவா யிருக்கக்கூடுமென்று நன்கு நிதானித்துப் பார்த்தல் வேண்டும். உள்நாட்டுக் கலகங்களையெல்லாம் ஒருவாறு அடக்கிய

எதிரிகள் இழைத்த இன்னல்கள்

தன் பின்பு இந்த கலீபாவானவர் தமது இஸ்லாமிய குடியரசின் எல்லைகளுக்குள்ளேயே சீர்திருத்தங்களையும் நல்லொழுக்கங்களையும் நிலைநாட்டுவதற்கு முன் வந்திருத்தல் வேண்டும். இவ்வாறு உள்நாட்டு விஷயங்களை யெல்லாம் செப்பஞ்செய்து முடிக்கா முன்னம் எல்லைப்புறங்களை நோக்கிப் படைகளைத் திரட்டி யனுப்புமாறு இவர்களுக் கென்ன அத்தியாவசியம் ஏற்பட்டு விட்டது? அந்த எல்லைப் புறங்களில் கிளைத்துக் கொண்டிருந்த அபாயத்தினுல் இஸ்லாத்தின் மூல வேரே கல்லி யெறியப்பட்டு விட்டுவிடப்படும்போல் காணப்பட்டுவந்த தென்பதை இதற்கு முன்னமே நாம் வாசித்திருக்கிறோம். அண்டை அயலிலுள்ள உரோமராஜ்ஜியமும் பாரசீகராஜ்ஜியமும் அந்த அந்த எல்லைப்புறங்களில் செய்துவந்த விஷமத்தனத்தினுல் இப்பொழுது சமீபத்தில் உள்நாட்டுக்குள்ளே அடக்கி யொடுக்கப்பட்டுக் கிடக்கும் கலகங்களைப் பார்க்கினும் மகா பயங்கரமுள்ள மாபெருஞ் சண்டமாருத மெல்லாம் அடிக்கத் தொடங்கி, அந்த அரபுநாடு முழுதையுமே எந்தநேரத்திலும் விழுங்கிவிடும்போலே காணப்பட்டுவந்த தென்னலாம்.

இத்தகைய அபாயங்க ளனைத்தையும் இந்த கலீபாவின் தீர்க்கதிருஷ்டியானது மிகச்செவ்விதா யுணர்ந்துகொண்டே யிருந்தது; அவ்வாறு உணர்ந்து கொண்டவுடனே அக்காலத்திய இஸ்லாத்துக்குரிய நற்காலத்தின் முற்போக்குணர்ச்சிக்கு ஏற்றவாருகவே சட்டென்று அதிக தைரியத்துடனே இவர் படைகளைத் திரட்டி, அந்த எல்லைப்புறங்களுக்கு அனுப்பி வைத்தார். பெளதிக வாழ்க்கைக்காகவேனும் பாரமார்த்திக வாழ்க்கைக்காகவேனும் அந்த எல்லைப்புறங்

களை யெல்லாம் பாதுகாத்து அரண்செய்து வைக்க வேண்டு மென்பது இஸ்லாத்தின் போதனைகளுள் ளெல்லாம் ஒரு மகா முக்கியமான போதனையாயே யிருந்துவருகிறது. நபிகள்திலகத்தின் ஆயுள்முழுவதும் இதுவேதான் ஒரு முதன்மையான நோக்கமா யிருந்து வந் திருக்கிறது; அந்தக் குருமகா னிடத்திலிருந்து நேருக்குநேராக இஸ்லாத்தின் ஆழிய தத்துவத்தை யெல்லாம் நிரம்பப் பெற்றிருந்த அவர்களுடைய பிரதம சிஷ்யர்களும் அவ்வா றுகவேதான் நடந்துவந் திருக்கின்றார்கள். உண்மையை ஊன்றிப் பார்க்கு மிடத்து, வேறுபல காரணங்கள் காணப்படக்கூடு மாயினும், முஸ்லிம் ராஜ்ஜியங்கள் நிலைத்து நிற்றற்கு அத்தியாவசியமாயுள்ள இப்படிப்பட்ட எல்லைப்புறப் பாதுகாப் பென்னும் ஒரு முக்கியமான அம்சத்தில் அலக்ஷியமா யிருந்துவிட்டதன் காரணத்தாலேதான் இற்றை நாளிலுள்ள முஸ்லிம் ராஜ்ஜியங்க ளெல்லாம் அன்னியநாட்டாரின் அக்ரமச் சூழ்ச்சிகளுக்கும் அவலப் பேராசைகளுக்கும் இலக்காகிச் சிக்கித் தவித்துக் கொண் டிருக்கின்றன.

மகாமண்டலே சுவராதிபதிகளை எதிர்க்கச் சின்னஞ்சிறு படைகளா

ஒரு பலமான ராஜ்ஜியம் நிலைத்திருக்க வேண்டுமாயின், எல்லைப்புறப் பாதுகாப்புச் சரியான முறையிலே நிறுவப்படல் வேண்டுமென்பது ஒரு முதன்மையான தேவையேயாகும். ஆகவேதான் உள்நாட்டுக் கலகங்களை யெல்லாம் அடக்கி யொடுக்கிய வுடனே ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் இப்படிப்பட்ட முக்கியமான எல்லைப்புறப் பாதுகாப்பென்னும் விஷயத்திலே ஈடுபடத் தொடங்கி விட்டார்கள். அற்றைநாளில் இருந்துவந்த அத்துணைப்பெரிய இரண்டு மகாராஜ்ஜி

யங்களை எதிர்த்துப் படைகளை அனுப்பிவைப்பதென்பது மகா அபாயகரமான காரியமென்பதை இந்த கலீபாவானவர் அறிந்திருந்தும், அக்கால முஸ்லிம் ராஜ்ஜியத்தில் நிரந்தரமான சரியான படையொன்றும் இல்லாமலிருந்திருந்தும், அத்தகைய படையெடுப்பை அனுப்பிவைப்பதனால் நேரிடக்கூடிய மற்றும்பல இன்னல்களும் இடையூறுகளும் எவ்வாறு தலைகிளப்பித் தாண்டவமாடக்கூடும் என்பதை முற்கூட்டியே உணர்ந்திருந்தும், கடமையென்பது பிரத்தியக்ஷமாகவும் அத்தியாவசியமாகவும் நேரிட்டு விட்டக்கால், இப்பெரியார் அணுத்துணையும் ஐயங்கொள்ளாமலும் அச்சத்தின் வயப்படாமலும் மதீனாவின்கண் இருந்துவந்த, போதிய தளவாடமற்ற, போதிய பயிற்சியில்லாத ஒருசில சைன்னியங்களையே அவ்விரு மண்டலேசுவர மகாராஜ்ஜியங்களுக்கும் விரோதமாக எதிர்த்துநிற்க அனுப்பி வைத்தார்கள். என்னே அக்கால இஸ்லாமிய சுத்தவீரத்தனம்!

காலை மிதித்தால் கவலை கொள்ளாதிருப்பதா

ஒருபக்கல் அக்கால முஸ்லிம்கள் ஏனை ஜாதியாரின் உரிமைகளைப் பறித்துக்கொள்ள ஒருசிறிதும் வலுவிலே முன்வரத் துணியாதவர்களாகவே சர்வஜாக்கிரதையுடன் ஒழுகி வந்தார்கள்; மற்றொருபக்கல் இவ்வுலகு முழுதும் எதிர்த்துவந்தபோதினும், அவசியமாயின் தன்னந் தனியேநின்று போர் புரிந்துதான் தீரவேண்டுமென்னும் கடமையையும் நன்குணர்ந்தேயிருந்தார்கள். கடமையின் கட்டளையால் அக்கினிப் பிரவேசம் செய்யவேண்டுமாயினும், ஒருசிறிதும் தயங்காது, ஒரு நந்தனவனத்துள் நுழைவதேபோலத் தான் எண்ணிக்கொண்டு நுழைவார்கள். அரசர்களுக்

குரிய முத்துச் சிங்காதனத்தை நோக்கி விரைவா யோடுகிறவர்களே போலத்தான் வாட்படைகளும் ஈட்டிப்படைகளும் செறிந்து விளங்கும் யுத்தகளத்தை நாடியும் ஓட்டோட்டமாக ஓடுவார்கள். அவர்கள் சுயமே வலுவில் ஒன்றையும் ஆரம்பிப்பதில்லையென்பது மெய்யேயாயினும், ஒருமுறை எதிரிகள் அவர்களுடைய உரிமைகளை நாசப்படுத்தவேனும், அல்லது அவர்களுடைய கண்ணியத்தைப் பாழ்படுத்தவேனும் முற்பட்டு விடுவார்களாயின், அவர்களும் அவ்வெதிரிகளுடனே எதிர்த்துநின்றேதான் மல்லாட வேண்டியவர்களாய் இருந்துவந்தார்கள்; அப்பொழுது இவ்வுலக முழுதையுமே எதிர்த்துத்தான் ஆகவேண்டுமெனின், அதற்காகச் சற்றும் பின்வாங்க மாட்டார்கள். ஆகவேதான், தங்களுடைய பலஹீனத்தையும், பாரசீக உரோமராஜ்ஜியங்களின் பலத்தின் பெருமையையும் நன்குணர்ந்திருந்தும், அவர்கள் அக்கணமே ஏககாலத்தில் அவ்விரு ராஜ்ஜியங்களுடனும்—அவ்விரண்டும் இஸ்லாத்துக்கு விரோதமாக விஷமத்தனத்துள் இறங்கி விட்டமையால்—எதிர்த்துக் கிளம்பத் துணிந்து விட்டார்கள்.

இதன் சார்பாக ஸர் வில்லியம் மூய்ர் துரையும் பின் வருமாறு சிலாகித்துக் கூறி யிருக்கின்றார்:—

முஸ்லிம்கள் அக்கிரமயுத்தம் செய்யவேயில்லை

"உள்நாட்டுக் குள்ளே இஸ்லாத்தை வெறுத்துச் சென்றவர்களின் கொட்டத்தை யெல்லாம் அடக்கி யொடுக்கியவுடனே முதலில் கால்டியாவிலும் பிறகு சிரியாவிலும் எல்லைப்புறக் காட்டுமிருகாண்டி மக்கள்களுடனே ஆரம்பித்த தாக்குதல்களே அன்னிய

நாட்டு யுத்தத்தியை மூட்டிவிடக் காரணபூதமாய் இருந்துவந்தது"—(நி கலீபேட், பக்கம் 42).

ஆதலின், பாரசீக எல்லையிலும் ஷாம்தேச எல்லையிலும், முஸ்லிம்கள் வலுவிலே சென்று அக்கிரமயுத்தத்தை ஆரம்பித்தார்களென்னும் ஐயத்தை அடியோடு நீக்கிவிடக் கடவீர்களாக. அம் முஸ்லிம்கள் விரும்பியதெல்லாம் எல்லைப்புறப் பாதுகாப்பேயாகும். அவர்கள் அவ்வாறு சுயப்பாதுகாப்பில் ஈடுபட்டிருந்தக்கால், பாரசீகமும் உரோமராஜ்ஜியமும் வலுவிலே வந்து யுத்தத்தைக் கிளப்பத் தொடங்கிவிட்டன. இதற்கு வேண்டிய ஆதாரத்தை நாம் மேற்கூறிய மூய்ர்துரை யிடத்திருந்தே எடுத்து விளக்கிக் காண்பிக்கக் கடவோம் :—

"ஷால்டியாவும் (சவாது) சிரியாவின் தென்பாகமும் நியாயமாக அரப்நாட்டின் எல்லையைச் சார்ந்தவைகளாகவே இருந்துவருகின்றன. அந்தப் பிராந்தியங்களில் வசித்துவந்த குடிமக்களுள் ஒருசிலர் அஞ்ஞானிகளாகவும் பெரும்பான்மையோர் (பெயரளவில் மட்டுமேனும்) கிறிஸ்தவர்களாகவும் இருந்துவந்த போதினும், அவர்களெல்லாரும் அரப் ஜாதியாரையே முழுக்க முழுக்கச் சார்ந்தவர்களாகத் திகழ்ந்து வந்தார்கள். எனவே, அவர்கள் இந்தப் புதிய (இஸ்லா மார்க்கமென்னும்) மதத்தின் எல்லைக் குள்ளேயே உடனே வந்துசேரக் கூடியவர்களா யிருந்துவந்தார்கள். ஆனால், அந்த அரபிகள் எல்லைப்புறத்தில் நிறுவப்பட்டிருந்த முஸ்லிம் கூட்டத்தினர்மீது தாக்கத் துணிந்துவிட்டதன் பின்னே அந்தக் குடிமக்கள் தத்தமக்குரிய அரசர்களால் முறையே உதவி

**இருபெரும்ராஜ்ஜியங்களுடன் யுத்தம் புரியக் காரணம்**

அ. 9

செய்யப்பட்டு வந்தார்கள்.—அஃதாவது, மேற்குப் பகுதியினர் கைஸராலும், கிழக்குப் பகுதியினர் குஸ்ரூக்களாலும் உதவி செய்யப்பட்டார்கள். இவ்வாருகத்தான் இந்தப் போராட்டம் விரிவடைந்து கொண்டே போய், இஸ்லா மார்க்கம் கிழக்குத் திக்கிலும் மேற்குத் திக்கிலும் அரசு செலுத்திவந்த இரண்டு பெரிய மகா ராஜ்ஜியங்களுடனே மகா பயங்கரமான உயிருக்கு மன்ருடும் முறையிலே எதிர்த்துநின்று யுத்தம்புரிய வேண்டியதாகிவிட்டது"—(தி கலீபேட், பக். 46).

ஆகவே, அக் காலத்தில் இந்த முதல் கலீபாவானவர் இஸ்லாமிய போதனைகளுக்குரிய உண்மையான தத்துவத்தின் கருத்தை உணர்ந்தேதான் அவ்வாறு நடக்கவேண்டியதாயிற் றென்பதை நாம் இக்காலத்தில் மிக்க விளக்கமாகத் தெரிந்துகொண்டுவிட்டோம். அந்த எல்லைப்புற யுத்தங்களை இந்த கலீபாவானவர் சுயமே வேண்டுமென்று ஆரம்பித்து விடவில்லை. இப் பெரியார் இஸ்லாமிய குடியரசின் நன்மையையுன் னித் தற்காப்பின் நிமித்தம் எல்லைப்புறங்களில் சைன்னியங்களைத் திரட்டிப் பலப்படுத்தி வைக்கத் துணிந்த போழ்து, அப்பாலிருந்துவந்த பாரசீகமும் ரோமராஜ்ஜியமும் தத்தம்முடைய இராணுவ பலத்தின் மமதையால் மயக்குண்டு, ஏதோ ஒரு சாக்குப்போக்கைச் சொல்லிக் கொண்டு முஸ்லிம்களின் குரல்வளையை நெரிக்கத் தொடங்கிவிட்டன.

இந்த யுத்தங்களெல்லாம் எவ்வாறு உற்பத்தியாயின வென்பதற்குரிய எல்லா மூலகாரணங்களையும் சரித்திரமானது விளக்கமாக எழுதிவைத் தில்லை; ஆனல், இத்தகைய யுத்தங்கள் முளைத்தெழுதற்கு

அரப்நாட்டில் தோன்றிய கலகங்கள்பல பாரசிகத்தாலும்ரோமராஜ்ஜியத்தாலும்நன்கு தூண்டிவிடப்பட்டன

இன்னவை தாம் ஆதிகாரணமா யிருத்தல் கூடுமென்பதை ஊகித் துணர்தற்குரிய போதிய விஷயங்கள் அச்சரித்திர ஏடுகளில் காணப்படாது போகவில்லை. பஹ்ரைன் மாகாணம் இஸ்லாத்தின் மத்திய ராஜ்ஜியத்திற்கு விரோதமாய்க் கலகஞ்செய்து கிளம்பியபோழ்து, பாரசிக ராஜ்ஜியம் அப்படிப்பட்ட கலகக்காரர்களுக்கு வேண்டிய உதவிகளனைத்தையும் பகிரங்கமாகவே செய்யத்துணிந்துவிட்டது. ஸஜாஹ் என்னும் ஒரு கிறிஸ்தவ மாது சிலபல கிறிஸ்தவக் கூட்டத்தினர்களைச் சேர்த்துக்கொண்டு பாரசீக எல்லையில் இருந்துவந்த தனது இருப்பிடத்தை விட்டுப் புறப்பட்டு, இஸ்லாத்தின் இராஜதானி நகராய் விளங்கிவந்த மதீனாவின்மீது படையெடுத்து வந்து, அந்த ஹிஜாஜ் ராஜ்ஜியத்தின் மத்திய பிரதேசம்வரை வந்துசேர்ந்து விட்டாள்.

வடக்குப் பிராந்தியத்தில், கிறிஸ்தவ உரோம ராஜ்ஜியத்தின் ஆதிக்கத்திற் குட்பட்டிருந்த பிரதேசத்திலிருந்து துலை ஹா என்பவன் தன்னுடைய கலகக் கொடியைச் சாம்பினன். இவ்விரு சம்பவங்களையும் உற்று நோக்குங்கால், இப்படிப்பட்ட கலகங்களெல்லாம் ஆங்காங்கே பாரசீக ராஜ்ஜியத்தாலும் உரோம ராஜ்ஜியத்தாலுமேதாம் கிளப்பிவிடப்பட்டு, நன்றாக உற்சாகமும் ஊட்டப்பட்டு வந்தனவென்று நாம் நன்கு தெரிந்துகொள்ளப் போதிய காரணங்கள் இல்லாமற் போகவில்லை. இந்தக் கலகங்கள் கிளம்பிய மாகாணங்கள் அவ்விரு ராஜ்ஜியத்தின் எல்லைப் புறத்திலே யாதல், அல்லது அவற்றின் அதிகாரத்துக்

குள்ளேயாதல் இருந்ததுவந்தன வென்பது வெளிப் படை.

இன்னம், பாரசீக ராஜ்ஜியமானது எமன் மாகாணத்தின்மீது அளவுகடந்த ஆதிக்யத்தைச் செலுத்திக்கொண் டிருந்தது; அத்தகைய எமன் மாகாணங் கூட இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளம்பிய பிரதேசங்களுள் ஒன்ருகவே காணப்பட்டுவந்தது. ஆகவே, பாரசீக ராஜ்ஜியமும் உரோம ராஜ்ஜியமும் பகிரங்கமாக அத்தகைய கலகங்களுக்கெல்லாம் உதவி புரிந்து வந்ததோடு மட்டும் நின்றுவிடாது, அப்படிப்பட்ட கலகங்களே இப்படிப்பட்ட மகாராஜ்ஜியங்களின் இரகசியத் தூண்டுதலின் மீதேதான் முளைத்தெழுந் திருத்தல் வேண்டுமென்றும் ஊகித்தற் கிடமுண்டு. அக்காலத்தி லிருந்துவந்த உரோம ராஜ்ஜியமானது இக்காலத்தி லிருந்துவரும் ஒருசில மகாராஜ்ஜியங்களே போல் திரைமறைவில் இருந்துகொண்டே சூத்திரக் கயிற்றைப் பிடித்தாட்டி, மித்திரபேதத்தை விளைத்தற்குரிய நாரதத் தொழிலில் கைதேர்ந்ததாகவே இருந்துவந் திருக்கிறது.

ஆதலின், அப்படிப்பட்ட இரண்டு அண்டை அயலிலுள்ள சாம்ராஜ்ஜியங்களும் தங்களுடைய எல்லைக் கருகினில் இருந்துவந்த அரப் தேசத்தின் மாகாணங்களி லெல்லாம் தங்களால் இயன்றமட்டும் மித்திரபேதம் செய்து சத்துருத்துவத்தை இஸ்லாத்திற்கு விரோதமாய்க் கிளப்பிவிடுவதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருந்திருக்கின்றன. அப்படிப்பட்ட விஷமக் கலகங்கள் மீட்டும் ஒருமுறை தலைகிளப்பி எழாதிருக்குமாறு அழுத்தி வைப்பான் வேண்டியே அக்கால முஸ்லிம் ராஜ்ஜியமானது அந்த எல்லைப்புறங்களிலெல்

லாம்போதுமான ராணுவப் படைகளை நிறுவிவைக்கத் துணிந்து, அதற்காவன செய்ய முற்பட்டுவிட்டது. இவ்வாறு இந்த கலீபாவானவர் செய்யத் துணிந்தது கண்டு, அப்பா லிருந்துவந்த பாரஸீக ராஜ்ஜியமும் உரோமராஜ்ஜியமும் அரபிகளின் உள்ளத்தின் கண்ணே ஒருவித அச்சத்தை உண்டுபண்ணி வைத்துவிடலா மென்னும் கெட்ட எண்ணத்துடனே இஸ்லாமிய ராஜ்ஜியத்துடன் எதிர்த்துப் போராடத் தொடங்கி விட்டன. ஆனால், அரப் நாட்டுக்குள்ளே சிலிர்த்துக் கிளம்பிய உள்நாட்டுக் கலகங்களை யெல்லாம் ஒருவாறு இந்த கலீபாவானவர் அடக்கியொடுக்கி விட்டதன் பின்னே, அப்படிப்பட்ட கலகங்களுள் ஒருசில வற்றிற்கேனும் மூலகாரணமாய் விளங்கிவந்த அவ்விரு மகாராஜ்ஜியங்களும் தாங்கள் செய்துவந்த விஷமத் தனத்திற்குச் சமாதானம் சொல்லித் தீரவேண்டிய காலம் அண்மிவிட்டது.

சரித்திராசிரியர்களின் ஆழிய ஆராய்ச்சியின்மை

சரித்திர ஏடுகளைப் புரட்டிப்பார்க்குமளவில் அங் கங்கே சிதறுண்டு காணப்பட்டுவரும் தனித்தனியா யுள்ள அப்படிப்பட்ட சம்பவங்களைக் கொண்டேதான் நாம் அவ்வாதிகால யுத்தங்களுக்கெல்லாம் காரணம் கண்டு பிடித்தல் வேண்டும். பண்டைக்கால சரித்திராசிரியர்கள், அது காலை நடைபெற்று வந்த சம்பவங்களில் ஆதி அல்லது மூலகாரணம் யாதாயிருத் தல் கூடுமென்பதை ஒருசிறிதும் உள்நுழைந்து பார்த் தாராய்வது வழக்கமில்லை. அவர்க ளெல்லாரும் சம் பவங்களை மட்டுமேதாம் குறித்து வைத்துள்ளார்க ளல்லது, அவற்றிற்கு வெளியே சென்று ஒவ்வொன் றன் காரணகாரியப் பொருத்தத்தையு மெல்லாம்

துருவிப் பார்த் தெழுதுவது கிடையாது. ஆகவே, அந்த யுத்தங்களின் ஆதிகாரணம் இன்னதுதா னென் பதைத் தெரிந்துகொள்ள விரும்புவோமாயின், அப் படிப்பட்ட துண்டு துணுக்காயுள்ள சம்பவங்க ளனைத்தையும் ஒன்றாகப் பிணைத்து, அதன் பின்னரே நமக்குரிய ஆராய்ச்சி முடிவை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

நபிகள் திலகத்தின் காலத்தில் நிகழ்வுற்ற பற்பல யுத்தங்களுக் கெல்லாம் காரணம் இன்னதுதா னென் பதை இவ்வாறாகத்தான் தெரிந்து கொள்ளுகிறோம். ஆனால், அந்த யுத்தங்களின் விவரங்கள் முழுவதும் மிக விரிவாக வரையப்பட் டுள்ளன; ஆயின், அவர் களுக்குப் பின்வந்த கலீபாக்களின் சரித்திரங்களை அவ் வாசிரியர்கள் அத்துணை முதற்றரமாயுள்ள அத்தியா வசியத்துடனே கவனித்து வாராமையால், நபிகள்நா யகத்தின் காலத்தில் நடைபெற்ற யுத்தங்களை வரு ணித்திருப்பதே போன்று கலீபாக்களின் காலத்தில் நிகழ்வுற்ற யுத்தங்களை யெல்லாம் அத்துணை முழுவிவ ரங்களுடனே வரைந்து வைத்திருக்க வில்லை. எனவே, மகா முக்கியமாயுள்ள சம்பவங்க ளெல்லாமும் மிக மிகச் சுருக்கமாகவே தீட்டப்பெற்றிருக்கின்றன; இவ் விஷயம் இக்காலப் பிரபல சரித்திராசிரியர்களாலும் அங்கீகரிக்கப்பட்டே யிருக்கின்றது. எனினும், எல் லாச் சம்பவங்களுக்கும் மூலகாரணம் இப்படிப்பட்ட தென்பதைக் கண்டுபிடிப்பது மட்டும் ஒரே ஒழுங்கா கத்தான் இருந்துவருகிறது; அஃதாவது, வெளித் தோற்றத்தில் சிதறுண்டனவேபோல் காணப்பட்டு வரும் தனித்தனியாயுள்ள சம்பவங்க ளனைத்தையும் எடுத்துக்கொண்டு, அவற்றினூடே மறைந்துகிடக்கும்

இலைமறை காய்போன்ற ஒற்றுமையாயுள்ள காரணத்தைக் கண்டுபிடித்தலாகும்.

ஆதலின், இத்தகைய முறையால் உண்மையான காரணத்தை ஒவ்வொன்றுக்கும் கண்டுபிடிப்ப தென்பது, அஃது அதற்குரிய உண்மையான சம்பவங்களைப் பொறுக்கி யெடுப்பதையே பெரிதும் சார்ந்து நிற்கிறது. எனவே, எவ்வளவுக் கெவ்வளவு நாம் எடுத்துக்கொள்ளும் விஷயங்கள் உண்மையா யிருக்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவேதான் அவற்றின் ஆராய்ச்சியும் பயன்படுதல் கூடும். இப்படிப்பட்ட முறையை முன்னணியில் வைத்துக்கொண்டே யாம் மேற்கூறியவாறு மெய்யான சம்பவங்களைக் கொண்டு அந்தப் பாரசீக, உரோம யுத்தங்களுக் குரிய மூலகாரணங்கள் இன்னவை யென்று ஒருவாறு தீர்க்கமாகத் தெரிந்துகொண்டு விட்டோம். சரித்திரச் சான்றுகளால் முழுவதும் அங்கீகரிக்கப்பட்டுள்ள சம்பவங்களை அஸ்திபாரமாகக் கொண்டே யாம் இப்படிப்பட்ட காரணங்களைக் கண்டுபிடித் திருக்கிறோம். இதிலொன்றும் சந்தேக மில்லை.

பாரசீக உரோமராஜ்ஜியப் பழங்குடிமக்கள்

மேலே கூறியவாறு அரப்தேசத்தின் வடகிழக்குப் பிராந்தியங்களி லிருந்த கலகக்காரர்களை யெல்லாம் அடக்கி, அங்கங்கேயும் சமாதானத்தையும் சமரசத்தையும் நிலைக்கச் செய்துகொண்டு வரும்போழ்து, முஸ்லிம்களுக்கும் ஆங்கிருந்த ஹீரா என்னும் ராஜ்ஜியத்துக்குக் கட்டுப்பட் டிருந்த வனவாசிகளான காட்டுமிருகாண்டிக் கூட்டத்தார்களுக்கும் இடையில் மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டது. இந்த ஹீரா என்னும் ராஜ்ஜியமானது பாரசீக தேசத்தின் ஏகாதிபத்தி

யத்துக்குக் கட்டுப்பட் டிருந்தது. அக்காலத்தில் அந்த ராஜ்ஜியத்துக் குட்பட்டிருந்த ஹஜர் என்னும் பகுதியிலிருந்து—இந்த ஹஜர் என்பது அரபிநாட்டின் வடகிழக்கு எல்லையில் ஷால்டியாவின் ஓரமா யிருந்தது—மேற்கே புராத்நதியின் கிளைநதிவரை ஒரு பாலைவனப் பிரதேசம் பரவியிருந்தது. இது நஜ்தின் தொடர்ச்சியா யிருந்துகொண்டு, வடக்கில் ஹெளரான் என்னும் மேட்டு நிலங்களாலும் தத்மூ ரென்னும் நகரத்தாலும் சூழப்பட் டிருந்தது. அத்தேசத்தில் பாமரத்தன்மையுள்ள பழங்குடிகள் பலர் வாழ்ந்து வந்தார்கள்; அவர்கள் பெரும்பாலும் கிறிஸ்து மதத்தைப் பின்பற்றி வந்தார்கள்; இவர்கள்தாம் பாரசிக ராஜ்ஜியத்தின்கீழ்ப் பணிந்துகிடந்தார்க ளென்றாலோ, இவர்களுடைய இனத்தவராயிருந்த சிரியா வாசிகளுள் சிலர் உரோம்தேசத்தின் ஆட்சியின்கீழே அடங்கிக் கிடந்தார்கள். இவர்களுள் முக்கியமான வர்க்கத்தினர் பெயர் கஸ்ஸான் என்பதாகும். ஆனால், அவர்களுக்குக் கிழக்கே யிருந்த பனூ தக்லிப் என்னும் கூட்டத்தார்கள் பாரசிக ராஜ்ஜியத்தின் கீழேயே அவர்களால் ஆளப்பட்ட ஜாதியாரா யிருந்துவந்தார்கள். இவர்க ளெல்லாரும் ஒருவரோ டொருவர் பந்துமித்திரர்க ளாகவே காலங்கழித்து வந்தார்கள். இக்கூட்டத்தார்களுக்கும் இவர்களை அண்மியுள்ள அரபிகளுக்கும் இடையிலுங்கூட அதிகமான நட்புரிமை காணப்பட்டுவந்தது.

ஆனால், புராத்நதி தீரத்திலுள்ள வளம் பொருந்திய நாடுக ளெல்லாம் ஆதிமுதல் அரபிகளாலேயே குடியேறப்பட்டு வந்தன; இவர்கள் பதவீகளைப்

போலே நாடோடியா யில்லாமல் நகரங்களிலேயே வசித்துவந்தார்கள். கிருஷித்தொழிலே இவர்களுக்கு முக்கிய ஜீவனமாயிருந்து வந்தது. முஸ்லிம்கள் அரப்நாட்டின் வட

மெஸபொட்டேமியா இராக்கரப் விவரம்

கீழ்மாகாணத்திலுள்ள கிளர்ச்சிக்காரர்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு வரும்போழ்து, அவர்களுடன் நட்பாயிருந்த அந்தப் பாரசிக ராஜ்ஜியத்தின் பாமரக் குடிகளும் கிலாபத் ராஜ்ஜியத்துக்கு விரோதமாய்க் கலகம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். இஃதல்லாமல் புராத் (யூபுரத்தீஸ்) நதிக்கும் திஜ்லா (தைக்ரீஸ்) நதிக்கும் இடையிலுள்ள வளம்பொருந்திய பூசாரமும் பல தேசத்து மன்னர்களுடைய பார்வையையும் தன் பால் இழுத்துக்கொண் டிருந்தது. சமுத்திரத்தில் வீழ்வதற்குச் சிலநூறு மைல்கள் வடமேற்கிலேயே புராத்நதியும் திஜ்லாநதியும் ஷத்துல் அரப் என்னும் பெயரைப் பெற்றுவிடுகின்றன. இந்த இரண்டு நதிகளும் ஒன்றுசேர்வதற்கு முன்னே வடமேற்குத் திசையில் இவ் விரண்டு நதிகளுக்கு மிடையிலிருந்த பாகத்துக்குத்தான் புராதன காலத்தில் மெஸபொட்டேமியா (இராக்) என்று பெயர் வழங்கிவந்தது. இதன் தென்கிழக்கி லுள்ள பகுதிக்குத்தான் அக்காலத்திய அரபிகள் ‘இராக் அரப்’ என்று நாமம் சூட்டி யிருந்தார்கள். இந்த இராக் அரபில்தான் பண்டைக்காலத்து ராஜ்ஜியங்களாகிய பாபிலோனியாவும் (பாபில்), ஷால்டியாவும் (சவாத்) இருந்துவந்தன. புராத், திஜ்லா ஆகிய இவ்விரு நதியோரங்களிலேதாம் மகா கீர்த்திவாய்ந்த பலப்பல பட்டணங்கள் கட்டப்பட்டிருந்தன. அஸ்ஸீரிய அரசர்களா யிருந்த அந்தப் பலசாலிகளின் ராஜதானியாகிய நைனவே என்னும்

நகரமானது திஜ்லா நதிதீரத்திலேதான் கட்டப்பட்டிருந்தது. பாரசீக தேசத்து மாகாணாதிபதிகள் வாழ்ந்துவருதற்காக அமைக்கப்பட்டிருந்த மதாயின் என்னும் பட்டணமும் அந்நதிக்கரையின் மீதேதான் இயற்றப்பெற்றிருந்தது. அதே நதிதீரத்தின்மீதுதான் மத்திய காலத்தில் வாழ்ந்துவந்த அப்பாஸ் வம்சத்தைச் சார்ந்த மன்ஸூர் முதலிய கலீபாக்களால் நிர்மாணிக்கப்பட்ட பகுதாதென்னும்* பட்டணமும் கட்டப்பட்டிருக்கிறது. ஆனால், புராத்நதியின்மீது பழைய பாபிலோன் 'பட்டணமும், அரபிகளால் நிர்மாணிக்கப்பட்ட கூபாவும் ஹீராவும், மற்றும் பல நகரங்களும் கட்டப்பட்டிருந்தன. திஜ்லா நதிக்குக் கிழக்கேயுள்ள பாரசீக தேசத்தின் மத்தியபாகத்தைத் தான் அரபிகள் "இராக்கெ அஜம்" என்று அழைத்து வந்தார்கள்.

இப்பால் நாம், பாரசீக சாம்ராஜ்ஜியத்துடன் நிகழ்த்தப்பட்ட படையெடுப்பிற்குரிய நிலைமையைக் குறித்து ஒருசிறிது ஆராயத் தொடங்குவாம். பஹ்ரைன் மாகாணத்தில் எழுந்த கலகத்தை அடக்கும் விஷயத்தில் முதன்னா பின் ஹாரித் ஷைபானீ என்பார் எத்துணை அதிகமான உதவிகளைப் புரிந்துவந்தா

* "பகுதாத்" – ஆதியில் இது "பாக்தாத்" என்றேயிருந்தது; "நீதத்துக்கான நந்தனவனம்" என்பது அதன் பொருளாம். பாரசீக நீதிமானாய் விளங்கிய மன்னர்பிரான் நவ்ஷேர்வான் என்பான் வாரமொரு முறை ஆங்குச் சென்று, தன்பத்துக் குள்ளாயவர்களுக்குச் சரியான நீதி வழங்கிக்கொண்டிருந்தான். இக் காரணத்தினால்தான் அந்நகருக்கு, பாக் (நந்தனவனம்) தாத் (நீதம்) என்னும் நாமம் உண்டாவதாயிற்று என்பர் சரித்திராசிரியர்.

ரென்பது குறித்து நாம் இதற்கு முன்னம் படித்திருக்கிறோம். அதன்பிறகு பாரசீகக் கடற்கரை யோரமாக வடக்கு நோக்கிச் சென்ருரென்றும் கேள்வி யுறுகின்ருேம். இவ்வாறு இவர் பஹ்ரைனில் செய்த வேலைக்கும், வடக்கு நோக்கிப் புறப்பட்டுச் சென்றதற்கும் யாது சம்பந்தம் இருந்திருக்கக் கூடுமென்பதை நாம் இப்பொழுது நன்குஆராய்ந்து பார்த்துத் தக்கமுடிபுகாண்டல் வேண்டும். இவ் விரண்டு சம்பவங்களுக் கிடையேயுள்ள சம்பந்தா சம்பந்தத்தை ஒருவாறு உணர்ந்துகொள்ள வேண்டுமாயின், நாம் மற்ருெரு மூன்ருவது சம்பவத்தின் தொடர்பினையும் இங்கே கொண்டுவந்து நுழைத்தல் வேண்டும்.

முதன்னுவின் படை யெடுப்பு ஹி. 12 (கி. பி. 633)

பஹ்ரைன் கலகத்தின்போழ்து பனூ பக்ரென்னும் கூட்டத்தாருக்கு உபகாரம் புரிவான்வேண்டிப் பாரசிக நாட்டினர் உதவிப்படைகளை அனுப்பி வைத்தார்க ளென்று இதற்கு முன்னரே நாம் தெரிந்துகொண் டிருக்கிறோம். ஆதலின், இதுசமயம் முதன்னுவானவர் வடக்கு நோக்கிச் சென்றதானது, ஆங்கிருந்துவந்த கலகக்காரர்களையும் அவர்களுக் குதவி புரிந்துவந்த நேசப்படைகளாகிய பாரசீகர்களையும் அங்கிருந்து விரட்டுவதையேதான் பெருநோக்காகக் கொண்டிருந்த தென்று ஒருவாறு ஊகித்துக்கொள்ளக் கடமைப்பட் டிருக்கின்ருேம். அவ்விடத்திலேதான் மற்றும் பல வர்க்கத்தினர் வசித்துவந்ததோடு, முதன்னுவின் சொந்தக் கோத்திரத்தாரும் வாழ்ந்து வந்தார்கள். அப்படிப்பட்ட வர்க்கத்தின ரெல்லாரும் பாரசீகர்களால் அடிக்கடி இழைக்கப்பட்டுவந்த அதிக்கிரமத்தைக் கண்டும் அக்கிரமத்தைக் கொண்டும்

அதிகம் மனம் புழுங்கிக்கொண் டிருந்தார்கள். ஆகவே, முதன்னு வென்பவர் அத்தகைய மனத் தாங்கலுள்ள மனிதர்களுட னெல்லாம் ஓர் உடன் படிக்கை செய்துகொண்டு, 8,000 வீரர்களையும் கிளப்பிவிட்டார். ஆனால், பாரசிக ராஜ்ஜியத்தால் திரட்டப்பட்டிருந்த படைகளுக்கு முன்னே முதன்னு வின் எண்ணுயிரம் படைகளும் மிகமிகக் குறைவாகவே காணப்பட்டுவந்தன.

ஆதலினுல்தான், இதுவரை முஸைலமாவால் கிளப்பப்பட் டிருந்த கலகத்தை அடக்கிவிட்ட காலி

காலித் (ரலி) முதன்னுவுக்கு உதவியாகச் சென்று சேனைத் தலைமையை வகித்தல்

தென்னும் பெயர்போன தளபதியை அபூபக்ர் சித்தீக்[ரலி] அவர்கள் உடனே உபல்லா என்னும் இடத்தைநோக்கிச் செல்லுமாறு கட்டளை யிட்டுவிட்டார்கள்; இந்த உபல்லா வென்னு மிடம் இக்கால பஸரா வென்னும் நகரத்துக்குச் சமீபமாகவே அக்காலத்தில் அமைந்திருந்த தென்னலாம். காலி திப்னு வலீதென்பார் அந்த முதன்னுவுக்கு உதவிப் படையாக அனுப்பி வைக்கப்பட்ட போதினும், அந்தப் படையெடுப்பின் முக்கியமாயுள்ள தளபதி ஸ்தானமானது இவரிடமேதான் ஒப்படைக்கப்பட்டு விடப்படுதல் வேண்டுமென்னும் தாக்கீ தொன்றும் முதன்னு வென்பாருக்கு அனுப்பிவைக்கப்பட்டது. அந்த முஸ்லிம்களுக்கும் பாரசீகச் சைன்னியங்களுக் கும் இடையிலேற்பட்ட முதற்சண்டையானது பார சீக எல்லையோரமாகவும், உபல்லாவிற்குத் தெற்கே உத்தேசம் ஐம்பதுமைல் தூரத்திலும் உள்ள ஹபீ ரென்னும் இடத்திலேதான் போடப்பட்டது. அந்த ஆரம்பச் சண்டையில் பாரசீகர்கள் அடியோடு முறி

யடிக்கப்பட்டுப் போயினார்கள். இந்தச் சண்டையானது, "தாத்துஸ் ஸலாஸில்"—அஃதாவது சங்கிலிச் சண்டை—என்று அழைக்கப்பட்டு வருகின்றது. என்னெனின், அந்த யுத்தத்தின்போழ்து பாரசீக சிப்பாயி களெல்லாரும் தங்களைச் சங்கிலிகளைக்கொண்டு ஒருவரோடொருவர் பிணைத்துக்கொண்டு நின்றார்களாம்.

காலி தென்பார்ரலி எதிரிகளுக்கு அடிமேலடி கொடுத்து, உலைஸில் நடைபெற்ற ஒரு முக்கியமான யுத்தத்தில் நன்றாக அவர்களை யெல்லாம் தோற்கடித்து விட்டு, புராத் நதியின் மேற்குக் கரையை யொட்டியே,

ஹீரா பிடிக்கப்பட்டது

இக்காலத்தில் கூபாநகர் நிர்மாணிக்கப்பட் டிருக்கும் இடத்திற் கருகிலிருந்த ஹீரா என்னும் இடம்வரை சென்று சேர்ந்துவிட்டார். புராத் நதிக்கு மேற்குப் பகுதியிலுள்ள பிராந்திய முழுதும் பாரசீகர்களால் கைவயப் படுத்தப்பட் டிருந்தபோதினும், ஆங்கெல்லாம் அரபிக்குடிகளே முழுக்க முழுக்க வசித்துவந்தார்கள். ஹஜர் என்னும் பகுதியைச் சார்ந்தவர்கள் கிலாபத் ராஜ்ஜியத்திற்கு விரோதமாகக் கலகம் கிளப்பத் தலைப்பட்டபொழுது, அக் கலகக்காரர்களுடன் நண்பர்களா யிருந்துவந்த ஹீரா என்னும் நகரவாசிகளும் இந்த இஸ்லாமிய குடியரசிற்கு விரோதமாய்க் கலகம் பண்ணக் கிளம்பினார்கள். அதுபோழ்து முஸ்லிம் தளபதியாய் விளங்கிய காலி திப்னு வலீ தென்பார் ஸவாத் (ஷால்டியா) என்னும் மாகாணத்திலிருந்துவந்த பாரசீக அதிகாரிக்குத் தெரிவித்து, அக் கலகத்தை அடக்குமாறு வேண்டிக் கொண்டார்; ஆனால், அந்த மாகாணாதிபதி தன் அதிகார எல்லைக்குள் நிகழ்ந்த கலகத்தை அடக்காமல் முஸ்லிம் வீரர்

களைப் போருக் கழைத்தான். அதன்பின்பு நிகழ்ந்த யுத்தத்தில் ஹீரா என்னும் அந்தத் தலைநகரம் முற்றுகையிடப்பட்டு, பாரசீகச் சைன்னிய மெல்லாம் புராத்நதிக்குக் கிழக்குப் புறமாயுள்ள மெஸபொடேமியாவிற் குள்ளே (இராக் எல்லைக்குள்) துரத்தியடிக்கப்பட்டன. அதனால் அந்த ஷால்டியர்களுக்குப் பெரியதொரு நஷ்டம் ஏற்பட்டு, ஆங் கிருந்துவந்த கிறிஸ்தவ அரசாங்கமும் முஸ்லிம்களுக்குக் கப்பங் கட்டுவ தென்னும் ஒரு நிபந்தனையின்மீது அடிபணிந்து, அவர்களுடனே ஓர் உடன்படிக்கையும் செய்து முடித்துக்கொண்டு விட்டது. அந்தக் கிறிஸ்தவ ராஜாங்கம் கொடுப்பதாக ஏற்றுக்கொண்ட கப்பத்திற்குப் பெயர் 'ஜிஸ்யா' என்று கூறப்படும். ஆனால், ஆங்கு வசித்துவந்த பெரும்பெரும் நிலச்சுவான்தார்க ளெல்லாரும் இஸ்லாத்தைத் தழுவி, கிலாபத் ராஜ்ஜியத்தின் தலைமையை அங்கீகரித்துக் கொண்டு விட்டார்கள். அவர்களுடைய நிலங்களை யெல்லாம் அவர்கள் வயமே ஒப்படைத்துவிட்டு, அவற்றின்மீது முஸ்லிம்கள் ஒரு தீர்வையை மட்டுமே ஏற்படுத்தி விட்டார்கள். ஆயின், அத் தேசத்திலிருந்த குடியானவர்களை யெல்லாம் அம் முஸ்லிம்கள் ஒன்றுஞ் செய்யாது சுயேச்சையாகவே விட்டுவிட்டார்கள்.

ஜிஸ்யாவின் தாத்பரியம் யாது

['ஜிஸ்யா' என்னும் பதம் 'ஜஸா' என்பதிலிருந்து தோன்றி யிருக்கிறது; 'ஜஸா' என்பதன் பொருள் "நல்ல பிரதிபலன்" என்பதாகும். இஸ்லாமிய ராஜ்ஜியத்தில் குடியிருந்துவரும் முஸ்லிமல்லாதவர்கள் மீது விதிக்கப்பட்டுவரும் ஒருவகை வரிக்கு இப்பெயர் கூறுவது வழக்கம். அத்தகைய

வரி இவ்வாறு பெயரிட் டழைக்கப்படுவதன் கார ணம், அப்படிப்பட்ட முஸ்லிமல்லாத பிரஜைகள் இஸ் லாமிய ராஜ்ஜியத்தில் குடியிருந்து வருதலினல் தங்கள் உயிருக்கும் பொருளுக்கும் பெற்றுக்கொண்டு வரும் பந்தோபஸ்தே தானுகும். கிலாபத் ராஜ்ஜியத்தில் வாழ்ந்துவந்த முஸ்லிம்க ளெல்லாரும் யுத்தத்திற்குச் செல்லவேண்டியது ஒரு முக்கியக் கடமையாக இருந்து வந்தமையால், அவர்க ளெல்லாரும் இப்படிப்பட்ட வரியினின்றும் விலக்கி வைக்கப்பட் டிருந்தார்கள். ஆனுல், இஸ்லாமிய குடியரசில் பாதுகாப்பிற் குரிய முழுப்பொறுப்பும் அம்முஸ்லிம்களேயே சார்ந்திருந்த தென்னலாம். யுத்தகள வாழ்க்கை யென்பது ஒரு சுகவாழ்க்கை யன்று; அம் முஸ்லிம்கள் தேசப் பாது காப்பிற்குரிய யுத்தங்களே யெல்லாம் நடாத்திவந்தார் கள்; அவற்றிற்காகத் தங்கள் உடல், பொருள், ஆவி யனைத்தையும் தத்தம் செய்துவந்தார்கள். ஆனுல், முஸ்லிமல்லாதவர்கள் இப்படிப்பட்ட துன்பங்களுக் கெல்லாம் ஆளாக்கப்பட்டதே கிடையாது; இக்கார ணத்தினுலேதான் அவர்கள் ஒருசிறு தொகையை வரியாகக் கொடுத்துவந்தார்கள். ஆழ்ந்து ஆராய்ச்சி செய்பவர்களுக் கெல்லாம் மேற்கூறிய இரண்டு விதங் களில் எஃதொன்று எளியவாழ்க்கை யென்பது மிகத் தெளிவாய் விளங்கக் கிடக்காமற் போகாது. இற்றை நாளிலுங்கூடத் தேசமக்கள் ஒவ்வொருவரும் யுத்த களத்திற்குப் புறப்பட எப்பொழுதுமே ஆயத்தமா யிருந்துவர வேண்டு மென்னும் சட்டம் பிறப்பிக்கப் பட் டிருக்கும் நாடுகளிலுள்ள ஜனங்களுள் எத்தனை பேர் ஒருசிறு தொகையை வரியாகக் கொடுத்துவிட்டு அப்படிப்பட்ட யுத்தக் கடமையினின்று விலகிக்

கொள்ள விரும்பமாட்டார்களென்று நீங்கள் நினைக்கின்றீர்கள்! ஜிஸ்யா விஷயத்தில் மற்றொரு நிபந்தனையும் இல்லாமற் போகவில்லை. அஃதாவது, இந்த ஜிஸ்யா வரியானது முஸ்லிம்களல்லாத எல்லா மக்கள் மீதும் ஒரேவிதமாக விதிக்கப்படுவது வழக்கமில்லை. 20 வயதுக் குட்பட்டவர்களும், 50 வயதுக்கு மேற்பட்டவர்களுமாய ஆண்கள், எல்லாப் பெண்மணிகள் நெடிய வியாதிகளால் துன்புற்றுக் கிடப்பவர்கள், குருடர்கள், ஏழைகள் ஆகிய எல்லாரும் இவ் வரியினின்று விலக்கப்பட் டிருந்தார்கள். இன்னமும், முஸ்லிம்கள் ஜ(க்)காத் தென்னும் நாமத்தின்கீழும் ஒரு பெரிய வரியையும் கொடுத்துவரக் கடமைப்பட் டிருக்கிறார்கள்; இவ்வேழை விகிதமானது ஜிஸ்யாவைப் பார்க்கினும் மிகப்பெரிய வரியாகவே இருந்து வந்ததென்னலாம். என்னெனின், ஒவ்வொரு முஸ்லிமும் வருஷ மிகுதியிலிருந்து 100-க்கு $2\frac{1}{2}$ விகிதம் ஜ(க்)காத் கொடுக்க வேண்டும். ஆனால், ஜிஸ்யாவென்பது இத்துணைப் பெரிய வரியன்று. இவ்வரி கொடுக்கக் கட்டுப்பட்டவர்கள் எத்துணைப் பெரிய செல்வர்களா யிருப்பினும், தலையொன்றிற்கு ஆண்டொன்றிற்கு ரூபாய் 20 மட்டுமேதான் கொடுக்க வேண்டியவர்களா யிருந்துவந்தார்கள்.]

ஹீராவில் வசித்துவந்த கிறிஸ்தவக் குடிமக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட இறைப்பொருளானது ஜிஸ்யாவென் றழைக்கப் படுகின்றது; இதுதான் இஸ்லாமிய சரித்திரத்தில் முதன்முதலாக விதிக்கப்பட்ட ஜிஸ்யா வென்னும் வரிப்பணமாகும். உடன்படிக்கையின் நிபந்தனைப்பிரகாரம் கொடுக்கப்பட்ட

ஜிஸ்யா வென்பது கொள்ளைப் பொருளா

திறைப்பொரு ளல்லது, அந்த ஹீராவாசிகள் அம் முஸ்லிம்களுக்குச் சம்மானப் பொருள்களும் அதிகம் கொடுத்து மரியாதை செய்தார்கள். இவற்றினை யெல்லாம் மதீனாவிலிருந்துவந்த கலீபாவானவர் ஏற்றுக்கொண்ட போழ்து, இவற்றிற்குரிய கிரயத்தொகையை அந்த ஹீராவாசிகள் கொடுக்க வேண்டியிருந்த கப்பத் தொகையிலிருந்து கழித்துத் தள்ளுபடி செய்து விட்டார்கள். இவ்வண்ணமாக இந்தக் குடியரசுத்தலைவர் நடந்துவந்திருக்கும்போழ்தும், அக்கால முஸ்லிம்கள் கொள்ளைப் பொருள்மீது வைத்த பேராசையாலேதான் அண்டை அயலிலுள்ள தேசத்தார்களுட னெல்லாம் வலுவிலே சண்டைக்குச் சென்றார்க ளென்று கூறத் துணிவதானது எத்துணை அறியாத்தனமான காரியமா யிருந்துவருகிற தென்பதை நீங்களே நிதானித்துப் பார்த்துக் கொள்ளக் கடவீர்களாக.

யுத்தகளப்பொருள்கள் கொள்ளைப் பொருளா

பகிரங்க யுத்தத்தில் ஒரு கட்சியார் தோல்வியுற்று மற்றொரு கட்சியார் ஜயபேரிகை கொட்ட முற்படுங்கால், தோல்வி யுற்றவர்களின் ஆகாராதிகளும் மற்று முள்ள எல்லாச் சாமான்களும் வாகைமாலை சூடிய அந்த முஸ்லிம்களின் கைவயம் அகப்பட்டுக் கொண்டன வென்பது ஒரு சந்தேகமற்ற சரதமேயாகும். ஆனால், இச்செய்கையை எவ்வாறு கொள்ளையடித்தல் என்று கூறக்கூடும்? நாகரிகம் மிக்குள்ள இந்த 20-ஆம் நூற்றாண்டிலுங்கூட யுத்தகளத்திலிருந்து வெற்றி கொண்டவர்களால் வாரிக்கொள்ளப்படும் எதிரிகளின் பொருள்க ளெல்லாம் சட்டபூர்வமான நல்ல பொருள்க ளென்றேதாம் அங்கீகரிக்கப்

பட்டு வருகின்றன. அக்கால முஸ்லிம்களும் தோல்வி யுற்ற எதிரிகளின் யுத்தகளப் பொருள்களை யெல்லாம் இவ்வாறாகத்தான் சேகரித்துக் கொண்டார்களல்லது, வேறெந்த அக்கிரம முறையாலும் கொள்ளையடிக்கத் துணிந்தனரில்லை; அக் காலத்தில் அம் முஸ்லிம்கள் செய்தது அற்றைநாள் தேசமக்களால் மட்டுமல்லாமல் இற்றைநாள் நாகரிக ஜாதியார்களாலும் அனுமதிக்கப் பட்ட நல்லசெய்கை யென்றேதான் அங்கீகரிக்கப்பட் டிருக்கிறது.

யுத்தகளப் பொருளுக்காகவா சண்டை

எனினும், இப்பொழுது நாம் கவனித்துப் பார்க்க வேண்டிய மற்றொரு விஷயமும் ஈங்கில்லாது போக வில்லை. அம் முஸ்லிம்கள் யுத்த களத் திலிருந்து வாரிக்கொண்டு போன எதிரிகளின் பொருள்க ளெல்லாம் சட்டப் பிரகாரம் நியாயமானவையே யாயினும் அத்தகைய யுத்தகளப் பொருள்களை நாடியே தானு அம் முஸ்லிம்கள் அப்படிப்பட்ட சண்டைகளை யெல்லாம் ஆரம்பித்தார்கள்? என்னும் விஷயம் பெரிதும் ஆராயப்படத் தக்கதே யாகும். உண்மையை உசாவிப் பார்க்குமளவில், இப்படிப்பட்ட கொள்ளை யெண்ணமானது அம் முஸ்லிம்களின் மனத்தினுள்ளே ஒருசிறிதும் பிரவேசித்ததே கிடையா தென்றுதான் நாம் மிகச் செவ்விதாய்த் தெரிந்துகொண்டு விடுகின் றோம். இறுதியாக நோக்குமிடத்து, அத்தகைய யுத் தங்களில் முஸ்லிம்கள்—ஹஜ்ரத் அபூபக்ர்ரலி ஹஜ்ரத் உமர்ரலி போன்றவர்களும்—இறங்கிவிடுமாறு மூலையி லிருந்தாரை முற்றத்தி லிழுத்துவிட்டவர்கள் எவ ரென்று எண்ணிப் பார்க்கக் கடவீர்கள். இவ்விரு கலிபாக்களும் இப்படிப்பட்ட கொள்ளைப் பொருள்

கள்மீது வைத்திருந்த பேராசையைக்கொண்டேதான் அப்படிப்பட்ட அனாவசிய யுத்தங்களையெல்லாம் வலுவிலே கிளப்பிவிட்டார்களென்று எதிரிகள் கூறிவருவது வாஸ்தவமாயிருந்திருப்பின், அந்த யுத்தங்களால் கைக்குக் கிடைத்த பொருள்களிலிருந்து அதிகமான பகுதிகளை அவர்களே பங்கிட்டுக்கொண்டிருத்தல் வேண்டும். ஆனால், அப்படிப்பட்ட யுத்தகளப் பொருள்களை யெல்லாம் இந்த கலீபாக்கள் தங்கள் சொந்த உபயோகத்திற்காக ஒரு சிறிதையும் உபயோகப் படுத்திக் கொள்ளவில்லை யென்பது சரித்திரம் கூறும் சான்றாகும்.

ஆனால், அதற்குமாறாக ஹஜ்ரத் உமர்[ரலி] அவர்கள் காலத்தில் மற்றொரு விஷயம் நடைபெற்றிருக்கின்றது: அந்த இரண்டாவது கலீபாவின் ஆட்சியின் போழ்து, பாரசிகமும் சிரியாநாடும் முஸ்லிம் சைன்னியங்களுக்கு முன்னே சரணாகதி யடைந்துவிட்டக்கால், பணம், பண்டம், விலையுயர்ந்த ஆபரணாதிகள் போன்ற அரிய பொருள்களெல்லாம் ஏராளமாக முஸ்லிம் ராஜதானி நகருக்குள் கொண்டுவந்து குவிக்கப்பட்ட பொழுது, அந்தக் கண்ணியமிக்க கலீபாவானவர் தமது நேத்திரத்தினின்றுந் துளிக்கத் தொடங்கிய கண்ணீரைத் தடுத்துக்கொள்ள முடியாது போயிற்று.

“இப்படிப்பட்ட சுகபோக வாழ்க்கைக்குரிய பொருள்களெல்லாம் நமக்கும் நாசகாலத்தை உண்டாக்கா திருக்கவேண்டுமென்றேதான் யான் பெரிதும் அஞ்சுகின்றேன்,” என்று அந்த கலீபாவானவர் உண்மையிலே அழுதுகொண்டே கூறினார். உலகப்

பொருள்களாகிய அவ் வநித்திய வஸ்துக்கள்மீது அணுத்துணையும் பற்றுக்கொள்ளா திருந்துவந்த அந்த பரிசுத்த மஹான் 'கொள்ளை' யென்று சொல்லக் கூடிய அத்தகைய இழிதொழிலுக்காக அனுவசியச் சண்டையில் இறங்கி யிருப்பாரென்று கூறத்துணி வது எத்துணை அக்கிரமமாகும்? எதிர்மத வாதிகள் கூறிவருவதே போன்று முஸ்லிம்கள் நாடியிருப்பார்க ளாயின், அவர்கள் வெற்றிக் கொடி நாட்டிய தேசங் களில் அவ்வாறாகவேதான் நடந்துகொண் டிருப்பார் கள். ஆனால், சரித்திரமென்பது அவ்வா றொன்றும் எழுதி வைத்திருக்க வில்லை. அந்த வெற்றிகொண்ட முஸ்லிம்கள் தோல்வியுற்றமனிதர்களையெல்லாம் மிக்க மரியாதையுடனும் அதிகமான பெருந்தன்மை யுட னுமேதான் நடாத்தியிருக்கின்றார்கள். இக் கார ணத்தினாலேதான் சிரியாநாட்டி லிருந்துவந்த கிறிஸ் தவ மக்களெல்லாரும் தங்கள் சுஜாதியாரின் ஆட்சி யின்கீழே இருந்துவருவதைப் பார்க்கினும் முஸ்லிம் களின் ஆட்சியி லிருப்பதையே அதிகம் விரும்பி நின் றார்கள்; இவ்வாறாகத்தான் பாரஸீகநாட்டில் வாழ்ந்து வந்த அக்கினி வணக்கக்காரர்களும் தங்களுடைய சொந்த ஜாதியாரின் கொடுங்கோன்மையை விட்டு முஸ்லிம்களின் செங்கோன்மையின் கீழே வாழ்ந்து வருவதைத்தான் அதிகமதிகம் விரும்பி யிருந்தார்க ளென்று அக்காலச் சரித்திரம் சான்று கூறுநின்றது. ஸர் வில்லியம் மூய்ர்கூடத் தாம் வரைந்துள்ள "தி கலீபேட்" என்னும் கிரந்தத்தில் இவ் விஷயத்தை இவ்வாறு ஒத்துக்கொண் டிருக்கிறார்:

"சிரியா நாட்டு மக்கள்களெல்லாருங்கூடத் தங்களால் அனுபவிக்கப்பட்டு வந்த மதசம்பந்தமான சங்கடங்களுடனே அதிகமான வரிப்பளுவினால் தாங்கமுடியாது கஷ்டப்பட்டு வந்தார்கள். இக் காரணத்தினாலேதான் அரபியர்களால் தங்கள் நாடு கைப்பற்றப்பட்டு விடுமாயின், மெய்யாகவே தங்களுக்கு அதிகமான நன்மை கிடைத்திடுதல் கூடுமென்றெண்ணியவர்களாய், தங்கள் தேசம் அந்த அரபிகளால் படையெடுக்கப்பட்டு வந்ததை வாளா இருந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள்; என்னெனின், அந்த அரபிகள் சூறையாடுவது வழக்கமில்லை. அவர்களுடைய ஆட்சி முறையானது தங்களுடைய பண்டைக்கால ஆட்சி முறையைக் காட்டினும் மிதமாகவும் தாராளமுள்ளதாகவுமே இருந்துவந்திருக்கிறது"—(பக்கம் 65).

வில்லியம் மூயிர் கூறும்சாக்ஷியம்

இன்னம் என்ன வேண்டும்? இதுவேயுமன்றி, முஸ்லிம் ஸிப்பாஹிகளுடனே கைகலந்து கொண்டு இஸ்லாத்தின் கொடியின்கீழே எண்ணிறந்த கிறிஸ்தவப் போர் வீரர்களும் பிறகு பாரசீக ராஜ்ஜியத்துக்கு விரோதமாய் யுத்தம் புரிந்துவந்திருக்கிறார்கள்; ஆனால், இப்படிப்பட்ட கிறிஸ்தவர்களெல்லாருங்கூடக் கொள்ளையடிக்கும் கொடிய நோக்கத்துடனேதான் அந்தப் பாரசீகத்தின்மீது யுத்தத்திற்குப் புறப்பட்டார்களென்று எந்த ஐரோப்பிய சரித்திராசிரியரும் எழுதத் துணிந்தனரில்லை.

ஹீராவிலிருந்து புறப்பட்ட காலி திப்னு வலீதென்பார் வடக்கு நோக்கி அன்பார் என்னும் இடம்

வரை போய்ச் சேர்ந்தார். இந்த அன்பார் என்னும் ஸ்தலம் புராத்நதி தீரத்தின்மீது பேபலி லிருந்து சுமார் எட்டு மைல் தூரத்தி லிருந்து வந்தது. ஆங்குச்சென்ற காலித் தளபதி அவ் விடத்திலிருந்த கோட் டையை முற்றுகை போட்டுக் கைப்பற்றிக்கொண் டார். ஆங்கிருந்த மூன்று அஞ்சல்களைத் தாண்டிச் சென்ற தூரத்தில் அய்னுத் தம்ர் என்னுமிடம் அக் காலத்தில் இருந்துவந்தது; அதுதான் பனூ துக்ல பென்னும் வர்க்கத்தார் விஷமத்தனம் செய்துவந்த தற்கு மத்திப ஸ்தானமாய் விளங்கிவந்தது. அங்கி ருந்தேதான் ஸஜாஹ் என்னும் பெண் பொய்த் தீர்க்க தரிசினி மதீனாவைத் தாக்கும் நோக்கத்துடனே பனூ துக்லப் வர்க்கத்தினரைத் திரட்டிக் கொண்டு புறப் பட்டு வந்தாள். ஆகவே, காலி தென்பார் இஸ்லாத் திற்கு விரோதமாய் விஷமத்தனத்தைக் கிளப்பிய அப்படிப்பட்ட முக்கிய ஸ்தானத்தை நோக்கிப் படை யெடுத்துச் சென்றது இயற்கையாயுள்ள நியாயமாக வேதான் காணப்படாநின்றது. ஆதலினால் தான் காலி திப்னு வலீத் ஆங்குச் சென்று, அவ்விடத்தை யும் கைப்பற்றிக் கொண்டுவிட்டார். இந்தச் சேனா வீரர் தமது படையெடுப்பை அத்துணைத்தூரம் நெருக் கிச் சென்று, புராத்நதிக்கு மேற்குப் பகுதியிலுள்ள எல்லாப் பிராந்தியங்களையும் தம்வயமாக்கிக்கொண்ட தில் ஒருசிறிதும் ஆக்ஷேபமிருத்தற்கு இடமில்லையென் றேதான் இப்பொழுது நன்கு தெரிந்துகொண்டு விட் டோம். அந்த வீரத்தளபதி அவ்வாறு செய்து முடிக் காமல் அரைகுறையான ஏற்பாட்டுடனே விட்டுத் திரும்பிவந் திருப்பாராயின், அப்பகுதியில் விளையக்

அன்பாரும் அய்னுத்தம் ரும் காலித்(ரலி) கைவயமாதல்

கூடிய தீமைகளிலிருந்து அரபுநாட்டை மீட்டுவைத்த வராக ஆகியிருக்க மாட்டார். அரப் தேசத்திற்கு விரோதமாயுள்ள பகைமைக ளனைத்தும், அப் பிராந்தியத்திலேயே நன்றாக விதை போட்டே கொடிபடரச் செய்து விடப்பட்டன வென்னலாம்; ஆதலின், ஆங்கிருந்தேதான் அப்படிப்பட்ட விரோதங்களெல்லாம் ஸஜாஹின் தலைமையின் கீழே புறப்பட்டு இஸ்லாத்தை ஒழிக்க எதிர்த்து வந்திருக்கின்றன. எனவே, அப் பகுதியிலிருந்துவந்த எதிரிகள் அடியோடு முறியடிக்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட வேண்டுவது அத்தியாவசிய மாகவே காணப்படாநின்ற தன்றோ? இக்காரணத்தினாலேதான் காலி திப்னு வலீ தென்பார் அய்னுத் தம்ருக்குச் சென்று அப் பகைவர்களுடனே சண்டையைக் கிளப்பினார்; அந்த யுத்தத்தில் முஸ்லிம்களுக்கு இணையற்ற வெற்றியே கைகூடிற் றென்னலாம்; அதன் பின்பு காலி திப்னு வலீத்ரலி சிறிது காலம்வரை அவ் விடத்திலேயே தங்கிவிட்டுத் திரும்பினார்கள்.

நாம் இப்பொழுது சிரியாநாட்டு(ஷாம்தேய) எல்லைப்புறம் திரும்புவோம். பாரசீகநாட்டு எல்லைப்புறத்தில் நபிகள்திலகத்தின் நிர்யாணத்தின் பின்னரே தொந்தரைகள் தோன்றத் தொடங்கின வென்னலாம்; ஆனால், சிரியாநாட் டெல்லையிலோ, அப் பெருமானரது ஜீவிய வாழ்க்கையின் போழ்தே சங்கடங்கள் முளைக்கத் தலைப்பட்டு விட்டன. அஃதாவது, ஹிஜ்ரீ 8-இலேயே நம்பிரான்ஸல் உயிருடனிருந்த அமயத்தே சிரியாவின் எல்லைப்புறத்தில் முஸ்லிம்களுக்கும் புஸ்ராவின் தலைவனுக்கும் இடையே ஒருசிறு

வடக்கெல்லையை நோக்கிப் படையனுப்புதல்

சண்டை தொடங்கி விட்டது. அதன் பின்பு வடக்குப் பிராந்தியங்களில் வதிந்துவந்த மக்கள்கள் யுத்த ஸன்னாகங்களைச் செய்துவந்தார்களென்னும் செய்தி நபிகள்நாயகத்தின் திருச்சன்னிதானத்துக்குக் கொண்டுவரப்பட்ட போழ்து, அப் பெருமானாரவர்களே 30,000 படைகளைத் திரட்டிக்கொண்டு தபூக்வரை சென்று சேர்ந்தார்கள். ஆனால், அப்பகுதிகளில் அப்பொழுது எதிரிகளின் எந்த விதமான யுத்த ஏற்பாடும் இல்லாமை கண்டு, ஒன்றும்செய்ய அவசியமில்லாது வாளா திரும்பிவிட்டார்கள். இவ்வாறு நிகழ்வுற்றது ஹிஜ்ரீ 9-ஆம் ஆண்டிலாகும்.

பின்னர் நபிகள் திலகம் தங்கள் நிர்யாணத்திற்கு இரண்டுநாள் முன்னேதான் உஸாமாவின் தலைமையின் கீழே அந்தச் சிரியாவின் எல்லைப்புறத்தை நோக்கி ஒரு படையெடுப்பை அனுப்பி வைத்தார்கள். இவற்றையெல்லாம் நாம் அறிந்து கொள்வது யாதாயிருக்கின்றது? பாரசிகர்களைப் பார்க்கினும், சிரியா நாட்டெல்லைப்புறத்திலிருந்து வந்த கிறிஸ்தவக் குடிமக்களும், அவர்களது அரசாங்கத் தலைவனாய் விளங்கி வந்த ஹர்க்கலுமே தாம் அரப் ராஜ்ஜியதின்மீது அதிகமான கண்வைத் திருந்தார்களென்று மேற்கூறிய சம்பவங்களிலிருந் தெல்லாம் நாம் நன்கு தெரிந்து கொள்ளுகிறோம். இன்னம், அந்தச் சிரியாவின் பகுதியிலிருந்து அரப்நாட்டின் மீது படையெடுத்து வருவது, பாரசீகத்தின் எல்லையிலிருந்து படை யெடுத்துவருவதைப் பார்க்கினும், மிகவு மெளிய காரியமாகவே காணப்பட்டுவந்தது. என்னெனின், பாரசீக எல்லையைப் பார்க்கினும் சிரியாவின் எல்லை அரப்நாட்டை மிகவும் அணுகி யிருந்ததன்றோ? இன்

ணம், சிரியாவிலிருந்து வரக்கூடிய மார்க்கமானது மிக நன்ருகவே இருந்துகொண்டிருந்தது.

இன்னமும், சிரியாவின் எல்லைப்புறத்திலிருந்து அம் முஸ்லிம்கள் அதிகமான தொந்தரைகளையெல்லாம் எதிர்பார்த்திருப்பதற்கு மற்றும் பற்பல நல்ல காரணங்களும் இல்லாமற் போகவில்லை. உதாஹரணமாக, நபிகள்நாயகம் ஸல் உயிருடனிருந்துவந்த பொழுது, ஒருமுறை பெரிய கொடுஞ் சம்பவமொன்று நிகழ்ந்துவிட்டதென்று ஒருவர் வந்து செய்தி தெரியப் படுத்தியக்கால், ஹஜ்ரத் உமர் ரலி அவர்கள், "கஸ்ஸானியர்களா வந்துவிட்டார்கள்?" என்று அதிக ஆவலுடனே வினவினுர்கள்; அந்த கஸ்ஸானியர்கள் சிரியாவின் எல்லைப்புறத்தில், அரேபியாவின் வடகோடியில் வசித்துவந்த ஒரு வகைக் கிறிஸ்தவக் குடிமக்களாயிருந்துவந்தார்கள். ஆகவே, நபிகள்திலகம் அந்த வடக்கெல்லையைக் குறித்து சர்வ ஜாக்கிரதையுடனேயே சதா இருந்துவந்திருக்கிறுர்கள் என்பதை நாம் இப்பொழுது நன்கு தெரிந்துகொண்டுவிட்டோம். அவர்களுடைய ஜீவியகாலத்தில் மூன்றுமுறை அப்பெருமானுர் அவ் வடக்குப் பிராந்தியத்தை நோக்கிச் சைன்னியங்களை அனுப்பியும், அனுப்புமாறு அனுமதியளித்தும் இருக்கின்ருர்கள்.

பின்பு நபிபெருமான் நிர்யாணமடைந்துவிட்டதன் பின்னே அரப்நாடு முழுவதுமே அராஜகக் கிளர்ச்சியால் அல்லோலகல்லோலப்பட்டுக் கிடந்ததென்பது சரித்திர முணர்ந்த ஒரு சம்பவமேயாகும்; எனவே, அத்தகைய அராஜகக் கிளர்ச்சியை அடக்கும் பொருட்டு அதிக அழுத்தமான ராணுவபலம் வேண்

சிரியாவின் எல்லைக்குப் படையனுப்புதல்

டப்பட்டு வந்திருககிறது. விஷயம் அவ்வாறிருந்தும், உஸாமாவின் தலைமையின்கீழ்க் கிளப்பப்பட்ட படையெடுப்பானது ஒருநாட்கூடப் பிற்படுத்தப்படாது அக்கணமே சிரியாவின் எல்லைக்கு அனுப்பப்பட்டுத்தான் முடிக்கப்பட்டது. இதனால் அப்பகுதியி லிருந்து வந்த அபாயகரமானது எத்துணைப் பயங்கரமானதென்று ஒருவாறு ஊகித்துக் கொள்ளப்படல் கூடும்; உள்நாட்டு அராஜகக் கிளர்ச்சியா லெல்லாம் விளையவிருந்த அபாயத்தைக் காட்டினும் அதிக பலமான அபாயமே அந்தச் சிரியாவின் எல்லைப் பகுதியிலிந்து விளையக்கூடியதாக இருந்திருத்தல் வேண்டும் என்னும் உண்மையும் உணர்ந்துகொள்ளப்படற் குரியதேயாகும். உஸாமா என்பவர் மதீனாவிற்குத் திரும்பி வந்ததன் பின்னே அரேபியாவின் பல்வேறிடங்கட்கும் படையெடுப்புக்கள் அனுப்பப்பட்டுவந்தபொழுது, காலித் பின் ஸயீத் என்பாரது தலைமையின்கீழே ஒரு சைன்னியம் சிரியாவின் எல்லைப் புறத்தை நோக்கியும் அனுப்பியே வைக்கப்பட்டது.

தற்காப்புக்காக வேபடையனுப்பப்பட்டது

ஆயின், ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் அந்தத் தளபதிக்குச் சொல்லியனுப்பிய அறிவுரையானது பெரிதும் போற்றத்தக்க அத்துணைச் சிறப்புடைய தாகவே அமைந்து கிடக்கின்றது: காலித் பின் ஸயீத் எதிரிகள் எவரையும் சுயமே தாக்கக்கூடா தென்றும், ஆனால் தம்மீது வந்துவீழ்ந்து தாக்கும் எதிரிகளையே தடுத்துத் துரத்தியடிக்க வேண்டுமென்றும் கட்டளையிடப் பட்டிருந்தார். இன்னம், மகா அற்பக் குடியரசாய் விளங்கிவந்த அக்கால முஸ்லிம் ராஜ்ஜியமானது ரோமராஜ்ஜியம் போன்ற ஒரு மகா ராஜ்ஜி

யத்துடனே எதிர்த்துநின்று போர்புரியத் துணிந்திருக்க மாட்டாதென்று இதற்குமுன்னமே நாம் விரிவாக வியவகரித் திருக்கின்றோம்; அதுவும், அந்த ஆரம்பகாலச் சின்னஞ்சிறு குடியரசாய் விளங்கி வந்த கிலாபத் ராஜ்ஜியம் நாலு திக்குக்களிலும் அநேக விதமான எதிரிகளால் சூழ்ந்து மொய்க்கப்பட்டிருந்தபோதுதானா அவ்வேழை அரப்முஸ்லிம்கள் அத்துணைப் பெரிய மகா ராஜ்ஜியத்தின்மீது சுயமே படையெடுக்கத் துணிந்திருப்பார்கள்? ஆனால், அஃதொரு தற்காப்புப் படையெடுப்பாகவே யிருந்துவந் திருக்கிறது. என்னெனின், காலித் பின் வலீதென்பார் தற்காப்பி னிமித்தமா யல்லாமல் வேறு எக்காரணத்தைக் கொண்டும் வலுவிலே சண்டையே ஆரம்பித்தல் கூடாதென்று மிகக் கடுமையாகக் கட்டளையிடப்பெற் றிருந்தார்.

ஆனால், ஹர்க்கலின் அரசாங்க வாளானது எப்பொழுது சந்து கிடைக்குமென்று ஆவலுடனே வந்துவிட எதிர்பார்த்துக்கொண் டிருந்தது; ஆதலின், அரேபியாவின் உள்நாட்டில் பல அராஜகக் கலகங்கள் கிளம்பியதைக் கண்டு, அந்த உரோம ராஜ்ஜியமும் தனக்கு மோர் இடுக்குக் கிடைத்து விட்டதென்றே எண்ணிக்கொண்டு விட்டது. எனவேதான் அப்பொழுதே அம் முஸ்லிம்களை நசுக்கிவிட வேண்டுமென்றும், அதுவும் மிக அழுத்தமாகவே நசுக்கிவிட வேண்டுமென்றும் அவ்வெதிரிகள் எண்ணத் துணிந்துவிட்டனர்கள். காலித் பின் வலீதென்பார் தமக்கிடப்பட்டிருந்த கட்டளையின் பிரகாரம் வாளா இருந்துகொண் டிருந்தபொழுதே அந்த உரோமர்கள் ஆங்

அரேபியாவில் பூசல் கிளப்ப ரோமராஜ்ஜிய முயற்சிகள்

கிருந்த ஒரு பதவீவர்க்கத்தை அம் முஸ்லிம்களுக்கு விரோதமாகக் கிளப்பிவிட்டதோடு நில்லாது, தாங்களும் அந்த முஸ்லிம்களைத் தாக்கத் தந்திரங்கள் பல செய்துகொண் டிருந்தார்கள். இக் காரணத்தினுலே தான் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் அந்த உரோம ராஜ்ஜியத்தின் மீது யுத்தம் தொடங்கி விட்டதாக விளம்பரப்படுத்திவிட வேண்டிய ஆவசியகம் நேரிட்டு விட்ட தென்னலாம்; ஆதலின், அதிகமான முஸ்லிம் படைகள் அப் பிராந்தியத்திற்கு அக்கணமே அனுப்பி வைக்கப்பட்டன.

உரோம ராஜ்ஜியம்

அக் காலத்தில் மெஸபொட்டேமியாவுக்கும் ஷால்டியாவுக்கும் மேற்கி லிருந்துவந்த பிராந்தியங்களனைத்தும் உரோமாபுரியின் ஆட்சியின் கீழே யிருந்துவந்தன. ஆனல், பலஸ்தீனமும், ஷாம்தேசமும் இராக் தேசம் போலவே அரபிக் குடிகளால் நிரப்பப்பட்டிருந்தன. ஷாம் தேசத்தின் எல்லைக் குள்ளிருந்த மணல் வெளியாகிய நபூதென்னும் பாலைவனத்திலும் அந்த அராபி பதவீகளே அலைந்து திரிந்துகொண் டிருந்தார்கள். இவர்க ளெல்லாரும் ஜாதியாசார முறைப்பிரகாரம் இஸ்லாமிய குடியரசின் உள்ளேதான் சேர்ந்திருத்தல் வேண்டும். உஸாமா வென்பவர் முன்பு எல்லைப் புறக் கலகங்களை யெல்லாம் அடக்கி வைப்பான் வேண்டிப் படையெடுத்துச் சென்றதைக் கண்ட அந்த அரபிக் குடிமக்கள் அதிகமான பரபரப்பையே அடைந்து விட்டார்கள்.

இதனுல் ஷாம்தேசத்திலிருந்த உரோம்தேசவாசிகள் இந்த நூதன முஸ்லிம்கள்மீது அதிகமான அருவருப்பும் அசூயையும் கொண்டுவிட்டார்கள். இக் கார

னத்திலுலே அவர்கள் பல்க்காவென்னு மிடத்தில் பெருந்திரளான சைன்னிய மொன்றைச் சேகரம் செய்து வைத்தார்கள். இஸ்லாமிய ராஜ்ஜியத்தின் எல்லைப்புறத் தோரமாக உரோம்தேசவாசிகள் பெரிய தொரு சேனையைத் திரட்டி வைத்துக்கொண்டிருப் பது முஸ்லிம் ராஜ்ஜியத்திற்குச் சதா ஆபத்தையே விளைக்கக் கூடுமெனக் கண்ட முதல் கலீபாவானவர் அந்த உரோமர்களின் படையை ஒழித்துவிடுவதே சாலச்சிறந்ததென்று தீர்மானித் திருந்தார்கள்.

பலஸ்தீன நாடு

அக் காலத்தில் பலஸ்தீன மென்று அழைக்கப் பட்டுவந்த தேசமானது கார்மல் மலைக்கும் கலிலேயா வின் ஏரிக்கும் தெற்கே உர்துன் (யோர் தான்) நதியிலிருந்து மத்தியதரைக்கடல் வரைமேற்கில் நீண்டிருந்தது. அத்தேசத் திலுள்ள கைஸரிய்யா, ஜெருஸலேம், ஜாபா(யாபா) முதலிய பல முக்கியப் பட்டணங்களில் உரோமர்களின் இராணுவப் படைகள் அதிகமாகச் சேகரித்து வைக் கப்பட் டிருந்தன. இன்னம், ஜொகர் என்னும் பட்ட ணமும், அதனைச் சூழ்ந்துள்ள பகுதியும் பலஸ்தீனத் திற்கே கட்டுப்பட்டுக் கிடந்தன. உர்துன் நதிக்கு வடக்கே யிருந்த உர்துன் பிராந்தியத்தில் ஸஹுர், ஏக் கர் முதலிய பட்டணங்களிலும் உரோமச் சைன்னி யங்கள் திரட்டி வைக்கப்பட் டிருந்தன. பலஸ்தீன நாட்டுக்கு வடக்கேதான் ஷாம்தேசம் (பர்ருஷ்ஷாம்) என்னும் சிரியாநாடு அமைந்திருந்தது; அதிலிருந்த அலெப்போ (ஹலப்), திமஷ்க், ஆண்ட்டியாக் (அந்த் தாக்கியா), எமஸ்ஸா (ஹிம்மஸ்) முதலிய பட்டணங் களிலும் அந்த உரோமர்களின் தளங்கள் அதிகமாக நிரப்பி வைக்கப்பட் டிருந்தன. கலிலேயா ஏரிக்குத்

தெற்கிலும், உர்துன் நதிக்குக் கிழக்கிலும் ஹௌரான் என்றழைக்கப்பட்ட மேட்டு நிலங்கள் பல காணப்பட்டு வந்தன.

அப்படிப்பட்ட உரோமர்களுடனே அந்தச் சிரியா நாட்டில் எந்த வருடத்தில் யுத்தம் ஆரம்பிக்கப்பட்டதென்னும் விஷயத்தில் சிறிது அபிப்பிராயபேதம் இருந்தே வருகின்றது. ஆனால், இறுதியாக அப்பகுதியுடனே யுத்தம் தொடங்குவதுதான் சரியெனக்கண்டு, அதற்குரிய படையெடுப்பு அனுப்பப்பட்டது ஹி. 13-இல் ஆகும். மேற்கூறியவாறு யிருந்த சிரியா நாட்டை நோக்கி, ஹஜ்ரத் அபூபக்ர் அவர்களால் ஆதியில் அனுப்பப்பட்ட சேனையானது ஆரம்பத்திலேயே சிறிது தோல்வி யடைந்துவிட்ட போதினும், அதனைக் கண்டு கலீபாவானவர் சிறிதும் மனந்துளங்காது மீட்டும் நான்கு சேனைகளைத் திரட்டி, நான்கு தளபதிகளின்கீழே அந்த ஷாம்பகுதியினை நோக்கி அனுப்பி வைத்தார்கள். தயாள குணமும் தாக்ஷிண்ய மிகுதியும் நிரம்பியுள்ள அபூ உபைதாவின்கீழ் அனுப்பப்பட்ட சேனையானது ஜாபியா என்னு மிடத்தில் பாடி வீடு செய்துகொண்டு, ஹிம்மஸ் என்னும் பகுதியை நோக்கிச் சென்றது. இதில் மதீனாவின் முஸ்லிம்களும் நபிகள்நாயகத்தின் தோழர்களும் நிரம்பியிருந்தார்கள். அம்ர் இப்னுல் ஆஸ்ரலி அவர்களுடைய தலைமையின்கீழ்ச் சென்ற படையானது பலஸ்தீனத்தை நோக்கிச் செலுத்தப்பட்டது. திமஷ்க்நகரை நோக்கிச்சென்ற முஸ்லிம் படையானது, இஸ்லாத்தின் பழைய விரோதியாய் விளங்கிய அபூஸுப்யானுடைய குமாரர் எஜீத் என்பாரது தலைமையின் கீழே

சிரியாநாட்டு யுத்தம்

அனுப்பி வைக்கப்பட்டது; இவரது சேனையில் இஸ்லாத்தின் பழைய விரோதிகள் பலரும், மக்கத்துப் பெரிய மனிதர்கள் அநேகரும், திஹாமாவின் அரபிகள் பெரும்பான்மையோரும் நிரம்பி யிருந்தார்கள். மற்றொரு படையானது உர்துன் பிரதேசத்தை நோக்கி ஷர்பீல் என்னும் தளபதியின்கீழ் நடாத்தி வைக்கப்பட்டது. இந்த நான்கு மல்லாமல் மற்றொரு சேமப்படையானது அபூஸுப்யானுடைய இரண்டாவது குமாரராகிய முஆவியா அவர்களது தலைமையின் கீழ் சேகரித்து வைக்கப்பட் டிருந்தது. ஆனால், வடக்கு நோக்கிச் சென்ற நான்கு தளபதிகளும் ஒருவரையொருவர் ஆதரித்துக் கொண்டே உரோமரின் படையை அடைய வளைந்துகொண்டு, நெருக்கமாக இறுக்கி வந்துகொண் டிருந்தார்கள். இவர்களுடைய படையெடுப்பால் ஜெருஸலேம், கஸா, பஸ்ரா, திமஷ்க் முதலிய நகரங்கள் எல்லாமும் முஸ்லிம்களது கைவயமாக ஆய்விடக் கூடுமென்று நம்பும்படியான அத்துணைப்பெரிய திகில் உரோமர்களின் உள்ளத்தை ஒறுக்கத் தலைப்பட்டுவிட்டது.

அதுகாலை அய்னுத் தம்ரென்னும் பாரசீக எல்லைப்புறத்தில் பாடிவீடு செய்துகொண் டிருந்த காலித் திப்னு வலீதென்பார் காலித் பின் ஸயீதுடைய உதவிக்காக வென்று ஆங்கு நோக்கி இந்த முதல் கலீபாவால் அனுப்பி வைக்கப்பட்டார். ஆதலின், பாரசீக எல்லைப்புறத்தில் பாதிச் சேனையை நிறுத்திவிட்டு, காலித் பின் வலீத் மற்றொரு பாதிச் சேனையுடனே ஷாம்தேசத்தை நோக்கிப் புறப்பட்டார். இவ்வாறெல்லாம் திரட்டப்பட்ட முஸ்லிம் சைன்னியங்களின் தொகையானது 40,000 ஆகத்தான் இருந்து வந்தது;

ஆனால், உரோமர்களின் படையோ, 2,40,000 எண்ணிக்கையுள்ளதாக எதிர்க்கட்சியில் இருந்துவந்தது.

ஆனால், காலி திப்னு வலீத்ராலி சென்று சேருமுன்னே முஸ்லிம் சைன்னியம் 35,000 ஆகத்தான்

மலையைத் தகர்த்த மசகம்

இருந்துவந் திருக்கிறது. உரோம ராஜ்ஜியத்தின் சேனைசமூகத்தையும் அவர்களுடைய யுத்த முஸ்தீபுகளையும் உற்றுநோக்குங்கால், ஒரு மகா சமுத்திரத்தை எதிர்க்கத் துணிந்த சிற்றுற்றைப் போலவே தான் அம் முஸ்லிம்கள் காணப்பட்டு வந்தார்கள். உரோம ராஜ்ஜியத்தில் தேச விஸ்திரணமும் அதன் நிலவளநீர்வளமும் வருமான மிகுதியும் ஆட்பலமும் செல்வாக்குச் சிறப்பும் உறையிட்டுச் சொல்ல வியலாத விதமாய் அத்துணை அதிகமாகக் காணப்படலாயின. அப்படிப்பட்ட உரோமரை எதிர்க்கத் துணிந்த அரபிகளின் நிலைமையானது மலையைத் தகர்க்கத் துணிந்த ஒருசில மசகமே போலத்தான் காணப்பட்டுவந்ததென்னலாம். அப்பொழு திருந்த உரோம ராஜ்ஜியத்தில் சின்ன ஆசியா வென்னப்படும் ஒரு பெரிய தேசமும் சேர்ந்தே இருந்துவந்தது. அதில் அயல்நாடுகளுடன் வாணிகம் செய்யத்தக்க பெரும்பெரும் கடற்றுறைப் பட்டினங்க ளெல்லாம் நிர்மாணிக்கப்பட்டிருந்தன. ஆபிரிக்காவி லிருந்த எகிப்து தேசமும் ஆங்கிருந் தோங்கிவந்த பண்டைக்கால நாகரிக உலகமென்னப்பட்ட கார்த்தேஜும், கைரைனும் அந்த உரோம ராட்சியின் கீழேதான் அமைந்து கிடந்தன. இவற்றையன்றி, இன்னம் ஷாம், பலஸ்தீன், பினீஷியா முதலிய நாடுகளும் அதில் உள்ளடங்கி யிருந்தன. இப்படிப்பட்ட உரோம நாட்டாருடனேதாம் அரபி

முஸ்லிம்கள் ஒருசிலர் எதிர்த்து நின்று யுத்தம்புரியத் துணிந்து முன்வந்து விட்டார்கள்.

இப்படிப்பட்ட துணிகரமுள்ள அரபிகளை நசுக்கி யொழிக்கும் பொருட்டு ஹர்க்கல் என்னும் உரோம அரசனே நேரில் வந்து எமஸ்ஸா (ஹிம்மஸ்) என்னு மிடத்தில் பாடிவீடு செய்துகொண்டு, அரபிப்படை களை நோக்கி நான்கு சேனைகளை நான்கு திக்குக்கும் அனுப்பி வைத்தான். அதனை அதிசீக்கிரம் தெரிந்து கொண்ட முஸ்லிம் தளபதிகள் தங்களுடைய சேனை களை யெல்லாம் ஒருசேரத் திரட்ட வேண்டுமென்னும் எண்ணத்தினால் யர்மூக் (ஹயரோ மாக்ஸ்) என்னும் ஆற்றோரத்தி லுள்ள ஜவ்லான் என்னு மிடத்தில் ஹி. 13-ஆம் ஆண்டு ஸபர் மாதத்தில் (கி. பி. 634 ஏப்ரிலில்) தங்கள் சேனைகளைக் கொண்டுவந்து சேர்த் தார்கள். இதை யறிந்த உரோமர்களும் தங்கள் சேனைகளையும் ஒருமிக்கத் திரட்டினார்கள்.

யர்மூக் என்னும் ஆறு ஹௌரான் என்னும் மேட்டு நிலங்களிலிருந்து உற்பத்தியாகி வந்து, உர்துன் நதியுடன் கலக்கக்கூடிய சர்வ சாதாரணமுள்ள ஓர் உபநதியாகத் தான் இருந்துவருகிறது. இந்த யர்மூக் நதி உர்துன் நதியுடன் கலப்பதற்கு முன்னே 30-ஆவது மைலில் தன் வடக்குக்கரையில் சுருக்குப் போட்டாற்போல ஒரு வட்ட வடிவமாகச் சுழன்று வருகின்றது. இவ்வாறு அந்நதியால் சூழப்பட்ட இடத்திற்குள் ஒரு பெரிய சைன்னியம் சென்று படைவீடு செய்யத்தக்க அத்துணை விசாலமான நிலப்பரப் பொன்று காணப் படாநின்றது. ஆயின், யர்மூக் என்னும் இந்நதியின் கரைகளிரண்டும் கரடு

யர்மூக் நதியின் விசேடம்

மூரடாயுள்ள கற்களா லமைக்கப்பட்ட செங்குத்தான பாறைகளா யிருந்துவந்தன. இச் சிற்ருற்றின் மேற் கூறிய வளைவிற்குரிய முகப்பிலிருக்கும் வாயில்மட்டும் மிகவுங் குறுகிய ஒரு கணவாய் போலவே அமைந்து கிடந்தது. இதற்கு முஸ்லிம் சரித்திராசிரியர்கள் வகுஸா என்று நாமஞ்சூட்டி யிருக்கின்ருர்கள். இதன் உட்புறத்தி லுள்ள வட்டப் பரப்பானது நான்கு புறத்திலும் பத்திரமாக மூடப்பட்டிருந்ததனுல், அதற் குள்ளே சென்று தாங்கள் பாடிவீடு செய்துகொள் ளலா மென் றெண்ணி, அந்த உரோமர்கள் அத னுள்ளே புகுந்துவிட்டார்கள். ஆனுல், உரோமர்கள் இழைத்துவிட்ட இம்மாபெரும் பிழையைக் கண் டுணர்ந்துகொண்டு, அரபிகள் உடனே அவ்வாற்றைக் கடந்து அதன் வடகரை சென்று, வகுஸாவின் வாயி லருகில் அதிக பத்திரமாக அமர்ந்து விட்டார்கள். உடனே உரோமர்கள் தாங்கள் செய்துவிட்ட தவறு இன்னதெனக் கண்டு கைசேதப்பட்டு, வெளியில் தப்பியோட வழிபார்த் திருந்தார்கள். பொறிக்குள் அகப்பட்ட எலியேபோல் அவர்கள் அதனுள்ளிருந்து விழித்துக்கொண் டிருந்தபோழ்து, அரபிகள் அதன் வாயிலி லிருந்துகொண்டு பூனையேபோல வழிபார்த் திருந்தார்கள்.

இவ்வாருக, இரு சேனுசமூகத்தினரும் ஒருவரை யொருவர் எதிர்நோக்கிய வண்ணமாகவே இரண்டு மாதகாலம் வரை அங்கே தங்கியிருந் தார்கள்; அப்பொழுதுதான் இவ் விஷயத்தைக் கேள்வியுற்ற முதல் கலீ பாவானவர் காலிதிப்னு வலீதை ஷால்டியாவிலிருந்து சிரியாநாட்டை நோக்கி, காலித் பின் ஸயீதுடைய

அஜ்னுதைன் யுத்தம்

உதவிக்கென்று செல்லுமாறு கட்டளையிட்டனுப்பினர்கள். உடனே சிறிது போழ்தைக்குள் காலித்ரலி அவர்கள் உரோமப் படைக்குத் தெரியாமலே முஸ்லிம்களுடன் வந்து கலந்துகொண்டு விட்டார்கள். அப்பொழுதுதான் அம் முஸ்லிம்களின் மொத்தத் தொகை எல்லாம் சேர்ந்து 40 ஆயிரமாக உயர்ந்திருந்தது. ஆனல், இதற்கு முன்னம் கூறியதேபோல் உரோமர்களின் சேனையோ, 2 இலட்சத்து 40 ஆயிரமாக இருந்து வந்தது. இவ்வா றிருந்தும், அந்த உரோமர்கள் பலமுறையும் தங்கள் பொறிக்குள்ளிருந்து வெளியில் தப்பியோடப் பிரயத்தனப்பட்டார்கள். ஆனல், அரபிகளின் சர்வஜாக்கிரதத்தால் அவர்கள் பலமுறையும் மறித்துத் தடுக்கப்பட்டே போயினர்கள். இதனல் உரோமரின் தைரியமானது மிகவும் உடைந்துபோய் விட்டதென்னலாம். எனினும், இந்தப் பொறிக்குள்ளிருந்து வெளிப்பட வேண்டுமே யென்னும் அச்சமே அவர்களுடைய மனத்தைப் பெரிதும் புண்படுத்திக்கொண் டிருந்தது. இவ்வாறிருந்தும், இறுதியில் அந்த ஹி. 13 ஜமாதியுல் அவ்வல் மாதம் இறுதித் தேதியின் காலை வேளையில் உரோமர்கள் தங்கள் குருமார் கூறிய உற்சாக மொழிகளை நம்பி, முஸ்லிம்களுடனே போர் புரிவான் வேண்டி ஒருவாறு வெளிக் கிளம்பினர்கள். அன்று நிகழ்ந்த யுத்தமானது அஜ்னுதைன் என்னுமிடத்தி லென்று பல சரித்திராசிரியர்கள் எழுதியிருக்கிறர்கள்; ஆனல், அந்த இடத்தின் பெயர் இஹான் என்றும் வேறு சில சரித்திரக்காரர்கள் — முஹ்யித்தீன் கையாத் மிஸ்ரீ போன்ற ஆராய்ச்சியாளர்கள் — வரைந்திருக்

கின்றார்கள்.* விவரம் இன்னம் இரண்டாவது கலீபாவின் ஆட்சியின்போழ்து காணப்படும்.

அன்று நிகழ்ந்த அஜ்னாதைன் யுத்தத்தில் அரபிகள் உரோமரை ஓடஓடத் துரத்தியடித்து, அவர்களை அடியோடு முறியடித்தார்கள். (இது நிகழ்ந்தது ஹி. 13 ஜமாதியுல் அவ்வல் 28-ஆந் தேதி யாகும்.) இதனால் அதிகமான உரோமப் படைகள் சேதிக்கப் பட்டுப் போய்விட்டன; எஞ்சியிருந்தவர்கள் தப்பியோட வழியில்லாது போய், ஆற்றிலே குதித்து மாண்டு போயினார்கள். இந்த யுத்தத்தில் முஸ்லிம்களுக்கு அளவிறந்த வெற்றி கிடைத்ததனால் ஷாம் தேசத்தின் (சிரியா நாட்டின்) தென்பாதி முழுவதும் முஸ்லிம்களின் கைவயத்தில் வந்து சிக்கிக்கொண்டு விட்டது. இந்த மகாயுத்தத்தில் 1,40,000 உரோமர் மாண்டுபோயினர்; முஸ்லிம்களுள் 3,000 பேர்மட்டுமே உயிர் துறந்தார்கள் என்பர் சரிதவிற்பன்னர்.

**பிறகு காலித்(ரலி) எங்குச் சென்றார்**

அஜ்னாதைன் யுத்தத்தில் முழுவதும் முறியடிக்கப்பட்டு விட்ட ஹர்க்கல் என்னும் உரோமச் சக்ரவர்த்தி அந்த்தாக்கியாவுக்கு (ஆண்ட்டியாக்) ஓட்டம்பிடித்து விட்டான்; ஆனால், அந்த மகா யுத்தத்தில் வெற்றி பெற்ற முஸ்லிம் வீரராய் விளங்கிய காலி திப்னு வலீ

---

* அஜ்னாதைன் யுத்தம் முன்னென்றும், யர்மூக் யுத்தம் பின்னென்றும், யர்மூக் முன்னென்றும், அஜ்னாதைன் பின்னென்றும், இல்லை, இரண்டும் ஒன்றே யென்றும் பலவாறாக அபிப்பிராய பேதம் காணப்படாநின்றது. ஆனால், தேர்ச்சியான ஆராய்ச்சியின்படி அஜ்னாதைன் முன்னென்றும், யர்மூக் பின்னென்றுமேதான் தீர்மானம் செய்யப்பட்டுள்ளது. எனவே, ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் காலத்தில் ஹி. 15-இல் யர்மூக் யுத்தம் மீட்டும் வரையப்பட்டுள்ளதை நோட்டமிடுக.

தென்பார் ஷாம்தேசத்தி லுள்ள திமஷ்க் நகரை நோக்கி நேரே சென்று, அந்தப் புராதன நகரத்தைச் சூழ்ந்து முற்றுகை யிட்டுவிட்டார். ஆனால், இதற்குப் பின்விட்ட சம்பவம், இரண்டாவது கலீபாவாய் விளங்கிவந்த ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் ஆட்சியின் போழ்துதான் நிகழ்ந்திருக்கின்றமையான், திமஷ்கின் பிற்பட்ட சரித்திரத்தை அவரது காலத்தில் விளக்கிக் கொள்ளலா மென்று யாம் இங்கு இம்மட்டோடு நிறுத்திக் கொள்ளுகின்றோம். அஜ்னதைனில் அம் முஸ்லிம்களுக்குக் கிடைத்த முழுவெற்றியின் சமாசாரமானது, மதீனாவின்கண் முதல் கலீபாவான ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தங்கள் மரணத்தறுவாயி லிருந்தபோதுதான் அவர்கள்பால் வந்துஎட்டிற்றென்னலாம்.

ஹி. 13 ஜமாதியுல் ஆகிர் மாதம் பிறை 7-இல் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் வியாதி யுற்றார்கள்.

**அபூபக்ரின் (ரலி) வியாதியும் வியோகமும்**

ஆனால், நாளுக்குநாள் அவ்வயோதிகப் பெரியாரின் சரீர நிலைமை அதிகமதிகம் சரிந்துகொண்டே வந்ததனால், அவர்கள் மதீனாவின்கண் இருந்துவந்த கிர்த்தி வாய்ந்த முஸ்லிம் பிரமுகர்களை யெல்லாம் வரவழைத்து, தங்களுக்குப் பின்னே யாரை கலீபாவாக நியமிக்கலா மென்று பரியாலோசனை புரியத் தலைப்பட்டார்கள். நபிகள் திலகத்தின் நிர்யாணத்திற்குப் பின்னே எல்லாருடைய நாட்டமும் ஹஜ்ரத் அபூபக்ரின்மீது வீழ்ந்ததேபோல, இதுபோழ்து அவர்களெல்லாருடைய அபிப்பிராயமும் ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் மீதேயே வீழ்ந்துவிட்டது. என்னெனின், அத்தகைய உயரிய உத்தியோகப் பதவியை நிர்வகிப்பதற்கு அப்

பெரியாரே தகுதி வாய்ந்தவரா யிருந்துவந்தா ரென்பதுதான் அவர்க ளெல்லாருடைய பொதுப் படையான அபிப்பிராயமாக இருந்துவந்தது. ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தங்கள் ஆட்சியின் காலமுழு வதும் ஹஜ்ரத் உமர்ரலி அவர்களையே கலந்துகொண்டு தான் ஒவ்வோர் அரசியற் காரியத்தையும் செய்து வந்தார்க்ள். ஆகவே, முதன்முதலாக இந்த கலீபான வர் அப்துர் ரஹ்மான் பின் அவ்பையும்ரலி உது மான்ரலி அவர்களையும் கலந்துகொண்டார்கள். அவ் விருவரும் உமர்ரலி அவர்களுடைய நியமனத்தை ஆதரித்தே நின்றார்கள். அதன்பின்பு நம் பெரியார் ஸயீத் பின் ஜைத், உஸைத் பின் ஹலீர் ஆதிய பற்பல முஹாஜிரீன்களையும் அன்சார்களையும் கலந்து பரியா லோசனை புரிந்தார்கள்.

அவர்க ளெல்லா ருடைய அபிப்பிராயமும் ஹஜ்ரத் உமர்ரலி அவர்களுக்குச் சாதகமாகவே காணப்பட்டு வந்தது. ஆனல், ஒருசிலர் மட்டும் உமர்ரலி அவர்கள் ஒருசிறிது கடுமையுள்ளவர்க ளாக இருந்துவந்தார்க ளென்னும் காரணத்தால் அவர்கள் இந்த கலீபாவின் பதவிக்கு அருகதை யுள்ளவர்களாக இருப்பார்களோ வென்று அஞ்சி னார்கள். ஆயின், உத்தியோகத்தின் ஓறுப்பு ஏற் பட்டு விடுங்கால், அந்த உமர்ரலி அவர்களைப் பெரிதும் சாந்தமடைந்து விடுமாறு அது சமனப்படுத்தி விடு மென்று இந்த முதல்கலீபா அப்படிப்பட்ட சங்கை யுள்ளவர்களுக் கெல்லாம் பெரிதும் சமாதானம் செய்து வைத்தார்கள்.

ஆகவே, எல்லா முஸ்லிம்களின் அங்கீகாரத்தை யும் பெற்றுக்கொண்டே ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள்

உமர்ரலி அவர்களைத் தங்களுக் கடுத்தபடியா யுள்ள இரண்டாவது கலீபாவாக நியமித்து வைத்துவிட்டார்கள். அதன் பிறகு ஹி. 13 ஜமாதியுல் ஆகிர் மாதம் பிறை 22 செவ்வாய்க் கிழமையன்று, அஃதாவது, இரண்டு வார காலமே வியாதி யுற்றிருந்து, தங்கள் 63-ஆம் வயதில் காலகதியால் தேக வியோகமாய்ப் போய்விட்டார்கள்; (இன்னு லில்லாஹி வ இன்னு இலைஹி ராஜிஊன்.) இப்பெரியாரின் திருமேனியும் நபிகள் நாயகத்தின் கல்லறைக்குச் சமீபத்திலேயே நல்லடக்கம் செய்து வைக்கப்பட்டது. நபிகள் நாயகத்தின்பால் அத்தியந்த விசுவாசம் பாராட்டிவந்த இந்த முதல் கலீபாவானவர் தங்கள் ஜீவதசையில் அம் மகானுபாவருடனே இணைபிரியா திருந்துவந்ததே போலத்தான் இவர்களுடைய நிர்யாணத்தின் பின்னரும் அந்த நட்பும் விசுவாசமும் என்றென்றும் நீடித்து நிற்குமாறு அருகருகாக அடக்கம் செய்யப்பட்டு விட்டார்கள். இவ்வாறாக இந்தக் காலஞ்சென்ற கலீபாவானவர் சற்றேறக்குறைய இரண்டாண்டுகளுக்கு மேலாகவே அந்த இஸ்லாமிய குடியரசின் தலைமை ஸ்தானத்தை வகித்துச் செங்கோலோச்சி வந்திருக்கிறார்கள்; அக்குறுகிய சிறுகால எல்லைக்குள்ளே மகத்தான பெரும் பெரும் காரியங்களெல்லாம் நிறைவேற்றி முடிக்கப் பெற்றிருக்கின்றன. இப்பெரியாரின் புத்தி தீக்ஷண்யமும் கடைப்பிடியுமே தாம் அற்றைநாளில் அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசை வேரூன்றி நிலைத்து நிற்குமாறு செய்திருக்கின்றன வெனல்வேண்டும்.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களது தோற்றம் உயர்ந்து மெலிந்திருக்கும்; முதுகில் சிறிது கூனலு மிருக்கும். ஆயின், இவர்களுடைய முகவசீகரமானது அதிக அழகுள்ளதா யிருக்குமென்று புலவர்களும் புகழ்ந் துரைத் திருக்கின்றார்கள். இஸ்லாம் மார்க்கத்தை இவர்கள் தழுவுமுன்னே மக்காவிலிருந்து கொண்டு ஒரு நியாயாதிபதியாகக் குறைஷிக்குலத்தார் மீது அதிகமான ஆதிக்யம் செலுத்தி வந்தார்கள். இப்பெரியார் ஒரு பெருந் தனிகரான வர்த்தகராகவும், உத்தியில் சிறந்த புத்திமானாகவும் விளங்கிவந்தமை யால், இவருக்கு மக்கமா நகரின்கண் அளவிறந்த மேதை மரியாதைகளெல்லாம் அளிக்கப்பட்டு வந்தன. பிறகு தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்ட பின்னர் இவர்கள் தங்கள் ஐசுவரிய முழுதையும் இஸ்லாமிய பிரசாரத்திற்கென்றே அர்ப்பணம் செய்து வந்தார்கள்.

அபூபக்ரின் (ரலி) எளிய வாழ்க்கை

நபிகள் திலகத்தைப் போலவே இவர்களும் சர்வ சாதாரணமான நடையுடை பாவனைகளையுடைய ஓர் எளிய வாழ்க்கைக் குரியவராக இருந்து வந்தார்கள்; மகா ஸெளலப்பிய குணமும், ஆனால், உறுதியான கடைப்பிடியும் உடையவராய் இருந்து வந்தார்கள். அந்த இஸ்லாமிய ராஜ்ஜியத்தின் ஆதி கலீபாவாக உயர்த்தப்பட் டிருந்தும், தங்களுடைய உடை, ஆகா ரம், வீடு, வாசல் முதலியவற்றி லெல்லாம் அதற்கு முன்னிருந்து வந்ததே போலத்தான் மிக்க எளிய தன்மையை மேற்கொண் டொழுகிவந்தார்கள். இப் பெரியாருக்கு, ஊழியமென்பது, அஃதெத்துணை அற்ப முள்ளதா யிருந்துவரினும், மகா சிலாக்கிய முள்ள

தாகவே காணப்பட்டுவந்தது. எந்தச் சிறிய வேலையும் தம்முடைய கௌரவத்திற்குக் குறைந்ததென்று எண்ணிவிட மாட்டார்கள். கலீபாவாக நியமனம் பெறுதற்கு முன்னே இவர்கள் எவ்வாறு தங்கள் காரியங்களைத் தாங்களே செய்துவந்தார்களோ, அவ்வாருகவேதான் கலீபாவாக உயர்த்தப் பட்டதன் பின்னரும் செய்துவந் திருக்கிருர்கள். இம்மட்டுமேயன்றி, தங்களால் இயன்றவரை ஏனையவர்க்கும் எல்லா விதமான ஊழியமும் புரிந்து வருவார்கள். தங்கள் குருமகானிடத்து இருந்துவந்ததே போலத்தான் இப் பெரியார்மாட்டும் பூலோக ராஜ்யாதிகாரமானது எந்த விதமான ஒரு சிறு மாறுதலையும் உண்டு பண்ணிவிட வில்லை. நபிகள் திலகம் ஏகசக்ராதிபதியாய் விளங்கிவந்த காலத்தும் ஒரு சன்னியாச வாழ்க்கையையே மேற்போட்டுக்கொண் டிருந்ததற்குப் படியெடுத்தாற்போலவேதான் இப்பெரியாரும்—அம் மகானுபாவரின் சிஷ்யர்களுள்ளும் தோழர்களுள்ளும் தலைசிறந்து விளங்கிவந்த ஹஜ்ரத் அபூபக்ர் அவர்களும்—தங்கள் குருமகான் நடந்துசென்ற பாட்டையினூடே அடிமேலடியாக வைத்து நேரிதாய் நடந்து சென்ருர்கள் என்ப.

இப்பெரியார் கலீபாவாக நியமிக்கப் பட்டதன் பின்பு மறு தினமே இவர்கள் தங்கள் வர்த்தகச் சரக்குக்களை எடுத்துக்கொண்டு கடைவீதியை நோக்கிச் சென்றுகொண் டிருந்தார்கள். அதுசமயம் அவ்வழியில் எதிராகவந்து சந்திக்க நேர்ந்த ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள், அந்த முஸ்லிம் ராஜ்ஜியத்தின் ஜவாப்தாரித்தனம் மிக்க பொறுப்பானது அப் பெரியாரின்

தோள்களின்மீது சுமத்தப்பட் டிருத்தலினால், அத் தகைய ராஜ்யாதிகார அலுவல்களுடனே தங்களுக் குரிய வர்த்தக விஷயத்தையும் ஏககாலத்தில் கவ னித்துவருதல் எவ்வாறு சாத்தியமாகு மென்று வின வத் தொடங்கினார்கள். இதுகேட்டு, இந்த முதல் கலீபாவானவர், தங்கள் குடும்பப் பரிபாலனத்தை நடாத்திவரும் பொருட்டுத் தாங்கள் அவ்வாறு சொந் தத்தில் வேலை செய்துதான் ஆகவேண்டு மென்று விடை கொடுத்தார்கள். அதன் பின்பு நபிகள்திலகத் தின் தோழர்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து பரியாலோ சனை புரிந்து, இந்த கலீபாவிற்குத் தினப்பிரதியில் செலவாகி வரும் வழக்கமான தொகை இவ்வளவுதா னென்பதைக் கண்டுபிடித்து, இவர்களுக்காக ஆண் டொன்றுக்கு 2500 திர்ஹங்கள் வரை நிவேதனம் கொடுப்பதென்று தீர்மானம் செய்துகொண்டார்கள். அப்பால் அந்தத் தொகையானது மாதமொன்றுக்கு 500 திர்ஹமாக இருக்கவேண்டு மென்று உயர்த்தப் பட்டுவிட்டது.

ஆனால், இவர்களுடைய மரணவேளையில் இவர் கள்பால் ஒரு பழைய வஸ்திரமும் ஓர் ஒட்டகமும்— பைத்துல்மால் என்னும் பொதுப் பொக்கிஷத்தின் பொருள்கள்—இருந்துவந்தன. இவ் விரண்டையும் இப்பெரியார் தம்முடைய அடுத்த கலீபாவாய் விளங் கப்போகும் உமர்[ரலி] அவர்கள்பால் ஒப்படைத்துவிட் டார்கள். ஆயின், தங்கள் பிரேதத்தைமூடி அடக்கு வதற்கு, நன்றாகத் துவைக்கப்பட்டிருந்த ஒரு பழைய வஸ்திரத்துண்டே போதுமானதா யிருக்குமென்று அறிவுறுத்திச் சென்றார்கள். மரணமடைந்து போன வர்களைப் பார்க்கினும் உயிருடனே யிருக்கும் மனிதர்

களுக்கே புதியவஸ்திரம் அத்தியாவசியமா யிருக்கு மென்றும் அவர்கள் கூறினார்கள்.

இப் பெரியாருக்கு நபிகள் நாயகத்தின்மீது ஏற்பட்டிருந்த உண்மையான பக்தி விசுவாசத்திற்கு இத்தன்மைத்தாய திருஷ்டாந்தங்களே போதுமான சாக்ஷியங்களாக இருந்து வருகின்றன வென்று கூறி, அதனால் நபிகள் திலகத்தின் மெய்ம்மையையும் நன்கு நிலைப்படுத்தி யிருக்கின்றார். யார்? ஸர் வில்லியம் மூயிர் போன்ற ஓர் எதிர்மத சரித்திராசிரியரே இவ்வாறு எழுதி யிருக்கின்றார் :—

" முஹம்மதென்பார்கல் தம்முடைய காரியத்தை வேண்டுமென்றே ஒரு பொய்யராகவே யிருந்து செய்யத் தொடங்கியிருப்ப ராயின், கூரிய தீக்ஷண்யமும் நேரிய ஞானமுதிர்ச்சியும் நிரம்பப் பெற்றுள்ளவராக மட்டுமே இருந்ததோ டமையாது, தமது வாழ்நாள் முழுவதும் ஸௌலப்பியத்துடனும், ஒரே தன்மையுடனும், பக்தி விசுவாசத்துடனுமே விளங்கிவந்த ஒருவருடைய நம்பிக்கையையும் சிநேகத்தையும் அவர் ஒருகாலும் பெற்றுக்கொண் டிருக்க மாட்டார்"— (தி கலீபேட், பக்கம் 81).

தமக்கு இஸ்லாத்தின் மாட்டுள்ள துவேஷத்தை வெளிப்படுத்துவதில் ஒருசிறிதும் ஒளிவுமறைவு செய்யத்துணியாத மூயிர் துரைபோன்ற ஒரு சரித்திராசிரியர் ஹஜ்ரத் அபூபக்ரின் மெய்ம்மையையும் மேலான பக்தி விசுவாசத்தையும் குறித்துக் கூறியிருக்கும் சாக்ஷியமொன்றே, சர்வசாதாரணமாயுள்ள சிறுசிறு அற்ப விஷயங்களுக்காக வெல்லாம் இந்த மகானது பெருமைக்குச் சிறுமை யுண்டாக்கும் முறையிலே பேசத் துணிந்துவிடுகின்ற முஸ்லிம்க ளல்லாதா ருடைய

வாய்க்கும் முத்திரை போடக் கூடியதாக அமைந் திருக்கின்றதென்னலாம். இஸ்லாத்தின் பெருமையை வெளிப்படுத்துதற்கு நபிகள் திலகத்தை ஆண்டவன் பொறுக்கி யெடுத்துக்கொண் டிருந்தவாறே, அவர்க ளுக்குப் பின்னே இந்த மேன்மை தங்கிய பெரியா ரையே முதல் கலீபாவாக அந்த ஸ்தானத்திற்கு உயர்த்தி யிருக்கிருனென்று தீர்மானித்தற்கு நாம் கட் டுப்பட்டிருக்கிரேம். என்னெனின், இப் பெரியாரது உறுதிப்பாட்டைக் கொண்டேதான், நபிகள் திலகத் தின் நிர்யாணத்திற்குப் பிறகு அதிபாதலத்துள் ஆழ்ந்து தாழ்ந்து விடுவதேபோல் காணப்பட்டுவந்த அந்தப் பால்யக் குடியரசானது மீட்டும் உச்சஸ்தானத் திற்குக் கொண்டுவந்து நிறுவப்பட் டிருக்கின்றது. இப் பெரியார் தம்முடைய ஆட்சிக்காலத்தில் அந்தப் பால்யக் குடியரசை அதிகம் முன்னுக்குக் கொண்டு வருவதிலும், அந்தப் பிரஜைகளுக்கு நன்மை செய்வ திலுமேதாம் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தி வந்தார்கள். ஸர் வில்லியம் மூய்ர் வரைந்திருப்பதே போன்று, "முஹம்மத்ஸல் அவர்களுக்குப் பின்னே இந்த மார்க்கமானது இப்பெரியாரைப் பார்க்கினும் மற்றெவர்மாட்டும் அதிகமான கடப்பாடுடையதாக இருந்திருக்க வில்லை"—(தி கலீபேட், பக்கம் 81).

ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் ஆண்டவன் மீதும் அவனுடைய திருத்தூதர்மீதும் வைத்திருந்த பக்தி விசுவாசத்தைப் போன்றவற்றை இவ்வகிலத்தில் இன்றுகாறுந் தோன்றியிருக்கும் எந்தச் சிஷ்யரும் தம்முடைய குருவின் மாட்டுக் காண்பித்ததே கிடையாதென்று கூறி முடிக்கலாம். இவரது உடல் பொருள் ஆவியனைத்தும் ஆண்டவனுடைய

பக்திக் கடலினுள்ளேயே ஆழ்ந்து மூழ்கிப்போய்க் கிடந்ததனுல், இகலோக அதிகாரமும் ஈங்குள்ள செல்வமும் இவர்களுக்கு எந்தவிதமான வசீகரத்தை யும் விருப்பத்தையும் கொடுத்தது கிடையா. இவர்க ளுடைய பக்தியும் ஆசாரமும், உயிர்வாழ்க்கையின் எளிய தன்மையும், ஒழுக்கத்தின் உயரிய மேன்மையும், உறுதிப்பாட்டின் இருப்புப் பிடியும், கடைப்பிடியின் துளங்காத பிடிவாதமும், எல்லாவற்றிற்கும் மேலாக நபிகள் நாயகத்தின்மீது இப் பெரியார் வைத்திருந்த பேரபிமானமும் எல்லாம் சேர்ந்துதான் அந்தக் குரு மகானுக்கு அடுத்த படியாயுள்ள முதல்கலீபாவின் ஸ்தானத்தை இவர்களுக்கு ஈயுமாறு அத்துணைமட்டும் இவர்களை உயர்த்திவிட் டிருந்தன.

**குர்ஆன் ஷரீபு சேகரம் செய்யப்படுதல்**

ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்கள் செங்கோலோச்சி வந்த அந்த இரண்டேகால் ஆண்டிற்குள்ளே தீனுல் இஸ்லாமானது மீட்டும் தனக்குரிய யதாஸ்தானத்திற்கு உயர்த்தப்பட்டு விட்ட தென்னலாம். அரப்நாடு முழு வதும் முளைத்துக் கிளம்பிய எல்லாக் கிளர்ச்சிகளும் அடியோடு அழிக்கப்பட்டே போய் விட்டன. ஆதலின், இஸ்லாத்தின் ஆதிக்யமானது என்றும் நிலைநிற்கக்கூடிய முறையிலே ஸ்திரப் படுத் தப்பட்டு விட்டது. இம் மார்க்கமானது அதுசமயம் தன்னுடைய பூர்வ அந்தஸ்தை அடைந்ததோடு மட் டும் நின்றுவிடாது, புதிதான உத்வேகத்தையும் அம் முஸ்லிம்களின் ஹிருதயத்திற்குள்ளே நுழைத்துவிட் டிருந்தது. இதனுல் அதற்குரிய தருணம் வாய்த்த போழ்து, ஒரே அடியில் அக்காலத்தி லிருந்துவந்த இரண்டு மகா ராஜ்ஜியங்களைத் தகர்த்தெறிந்து வாகை

மாலை சூடக்கூடிய சக்தியையும் பெற்றுக்கொண்டு விட்டது. ஆனால், இந்த முதல்கலீபாவின் ஆட்சிக் காலத்தில் நிகழ்வுற்ற பெரும்பெரும் காரியங்களுள் இஃதொரு விதமான வெற்றி யாகவேதான் இருந்து வருகின்றது.

இதுவேயு மன்றி, இந்தக் குடியரசுத் தலைவர் மற்றும் பல துறைகளிலும் இஸ்லாத்திற்கு வேண்டிய இன்றியமையாத பற்பல நல்லூழியங்களைச் செய்து முடித்தே சென்றிருக்கின்றார். இப் பெரியாரின் குறுகிய ஆட்சியின் காலத்திற்குள்ளேதான் குர்ஆன் ஷரீபானது ஒன்றாக (ஒரே ஜில்தாக)த் திரட்டி வைக்கப் பட்டது. "ஒன்றாகத் திரட்டி வைக்கப்படுதல்" என்னும் இந்தப் பிரயோகத்தை அடிக்கடி அயல் மதவாதிகள் தவறான பொருளிலேயே கொண்டுவருகிறார்கள். ஆனால், இதன் தாத்பர்யம் யாதெனின், நபிகள் திலகத்தின் ஜீவிய காலத்தில் அடிக்கடி குர்ஆன் ஷரீபின் அத்தியாயங்கள் வெளியாக்கப்பட்ட போழ்தெல்லாம் அவை அப்போதைக் கப்போழ்தே பலபடியாயுள்ள இலேககர்கள் வாயிலாய் எழுதி வைக்கப்பட்டிருந்த கையெழுத்துப் பிரதிக ளனைத்தும் ஒரே "வால்யூமாக" ஒன்று சேர்க்கப்பட்டு, நபிகளாதர் தாங்களே ஏற்படுத்திச் சென்றிருந்த அந்த முறையின் பிரகாரமே தொகுத்து முடிக்கப்பட்ட தென்பதே யாகும். நபிகள் நாயகத்தின் காலத்தில் குர்ஆன் ஷரீபின் அத்தியாயமொன்று வெளிப்படுத்தப் படுந்தோறெல்லாம் அதனைப் பத்திரப்படுத்திக் காப்பாற்றி வைக்கும்பொருட்டு இரண்டு விதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன :—

நபிகள் பெருமானுக்கு வேதவெளிப்பாடு வஹீ யின் வாயிலாய் அருளப்படுங்கால், அதனை அக்கணமே வரிவடிவத்தில் வரைந்துகொள்வான் வேண்டிப் பற் பல எழுத்துக்காரர்கள் (இலேககர்கள்) அருகினில் எப்பொழுதும் இருந்துகொண்டே யிருப்பார்கள்; அதுவேயு மன்றி, அக்காலத்தில் அந்த ஆண்டவனது திருவசனங்களை யெல்லாம் மனப்பாடம்பண்ணி நெட் டுருட்பண்ணக் கூடியவர்களும் அநேகர் இருந்து வந்தார்கள். இன்னம், குர்ஆன் ஷரீபின் அத்தியாயங் களுள் அநேகம் காலக்கிரமத்தில் துண்டு துண்டாகவே தான் வெளிப்படுத்தப்பட்டு வந்த தென்பதையும் ஞாபகத்தில் நன்கு பதியவைத்துக்கொள்ளுதல் வேண் டும். ஆகவே, ஒரு விஷயம் புதிதாக வஹீயின் வாயி லாய் வெளிப்படுத்தப் படுங்கால், அத் துண்டானது அதற்குமுன் வெளியாக்கப்பட்டிருந்த ஒரு முடிவு பெருத அத்தியாயத்துடன் இணைக்கப்பட வேண்டிய திருப்பின், நபிகள் திலகம்ஸல் அதனை மனனம் செய்பவ ரிடத்தும் வரிவடிவில் வரைபவரிடத்தும் கூறி, இந்தத் துண்டானது இன்ன அத்தியாயத்தில் இன்ன சந்தர்ப் பத்தில் இன்ன வாக்கியத்திற்குப் பின்னே அமைக்கப் படுதல் வேண்டுமென்று ஆணையிட்டு விடுவார்கள்.

எனவே, இவ்வாருகத்தான் குர்ஆன் ஷரீபின் எல்லா அத்தியாயங்களும், எல்லாத் திருவாக்கியங் களும் நபிகள் பெருமானுல் இதுபோழ்துள்ள முறை மையின் பிரகாரமே வரிசைக் கிரமமாக அடுக்கி அமைக்கப்பட்டு வந்தன. இம்மாதிரியான வரிசைக் கிரமத்தின் பிரகாரமே நபிகள்நாயகமும் தங்கள் காலத்தில் எல்லாத் தொழுகைகளிலும் ஓதி யோதி வந்திருக்கிருர்கள். இந்தக் கிரமப் பிரகாரமே

தர்ன் அக்காலத்தி லிருந்துவந்த மனப்பாடக்காரர் களும் — ஹாபிள்களும் — (வேத அத்யயனம்) நெட்டுருப்பண்ணி ஒப்பித்து வந்தார்கள். இந்த முறையும் வரிசைக் கிரமமும் நபிகள் திலகத்தின் சொந்த உத்தரவின் பிரகாரமேதான் அமைக்கப்பட் டிருந்தன.

ஒரே வால்யூம்-ஜில்தாதல்

ஆனால், அந்த மஹானுபாவரின் ஆயுட்காலத்தில் செய்யப்படாமல் விடப்பட்டிருந்த ஒரே விஷயம் யாதெனின், அவ்வாறு வரிசைக் கிரமப்படி அடுக்கி வைக்கப்பட்டிருந்த அத்தியாயங்க ளெல்லாம் ஒரே வால்யூமாகச் சேர்க்கப்பட்டு, ஒரே கிரந்தரூபத்தில் (ஒரே ஜில்தாகத்)தைத்துக் கொடுக்கப்படாமல் இருந்ததேதானுகும். இவ்வாறு ஒரே கிரந்தமாக அவ்வேதத்தைத் தொகுத்துத் தைக்காமல் வைத்திருந்ததற்குக் காரணம், அம் மஹானுபாவரின் நிர்யாணதசைக்குச் சிலவாரங்கள் முன்வரையுங்கூடக் குர்ஆன் ஷரீபின் ஆயாத்கள் (திருவாக்கியங்கள்) வஹீயின் வாயிலாய் வந்துகொண்டிருந்ததே யாகும்; எந்த நிமிடத்திலும் எந்த விதமான ஆயத்தும் ஆண்டவனுல் வெளிப்படுத்தப்பட்டு, அதற்குமுன் வெளியாக்கப் பட்டிருந்த எந்த ஆயத்திற்குப் பின்னேயும் இணைக்கப்படுதல் வேண்டுமென்னும் கட்டளையானது வெளியாக்கப் படலாம். ஆதலின், அதற்குமுன் வெளியாக்கப் பட்டிருந்த ஸூராக்களையும் ஆயாத்களையும் ஒன்றுசேர்த்து எவ்வாறு ஒரே கிரந்தமாகத் தைத்து முடித்திருத்தல் சாலும்? அக்காலத்தில் குர்ஆன் ஷரீபின் ஆயாத்க ளெல்லாம் பனையோலை, காகிதம், தோல் போன்ற வஸ்துக்களின் மீதேயே வரையப்பட்டு வந்தன. அவ்வாறு வரிவடிவில் வரையப்பட்டு வந்த திருவாக்கியங்கள் எல்லாம்

ஒருவாறு முடிவடைந்து விட்டதன்பிறகு நபிகள் திலகம்[ஸல்] பரிபூரணதசையை அடைந்துவிட்டதன் பின்னரேதான் ஒரேகிரந்த ரூபமாகச் சேர்த்துத் தைக்கப் படுதல் கூடும்.

அன்றியும், யமாமாவில் நடைபெற்ற யுத்தத்தின் போழ்து குர்ஆன்ஷரீபை மனப்பாடம் பண்ணியிருந்த அநேக சஹாபாக்கள் (ஹாபிள்கள்) எல்லாம் வீர சுவர்க்கம் புக்கு மறைந்தார்கள் ; அதுசமயம் ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களை நோக்கி ஹஜ்ரத் உமர்[ரலி] அவர்கள் இனிக் காலந்தாழ்த்தாது குர்ஆன்ஷரீபை ஒருசேரத் திரட்டி, ஒரே கிரந்தரூபத்தில் அமைத்துவிட வேண்டுமென்று ஞாபக மூட்டினார்கள். இனியும் காலக்கிரமத்தில் குர்ஆன்ஷரீபை மனனம் செய்திருந்த பெரியார்களெல்லாரும் (ஹாபிள்கள்) மரண மடைந்துவிட்ட போதினும், குர்ஆன் ஷரீபுமட்டும் திட்டமான கிரந்தரூபத்தில் நிலைத்திருப்பதற்கு அவ்வாறு செய்துமுடிப்பது அத்தியாவசியமே யென்று அவ்விஷயம் அவசரமாக ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆகவே, மதீனாவின்கண் வெளியாக்கப்பட்டு வந்த பெரும்பான்மையான அத்தியாயங்களை யெல்லாம் பிரதி செய்துகொண்டு வந்த ஜைத் பின் தாபித்[ரலி] என்பவரிடமேதான் அந்தக் காரியம் ஒப்படைக்கப் பட்டது ; அப் பெரியாரே எல்லாவிதமான கையெழுத்துப் பிரதிகளையும் ஒன்றாகத் திரட்டி, இதுபோழ்துள்ள குர்ஆன்ஷரீபு போன்ற ஒரு கிரந்தத்தை ஒரே வால்யூமாகச் சேகரம்செய்து முடித்து வைத்தார்.

" குர்ஆன் சேகரம் செய்யப்படுதல் " என்னும் பிரயோகத்தின் தாத்பர்யம் இதுவாகத்தான் இருந்து

வருகிறது ; இப்படிப்பட்ட காரியந்தான் ஹஜ்ரத் அபூ பக்ர்ரலி அவர்களது காலத்தில் நிறைவேற்றி முடிக்கப் பெற்றது. பிற்காலத்தில் ஹஜ்ரத் உதுமான்ரலி அவர்களுடைய ஆட்சியின்போழ்து இஸ்லாம் மார்க்கம் நாலு திக்குக்களிலும் நன்றாகப் பரவிவிட்டமையால், மேற்கூறிய முதல் கிரந்தத்திலிருந்தே அநேக ஆதார பூர்வமான பிரதிகள் பெயர்த்தெழுதப்பட்டு, அந்த இஸ்லாமிய ராஜ்ஜியத்தின் வெவ்வேறு மாகாணத்திற்கும் அனுப்பி வைக்கப்பட்டன. அந்த அந்த இராஜதானியிலும் இருந்துவந்த முஸ்லிம்களால் இந்த ஆதார பூர்வமாயுள்ள பிரதியேதான் சரியான பிரதியென்று கொள்ளப்பட்டு வந்தது ; அதிலிருந்தேதான் மற்றப் பிரதிகளெல்லாம் வரையப்படுதல் வேண்டும். இவ்வாறு செய்துவந்ததால் மற்றெல்லா விதமான ஆதாரமற்ற பாடபுத்தகங்களும், இலேககர்களின் கைத்தவறுகளும் அடியோடு அழித்து ஒழிக்கப்பட்டுப் போயின. எனவே, இஸ்லாத்தின் க்ஷேமத்திற்காக இந்த முதல் கலீபாவானவர் செய்துவைத்த இந்தப் பெருங் காரியமானது இவ்வுலக இறுதிக் காலம்வரை இஸ்லாத்தின் ஒற்றுமைக்குரிய ஒரே அஸ்திபாரமாக இருந்துவரு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை ; அஃதாவது, இப்பாருலகின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள எல்லாவிதமான முஸ்லிம்களுக்கும் மூலாதாரமாய் இருந்துவர வேண்டுவது ஒரேவிதமான பாடத்தையுடைய ஒரேவிதமான கிரந்தமாகவேதான் இதுகாலை இருந்துவருகின்றது.

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் சாதித்து முடித்த மற்றொரு முக்கியமான விஷயம் யாதெனின், ஜ(க்)

காத் தென்னும் ஏழை விகிதத்தை முஸ்லிம் ராஜ்ஜிய மத்திய கஜானுவிலே கொண்டுவந்து சேர்ப்பதற்காக எடுத்துக் கொள்ளப் பட்ட பிரயாசையாகவேதான் காணப் படாநின்றது: நபிகள்நாயகத்தின் நிர்யாணத்திற்குப் பிறகு அந்த அரப்நாடு முழுவதும் அங்கங்கே முளைத் துக் கிளம்பிய போலித் தீர்க்கதரிசிகளின் கிளர்ச்சிக் காலத்திலே அப்படிப்பட்ட பொதுவான கிளர்ச்சி களின் நிமித்தத்தை வைத்துக் கொண்டு ஐ(க்)காத் துத் தொகையைக் கொடுக்க எளிதில் மறுத்துவிடலா மென்று சமீபத்தில் இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருந்த கூட்டத்தினர்சிலர் மனோராஜ்ஜியம் செய்யத் துணிந்துவிட்டனர். இவர்க ளெல்லாரும் அந்தக் கல கங்களில் கலந்து கொள்ளாது சாந்தமாக இருத்தற் பொருட்டுத் தங்களுக்கு ஐ(க்)காத் தென்னும் கட் டாய ஏழை விகிதத்தினின்று விடுதலை கொடுக்கப்பட வேண்டுமென்று வேண்டிக்கொண் டிருந்தார்கள்.

ஐ(க்)காத் வசூ லிக்கப் படுதல்

ஹஜ்ரத் உமர்[ரலி] அவர்களைப் போன்ற மிகக் கடு மையான உத்தியோகஸ்தருங்கூட அதுசமயம் இருந்து வந்த மிக்க நெருக்கடியான நிலைமையையுன்னி, அப்ப டிப்பட்ட மக்களுக்கெல்லாம் சிறிது விலக்குவிதி யளித்துவிடுமாறு ஹஜ்ரத் அபூபக்ர் அவர்களுக்கு ஆலோசனை கூறுவா ராயினர்கள். அவர்களுக்கு இத் தகைய தாராளச் சித்தத்தை அதுபோழ்து அளிக்க மறுத்து விடுவதனால் அப்படிப்பட்ட வர்க்கத்தின ரெல்லாரும் இஸ்லாத்தின் விரோதிகளாக மாறிவிடுவ தோடுமட்டும் நின்று விடாது, இம் மார்க்கத்தின் பகைவர்களுடனே ஒன்றித்து விடுவார்க ளென்றும் அஞ்சுதற்கு ஏதுவில்லாமற் போய்விட வில்லை. ஆயி

னும், இந்த முதல் கலீபாவானவர் அவ்வண்ணம் விட்டுக்கொடுக்க ஒருசிறிதும் மனமிணங்கினர்க ளில்லை. என்னெனின், இஸ்லாத்தின் அதிகாரத்திற்குரிய ஒற்றுமைக்காகவும் ஊர்ஜிதத்திற்காகவும் அத்தியாவசியமாய்க் காணப்பட்டுவந்த ஜ(க்)காத் தென்னும் ஏழை விகிதத்தை ரத்துசெய்து விடுவதென்பது அசாத்தியமாகவே காணப்பட்டு வந்தமையான், அத்தகைய மறுப்புக்கூறிய கூட்டத்தாருடனெல்லாம் விட்டுக் கொடுத்துச் சமாதானம் செய்துகொள்வ தென்பது ஒரு முடியாத காரியமாகவே காணப்பட்டுவந்த தென்னலாம். அந்த ஆரம்பகாலத்தில் இப்படிப்பட்ட பொறுக்கடமையில் ஒருசிறிதேனும் தளர்ச்சி யேற்பட் டிருக்குமாயின், இஸ்லாத்தின் இகலோக அதிகாரமே அற்றைநாளில் சின்னபின்னமாய்ச் சிதறுண்டு போயிருத்தல் கூடும்.

இத்தகைய தேசீய மத்திபப் பொக்கிஷமானது தனக்குரிய வருவாயை இழக்கத் துணிந்திருக்குமாயின், அக்காலத்திய கிலாபத் ராஜ்ஜியமானது வெறும் எலும்புக்கூடாகவே மாறிப்போய், தன்மாட் டிருந்து வந்த எல்லாவிதமான தசைப்பற்றையும், உதிரம் நிரம்பிய உயிர்நாடியையுங்கூட இழந்துவிட் டிருக்குமென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமென்பது கிடையாது. ஆகவே, அந்தப் பால்ய இஸ்லாமிய குடியரசானது அப்பொழுதே ஒருசில தினங்களுக்குள் அஸ்தமித்து அடியோடு அழிந்தொழிந்து போய்விட் டிருக்கும். ஆனால், அப்படிப்பட்ட அபாய நிலையானது ஹஜ்ரத் அபூபக்ரவர்களின் உறுதியான திட சித்தந்தாலேதான் முற்றும் நன்றாகப் பாதுகாத்து ரக்ஷித்து வைக்கப் பட்ட தென்று கூறி முடிக்கலாம். ஜ(க்)காத்துத்

தொகையினின்று ஒருசிறு தான்யமேனும் கொடுபடாமல் விடுபட்டுப் போய்விடக் கூடுமாயின், அதற்குரியவர்மீது யுத்தம் தொடுக்கப்பட்டு, அந்தப் பாக்கித் தொகையானது வசூல் செய்யப்பட்டு முடிக்கப்படும் வரை அத்தகைய யுத்தமானது ஒருபொழுதும் நிறுத்தி விடப்படமாட்டாதென்று இந்த கலீபாவானவர் ஒரு சிறிதும் தாக்ஷிண்ய மில்லாது கூறி முடித்துவிட்டார்கள். இதனால்தான் ஹஜ்ரத் உமர்ரலி அவர்கள் ஜீவித்திருந்த காலமெல்லாம் ஒரு விஷயத்தை மறக்காமல் கூறிக்கொண்டே யிருந்தார்கள். அஃதாவது, அபூபக்ர்ரலி ஹிஜ்ரத்தின்போழ்து ரசூலுல்லாவுடனிருந்தார்கள்; அது மஹா ஆபத்துக்குரிய அமயமாம். பின்னர்த் தம்முடைய கிலாபத்தின் ஆதிகாலத்தில் எத்துணைத் தைரியமாகவும், மனோ திடமாகவும் நின்று, அநேக மஹத்தான ஆபத்துக்களையெல்லாம் சிதறடித்தார்களோ, அவ்வாறு செய்து முடிப்பது மற்றவர்களால் ஆகக்கூடிய காரியமன்று. எனவே, இவ்விரண்டு காரியங்களும் யான் என்வாழ்நாட்கள் முழுவதும் செய்திருக்கும் எல்லாக் காரியங்களுக்கும் மேற்பட்டனவாகும் என்பதே (ஷம்ஸுத் தவாரிக்).

இத்தன்மைத்தாய ஜ(க்)காத் தென்னப்படும் ஏழை விகிதத்தைச் சேமித்து வைத்தற்குரிய பொது கஜானுவொன்று இல்லாமற் போயினமையாற்றான் இதுகாலை நம் முஸ்லிம்களின் மதாசார, சமூகாசார, தேசீய விஷயங்களெல்லாம் இத்துணைக் கீழ்மையான அதிபாதலத்துள்ளே ஆழ்ந்துபோய்த் தாழ்ந்து கிடக்கின்றன வென்பதை எத்தனை முஸ்லிம்கள் ஓர்ந்து கொண்டிருக்கிறார்களென்று நினைத்துக்கொண்டிருக்கின்றீர்கள்? ஆண்டுதோறும்நிரப்பப்பட்டுக்கொண்டே

வரப்படுதற்குரிய இப்படிப்பட்ட முஸ்லிம்களின் ஜாதீய பொதுகஜாஞவொன்று திறக்கப்பட்டு, அதில் எல்லா முஸ்லிம் ஆண்களும் பெண்களும் அப்போதைக் கப்போது தத்தமக்குரிய ஜ(க்)காத்துத்தொகைகளைக் கட்டிக் கொண்டு வருவார்களாயின், கலாசாலைகள், அநாத ஆசிரமங்கள், ஆஸ்பத்திரிகள், ஏழைவிடுதிகள், இஸ்லாத்தைப் பரத்துதற்குரிய பிரசார சபைகள் ஆதிய பலப்பல இயக்கங்களை யெல்லாம் தோற்றுவித்து, மிகக் குறுகிய கால எல்லைக் குள்ளேயே எப்படிப்பட்ட அற்புதங்களை யெல்லாமும் சாதித்துவிடுதல் சாலா தென்று நினைக்கின்றீர்கள்?

ஆலோசனைச் சபையுடன் கூடிய அரசாங்கம்

ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் இஸ்லாமிய ராஜ்ஜியத்தில் புகுத்திய மூன்றுவது மகாபெரிய காரியம் யாதெனின், எல்லா விதமான அரசாங்கக் காரியங்களிலும் ஜனநாயக முறைக்குரிய ஆலோசனைச் சபையை (மஜ்லிஸுஷ் ஷுராவை)க் கலந்து பரியாலோசனை புரிந்து, இறுதியில் அதிகப்படியான வாக்காளர்களின் அபிப்பிராயத்தையே அங்கீகரித்து நடப்ப தென்பதுதா ஞகும். இதற்குரிய முறையானது இவ்வாறு அனுஷ்டிக்கப்பட்டு வந்தது: முதன் முதலாக ஒரு விஷயத்தைக் குறித்து விவரம் தெரிந்து கொள்வான் வேண்டிக் குர்ஆன்ஷரீபைத் துருவிப் பார்த்து வழி கண்டுபிடிப்பார்கள். ஆனால், அந்தத் திருமறையில் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு வேண்டிய நேரான சமாதான மொன்றும் காணப்படாமற் போய்விடின், பிறகு நபிகள்திலகத்தின் சொல்லையும் செய்கையையும் ஆராய்ச்சிசெய்து பார்ப்பார்கள். இப்படிப்பட்ட முறையாலும் கோரியபலன் கிடைக்க

வில்லை யாயின், அவ்விஷயம் ஆலோசனைச் சபைக்குக் கொண்டுவரப்படும்; ஆங்கு நபிபெருமானுடைய எல்லாப் பிரதமத் தோழர்களும் விஜயம் செய்திருப்பார்கள். அதுபொழுது அவ்விடத்தில் எடுத்துக்கொள்ளப் பட்ட விஷயம் நன்ருகப் பன்னிப்பன்னி விவாதிக்கப் பட்டதன் பின்பு அதிகப்படியாயுள்ள வாக்காளர்களின் அபிப்பிராயப் பிரகாரமே அவ்விஷயம் முடிவு செய்யப்படும்.

இவ்வாருகத்தான் ஹஜ்ரத் உமர்ரலி அவர்களுடைய கிலாபத்தின் போழ்தும் ராஜ்யபரிபாலனம் செவ்வனே நடாத்தப்பட்டு வந்தது. ஆனல், விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட விஷயம் குர்ஆன் ஷரீபின் விளக்கத்தைக் கொண்டேனும், நபிகள்நாயகத்தின் சொல் செயல்களைக் கொண்டேனும் எளிதில் பைஸல் செய்துவிடப்படக் கூடுமாயின், அப்பால் ஆலோசனைச் சபையாரின் முடிவான அபிப்பிராயம் எவ்வா றிருப்பினும், அதனைப் பொருட்படுத்தாது குர்ஆன்ஷரீபின், அல்லது நபிகள்திலகத்தின் அபிப் பிராயத்திற் கொத்தவா ருகவேதான் காரியம் நிறைவேற்றி முடிக்கப்படும். உஸாமாவின் தலைமையின் கீழே சிரியாவுக்குப் படையனுப்புவது குறித்து நடத்தப்பட்ட விவாதம் மேற்கூறிய விஷயத்திற்கோர் உதாஹரணமாக எடுத்துக்கொள்ளப்படலாம்: அதுபோழ்து உள்ளூரில் இருந்துவந்த மகா அபாயகரமான நிலைமையை யுன்னி, நபிகள் திலகத்தின் முக்கியமான தோழர்க ளெல்லாரும் அந்தச் சிரியாவின் படையெடுப்பை எதிர்த்து நின்றபோதினும், நபிகள்திலகத்தின் அதிகாரத்தை வைத்துக்கொண்டு ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் அந்த ஆலோசனைச் சபையாரின் அபிப்

பிராயத்தை மீறியே காரியத்தைச் செய்துவிட்டார்கள். சிரியாநாட்டை நோக்கி அனுப்பப்பட வேண்டுமென்று நபிகள்நாதரால் கட்டளையிடப் பட்ட படையை எக்காரணத்தைக்கொண்டும் நிறுத்திவிடுதற்கு எவருக்கும் அதிகாரம் இல்லையென்று இந்த கலீபாவானவர் அதிக தைரியமாகக் கூறினர். இத்தகைய சமாதானத்தைக் கொண்டேதான், உஸாமாவைப் பார்க்கினும் அனுபவத்திற் சிறந்த பல பெரியார்களிருப்பினும், அவர்களை யெல்லாம் விடுத்து, அந்த உஸாமாவையே தளபதியாக ஹஜ்ரத் அபூபக்ர் அவர்கள் அனுப்பிவைத்தார்கள். என்னெனின், உஸாமாவையே நபிகட்டிலகம் அந்தப் படையெடுப்பிற்குத் தலைவராக நியமித்திருந்தார்கள். ஆகவே, அவரை நீக்கி வேறொருவரைச் சேனைத்தலைவராக நியமிப்பதற்கு எவருக்கும் எந்த முகாந்தரத்தைக் கொண்டும் எவ்வாறு அதிகாரம் கிடைத்துவிடுதல்கூடும்? ஆயின், எடுத்துக் கொள்ளப்பட்ட விஷயத்திற்கு வேண்டிய நேரான பைஸல் முறையானது குர்ஆன்ஷரீபைக் கொண்டேயாதல், ஹதீது ஷரீபைக் கொண்டேயாதல் கிடைக்கப்பெறுமற் போய்விடக் கூடுமாயின், அப்பால் அந்த ஆலோசனைச் சபையாரின் பெரும்பான்மையான வாக்கைக் கொண்டேதான் அஃதெப்பொழுதும் முடிவுசெய்து வைக்கப்பட்ட தென்னலாம். பெரும்பான்மை யாளரின் அபிப்பிராயத்திற்கிணங்க ஒருவிஷயம் முடிவு செய்யப்பட்டு விடுமாயின், உடனே சிறுபான்மை யாளரும் தங்கள் விவாதத்தை விட்டுக்கொடுத்து, பெரும்பான்மையோரால் கூறப்பட்ட முடிபையே தாங்களும் ஏற்றுக்கொண்டு முழுவதும் கட்டுப்பட்டே நடப்பார்கள்.

தேச சரித்திரத்தில் ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்களுக்கு ஓர் உன்னத ஸ்தானத்தை அளித்திருப்பது, இப்பெரியார் சமயோசிதமாகச் செய்து வைத்த மற்றொரு பெரிய சீர்திருத்தமாகவே காணப்படாநின்றது ; இதுதான் அரப் ஜாதியாரின் அந்தஸ்தைப் பொதுமக்களின் விருப்பத்திற்கு அடங்கிநடக்குமாறு செய்துவைத்ததாக இருக்கின்றது. சமூகத்தின் ஏனைய அங்கத்தினர்களைப் போலவேதான் அந்தக் குடியரசின் தலைவரும் ஒரு சர்வசாதாரண அங்கத்தினராக இருக்கக் கட்டுப்பட் டுள்ளார். ஜனநாயக ஆட்சியில் அரசாங்கத் தலைமைவகிக்கும் ஒருவருக்குப் பிரத்தியேகமான உரிமையொன்றும் கொடுக்கப்படுவது கூடாது. உதாஹரணமாக, அரசாங்கத்தின் பொக்கிஷ விஷயத்தை எடுத்துக்கொண்டு பார்ப்போம். இவ்விஷயத்தில் அக்குடியரசுத் தலைவர் அந்த கஜானாவுக்கு அதிகாரியாயில்லாது அதன் பாதுகாவலராகவே இருந்துவரக் கடமைப்பட்டுள்ளார். மற்றெல்லாரும் ஒன்று சேர்ந்து இந்தத் தலைவரின் மாதாந்தச் செலவுக்காக ஒரு தொகையை நிச்சயித் திருந்தனர் ; அதனைப் பார்க்கினும், ஒரு பையேனும் இத்தலைவர் பொது கஜானாவிலிருந்து தமது சொந்த உபயோகத்திற்காக எடுத்துக்கொள்வது கூடாது. எனவே, குடியரசின் தலைவர் பொதுமக்களின் முழு ஊழியராகவேதாம் கருதப்பட்டு வந்திருக்கின்றார்.

உலக நாகரிகமானது அதிக பாதலத்தில் இருந்து வந்த காலத்திலேயே இப்படிப்பட்ட சீர்திருத்தமானது இஸ்லாத்தினால் அவ் வரப்நாட்டின்கண் நிறுவப்பட்டுவிட்டது. அக்காலத்தில் அவ்வாறு நிறு

வப்பட்ட சீர்திருத்தத்தைக் கண்டு இந்த 20-ஆவது நூற்றுண்டில் இத் தரணியின்கண் எத்தேயத்திலும் காணப்பட்டுவரும் எப்படிப்பட்ட நாகரிகமும் லஜ்ஜையால் தலைகுனிய வேண்டியதாகத்தான் இருக்கின்றது. இன்னம், ஹஜ்ரத் அபூபக்ர்ரலி அவர்கள் தங்களுக்குக் கிடைத்த அரசாங்கப் பதவியைத் தங்கள் குடும்பத்திலேயே வாரிஸ் கிரமமாக வருதற்குரிய தலைமுறைப் பாத்தியதையாகச் செய்து கொண்டுவிடத் துணிந்தன ரில்லை. ஆதலினுற்றுன், இவர்களுடைய மரணத் தறுவாயில், இவர்களது செங்கோன் முறையை மிக்க நல்ல முறையில் நடாத்தி வைத்தற்குரிய வயதுவந்த குமாரர்களிருந்தும், ஹஜ்ரத் உமர்ரலி அவர்களையே அந்த கலீபாவின் ஸ்தானத்திற்கு உரியவரென்று பொறுக்கி எடுத்துக் கொண்டார்கள். இதனையும் தங்கள் அபிப்பிராயத்தைக் கொண்டே முழுவதும் நிறைவேற்றி வையாது, மற்றெல்லா முஸ்லிம்களின் அபிப்பிராயத்தையும் ஆமோதிப்பையும் பெற்றுக் கொண்ட பின்னரேதான் அந்த இரண்டாவது கலீபாவின் நியமனத்தையும் ஊர்ஜிதப்படுத்தி வைத்தார்கள். என்னெனின், இஸ்லாத்தின் ஜனநாயக முறைப்படி அரசன் என்பான் பொதுமக்களின் பகிரங்க ஊழியனென்பதை நிலைநாட்டி வைப்பதே இவர்களுடைய உதாஹரண நோக்கமாய் இருந்துவந் திருக்கிறது. பொதுஜனங்களை யெல்லாம் கட்டுப்படுத்தற்குரிய சட்டதிட்டங்களே குடியரசுத் தலைவர்களையும் கட்டுப்படுத்த வேண்டுவ தென்பதேதான் இம் மார்க்க நியதியாகும். “அரசனென்பான் பிழையிழைத்தற் குரியவ னல்லன்” என்னும் திண்ணை வேதாந்தமானது இஸ்லாத்தின் சட்டத்திற்கு முற்றி

லும் மாற்றமானதாகவே காணப்படாநின்றது. இஸ்லாத்தின் குடியரசுக் கோர்ட்டில் ஒரு சர்வசாதாரணமான கூலிக்காரனுக்குக் கிடைக்கும் நியாயமேதான் அரசனுக்கும் வழங்கப்படும். இவ்விருவர்க் கிடையில் நியாயபரிபாலனம் என்பதில் எந்தவிதமான வேறுபாடும் காண்பிக்கப்படுதல் கூடாது.

ஒரு முறை மக்கா ஷரீபுக்கு இந்த முதல் கலீபாவானவர் விஜயம் செய்திருந்தபோழ்து, இப்பெரியார் அந் நகரத்திலுள்ள பொதுமண்டபத்திற் கருகே உட்கார்ந்துகொண்டு, ஆங்குள்ள எவருக்கேனும் தம்மீது ஏதேனும் குறையுண்டோ வென்றும், எவருக்கேனும் தாம் ஏதேனும் கொடுக்க வேண்டியதுண்டோ வென்றும் வினவுவா ராயினர்கள். இவ்வாறாகவே தான் அந்தக் குடியாட்சி முறையானது பரிபாலனம் பண்ணப்பட்டு வந்தது. இன்னம், சட்டநிரூபணம் என்பதும் அரசருடைய கரத்தில் அதிகாரம் கொடுக்கப்பட்ட ஒரு விசேஷ விஷயமாய் இருந்திருக்கவில்லை. முதன்முதலாகக் குர்ஆன் ஷரீபைக்கொண்டும், அடுத்தபடியாக நபிகள்நாயகத்தின் பழக்க வழக்கத்தையேனும் உபதேசத்தையேனும் கொண்டும், பின்னரே பொதுமக்களின் பெரும்பான்மைத் தீர்மானத்தைக் கொண்டும் எல்லா விஷயங்களும் முடிவுசெய்யப்பட்டு வந்தன. எனவே, இவ்வண்ண மாகத்தான் அக் குடியரசின் அனுஷ்டான பூர்வமாயுள்ள சட்ட திட்டங்க ளெல்லாம் வகுக்கப்பட்டு வந்தன. ஆகவே, அப்படிப்பட்ட சட்டமே எல்லாருக்கும் முதன்மையாயிருந்ததல்லது, அரசனென்பானே அவ்வாறு முதன்மை ஸ்தானத்தை வகித்திருக்கவில்லை.

இவ்வாருக, அரசனது ஆதிக்கத்தை இஸ்லாமிய சட்டத்திற்கு அடங்கியதாகவும், தேசத்தின் சட்டத்தைப் பொதுஜனங்களின் அபிப்பிராயத்திற் கடங்கியதாகவும் செய்துவைத்ததில் ஹஜ்ரத் அபூபக்ர் ரலி அவர்கள் ஒரு மெய்யான குடியாட்சி கவர்ண்மெண்டிற்குரிய அஸ்திபாரத்தை நன்கு நிலைநாட்டி யிருக்கின்ருர்கள். இதனுல் சமத்துவ மென்பதும், சகோதரத்துவ மென்பதும், சுயேச்சை யென்பதும் முற்ற முற்றத் தத்தமக்குரிய செல்வாக்கைப் பெற்றுக்கொண் டிலங்கின வென்னலாம். ஆனுல், அந்தோ ! இஸ்லாத்தின் துரதிருஷ்டம் இருந்தவாறே இத்தகைய நல்ல குடியாட்சி முறையானது நான்காவது கலீபாவாய் விளங்கிய ஹஜ்ரத் அலீ ரலி அவர்களுக்குப் பின்னே ஹஜ்ரத் ஹஸன் ரலி அவர்களுடைய காலத்தில் அடியோடு கைவிடப்பட்டுப் போய்விட்டது. நபிகள் திலகத்தாலும், பின்னர் வந்த முதல் கலீபாவாலும், அதன் பின்பு மற்றை மூன்று கலீபாக்களாலும் பத்திரமாகப் பரிபாலனம் செய்யப்பட்டுவந்த இத்தகைய குடியாட்சி முறையானது முதல்நான்கு கலீபாக்களின் காலத்தோடே அஸ்தமித்துப் போய்விட்டதுதான் இஸ்லாத்திற்கு நேரிட்டுவிட்ட ஒரு மாபெரும் தெளர்ப்பாக்கியமாய் இருந்து வருகின்றது. இதன் காரணமாக அரசப்பதவி யென்பது ஒரு குடும்பத்தாரின் தனிப்பட்ட உரிமையாக அமீர் முஆவியாவின் ரலி காலந்தொட்டு மாறிப்போய்விட்டது. இவ்வண்ணமாகவே பைத்துல்மால் என்னும் பொது கஜானுவும் அத்தகைய அரசர்களுக்குரிய சொந்தப் பொக்கிஷமாகவே மாறிப்போய்விட்டது. மீட்டும் குடியாட்சி முறையின் ஸ்தானத்தில் கொடுங்கோன்மை

யென்னும் தனியாட்சி முறையானது (அ)நீதி செலுத்தத் தொடங்கிவிட்டது. அப்பொழுது முதற் கொண்டேதான் இஸ்லாமிய ஏக சகோதரத்துவத்திற்கு ஆபத்தும் அழிவும் விளையத் தலைப்பட்டு விட்டன வென்னலாம்.

முஸ்லிம் சைன்னியங்கள் எதிரிகள்மாட்டு எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பதற் குரிய முறையிலே எந்த விதமான மானுஷீக தர்மம் நிறைந்த சட்டதிட்டங்களை இந்த முதல் கலீபாவானவர் ஏற்படுத்தி வைத்திருந்தா ரென்பதை ஈங்குக் குறிப்பிட்டுக் காட்டாது விட்டுவிடுவோ மாயின், ஹஜ்ரத் அபூபக்ரவர்கள் நிறைவேற்றி வைத்திருந்த முக்கியமான சீர்திருத்தங்களுள் ஒருசில விடப்பட்டே போய்விடு மென்பது திண்ணம். எனவே, இவ்விடத்தில் அப்படிப்பட்ட சீர்திருத்தங்களை எடுத்தெழுத வேண்டியதா யிருக்கின்றது:—

எதிரிகளை நடாத்திய விதம்

1. வயோதிகர், வனிதையர், சிறு குழந்தைகள் கொல்லப்படுவது கூடாது.

2. சன்னியாசிகள் தொந்ததரைக்குள் ளாக்கப் படுவது கூடாது; அவர்களுடைய வணக்க ஸ்தலங்களும் தகர்க்கப்படுதல் கூடாது.

3. யுத்தத்தில் இறந்து வீழ்ந்தவர்க ளுடைய சவங்கள் சின்ன பின்னமாகச் சித்திரவதை புரியப் படுதல் கூடாது.

4. பழம் பழுத்துள்ள மரவகைகள் வெட்டி வீழ்த்தப்படுதல் கூடாது; மஹ்ஸூல்கள் எரிக்கப் படுதல் கூடாது; குடியிருக்கும் வீடுதிகளும் இடிக்கப் படுவது கூடாது.

5. மற்றை மதவாதிகளுடன் ஏற்படுத்தப்பட்டிருக்கும் உடன் படிக்கை நிபந்தனைக ளெல்லாம் எந்த விதமான சந்தர்ப்பத்திலும் கௌரவமாகவே நிறைவேற்றி வைக்கப்படுதல் வேண்டும்.

6. யுத்தத்தில் சிரம்வணங்கிச் சரண் புக்கவர்கள் முஸ்லிம் குடிகளுக்குரிய எல்லாவிதமான உரிமைகளுக்கும் சுதந்தரங்களுக்கும் அருகதை யுள்ளவர்களாகவே கருதப்பட்டு நடத்தப்பெறுதல் வேண்டும்.

குணதிசயப் பெருமை

ஹஜ்ரத் அபூபக்ரின் பல்வேறு வகைப்பட்ட, கீர்த்திப் பிரதாபம் மிக்க உயிர்வாழ்க்கையில், அவர்களுக் கிருந்துவந்த நியாயபுத்தியின் இணையற்ற தன்மையானது மகாசிலாக்கிய முள்ளதாகவே சரித்திரத்தில் வரையப்பட் டிருக்கின்றது. பொதுமக்களுக்குச் சரியான நியாயம் செலுத்தவேண்டுமே யென்னும் கவலை தான் இவர்களுடைய மனத்தை அல்லும் பகலும் அதிகம் உறுத்திக் கொண்டே யிருக்கும். பிதக் என்னுமிடத்தில் இருந்துவந்த சொத்தின் சம்பந்தமாக ஏற்பட்டுவிட்ட, இஸ்லாமிய சரித்திரத்தில் பெயர்பெற்றிருக்கும் அந்தப் பெரிய தக்ராரில் இந்த முதல் கலீபாவானவர் காட்டிவந்த மனோதைரிய நிஷ்பக்ஷபாத நீதியானது இப் பெரியாரின் நியாய பரிபாலன முறையை நன்கெடுத்து உதஹரித்துக் காண்பிக்கின்றது. பிதக்கிலும் வேறிடங்களிலும் இருந்துவந்த ஒருசில ஸ்தாவர சொத்துக்களின் வருவாயைக் கொண்டு நபிகள்திலகம் தங்கள் ஜீவனோபாயத்தை நடாத்திக்கொண்டு வந்தார்கள் ; அவர்களுடைய நிர்யாணத்திற்குப் பின்னே அந்தச் சொத்துக்க ளெல்லாமும் இஸ்லாமிய சட்டப்பிரகாரம் அப் பெருமா

ஞரின் வாரிஸ்களுக்குள்ளே பங்கிட்டுக் கொடுக்கப் பட்டுவிடுதல் வேண்டு மென்று நபிகள் திலகத்தின் அருமைத் திருக்குமாரியாகிய ஹஜ்ரத் பாத்திம(த்) துஜ் ஜொஹ்ரா ரலி அவர்கள் இந்த கலீபாவின்பால் விஞ்ஞாபனம் செய்துகொண்டார்கள். அதுகேட்டு இந்த முதல் கலீபாவானவர், "நபிமார்கள், வாரிஸ் கிரம பாத்தியதையில் பகிர்ந்து கொள்ளுதற் குரிய ஏதொன்றையும் விட்டுச் செல்வது வழக்கமில்லை; ஆதலின், அவர்களால் விட்டுச்செல்லப்படும் சொத்து முழுவதும் தர்மத்திற்கே உபயோகிக்கப் படுதல் வேண்டும்," என்று நபிகணாதர் ஸல் பிரஸ்தாபித் திருந்த பெயர்போன திருவாக்கியத்தை மேற்கோளா கக் காட்டி, ஹஜ்ரத் பாத்திமா ரலி அவர்களுடைய விண்ணப்பத்தை மறுத்துத் தள்ளி விட்டார்கள். ஹஜ்ரத் அபூபக்ரவர்களும் அளவுகடந்த மேதை மரி யாதைகளை யெல்லாம் செலுத்தி வந்துகொண் டிருந்த அந்த நபிகள்நாயகத்தின் கரிசனமிக்க அருமைத் திருக் குமாரியின் வேண்டுகோளை இவ்வாறு அடியோடு நிராகரித்து விடுவதென்பது ஒரு சர்வ சாதாரண மான காரியமென்று நினைக்கின்றீர்கள்?

உண்மையை ஊன்றிப் பார்க்குமிடத்து, இப்பெரி யார் தங்களுடைய சொந்தக் குமாரியாய் விளங்கிவந்த, நபிகட்டிலகத்தின் அருமைப் பாரியாள் உள்ளிட்ட மற்றெல்லா நாயகத்தின் வாரிஸ்களுக்கும் இப்ப டிப்பட்ட ஏமாற்றத்திற்குரிய பக்ஷபாதமற்ற பதி லையேதான் கொடுத்துவந் திருக்கிறார்கள். இவ்வா றாய நிஷ்பக்ஷபாத முள்ள தீர்ப்பையேதான் தங்களு டைய சொந்த மரணத்தறுவாயிலுங்கூட வெளிப் படுத்திப் போயிருக்கின்றார்கள்; பைத்துல்மா லென்

னும் பொதுகஜானுவிலிருந்து இவர்களுக்கு மாதவாரியாய்க் கிடைத்துவந்த நிவேதனத்தைக் குறித்து இப்பெரியார் கூறியுள்ள முடிபானது எப்படிப்பட்ட பக்ஷபாதமற்ற நியாய துரந்தரரையும் திடுக்கிடச் செய்துவிடுமென்பது திண்ணம்; "யான் மாதந்தோறும் பெற்று வந்த மான்யத்திலின்று ஏதேனும் என் மரணத்திற்குப் பின்னே எஞ்சி யிருக்குமாயின், அது முழுவதும் பொதுகஜானுவிலேயே சேர்க்கப்பட்டுவிடுதல் வேண்டும்," என்று வஸிய்யத் செய்துவிட்டுச் சென்றுர்கள்.* இதனாலும் அபூபக்ர்ரலி அவர்கள் இஸ்லாத்தின் பின்வரும் சந்ததிகளுக் கெல்லாம் ஒரு முன்வழி காட்டியாய் இருந்துவருகிருர்கள்; என்னெனின், எப்படிப்பட்ட பக்ஷபாதமும்—பந்துமித்திரர்க ளென்னும் நெருங்கிய பாசங்கூட முஸ்லிமென்பாரை அவருக்குரிய கடமையினின்றும் அப்பாலிப்பால் ஒரு சிறிதும் ஆட்டி அசைத்துவிடுவது கூடா தென்பதுதான் இப் பெரியாரின் அழகிய சரிதையினின்று அறியக் கிடக்கின்றது.

---

* "இவர் தம்முடைய கிலாபத்தை எற்றுக்கொண்டவுடன் சில மாதங்கள் வரை எவ்வகைச் சம்பளமும் இல்லாமலே வேலை பார்த்துவந்தார். பிறகு குடியாட்சியிலுள்ள முஸ்லிம்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி வருஷ மொன்றுக்கு 6,000 திர்ஹம் விகிதம் பைத்துல்மாலென்னும் பொதுகஜானுவிலிருந்து எடுத்துக்கொள்ளச் சம்மதித்தார். ஆயினும், இவர் தம்முடைய மரணத்தறுவாயி லிருந்தபொழுது பைத்துல்மா லுடைய பணத்திலிருந்து சம்பளம் பெற்றுக்கொண் டிருந்த விஷயத்தைக் குறித்து மனஞ்சகியாதவராய்த் தம்முடைய சொத்திலிருந்து ஏகதேசத்தை விற்றுத் தாம் பெற்றிருந்த சம்பளம் முழுதையுமே பைத்துல்மாலுக்குத் திருப்பிக் கொடுத்துவிடும்படியாக உத்தரவிட்டார்," என்று ஸையித் அமீரலீத் வரைந்துள்ளார்.

ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்கள் அழகிய வடிவத்தை யுடையவர்களா யிருந்தார்கள்; மேனியின் அமைப்பு மெல்லியதாகவே காணப்படும்; கன்னங்களிரண்டும் சதைப்பற்றில்லாமல் ஒட்டிப்போ யிருக்கும்; நேத்திரங்க ளிரண்டும் ஆழக்குழிந்த கண்களாகவே காணப்படும்; நெற்றியானது அகன்று உயர்ந்திருக்கும். இவர்களுடைய முதுகு ஒருசிறிது முன் வளைந்து குனிந்திருக்கும். இவர்கள் தங்கள் தாடி ரோமத்திற்குச் சிவப்புச்சாயம் ஏற்றிக்கொள்வார்கள். தங்கள் விரலில் மோதிரமொன்று அணிந்திருப்பார்கள்; அதில் "நிஃமல் காதிறு அல்லாஹ்"—அஃதாவது, "சர்வ வல்லமையுள்ள ஆண்டவன் மிகவுநல்லவன்," என்னும் அரபு வாக்கியம் செதுக்கப்பட்டிருந்தது.

தோற்றமும் குணமும்

இவர்களுடைய எண்ணிறந்த குணவிசேஷங்களுள் உதாரகுண மென்பதே தலைசிறந்து விளங்கிற்றென்னலாம். ஏழை எளியார்களுக் கெல்லாம் உதவிபுரிவதென்பது இவர்களுடன் கூடப்பிறந்த ஒரு குணவிசேஷ மாகவேதான் காணப்பட்டு வந்திருக்கின்றது; எனவே, அனாதை மக்களையும் அவதியுற்றோரையும் அரசாங்க வேலையொழிந்த வேளைகளில் இவர்கள் சென்று விசாரித்து, அவர்களுடைய யோக க்ஷேமங்களுக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்து வருவார்கள். அரசரென்னும் முறைமையில் இப்பெரியார் பொதுகஜானாவில் எத்துணைச் சிறிய தொகையும் சேர்ந்து குவிந்துவிடாமலே செய்துவந்தார்கள். ஆகவே, அங்கு வந்துசேர்ந்த திரவியம் முழுவதும் அருகதை யுள்ளவர்களுக் கெல்லாம் அப்பொழுதைக்

கப்பொழுது பகிர்ந்துகொடுக்கப்பட்டே வந்தது. ஆண் பெண், அடிமை அடிமை யல்லாதவன், வாலிபன் வயோதிகன் என்ற பாகுபாடு இல்லாமலே எல்லாரும் அத்தொகையில் சரிசமானமாயுள்ள பங்குகளையே பெற்று வந்தார்கள். தங்களுடைய மரணத்தின் போழ்து இந்த முதல்கலீபாவானவர் பைத்துல்மா லென்னும் அரசாங்கப் பொக்கிஷத்தில் ஒரேயொரு திர்ஹத்தையேதான் (கால் ரூபாய் பெறுமதியுள்ள ஒரு நாணயத்தையே) விட்டுவைத்துச் சென்றார்கள்.

இவர்கள் தங்கள் நடக்கையில் மிகப் பணிவுள்ள வர்க ளாகவே நடந்துவந்தார்கள்; விருந்தோம்புவதி லும் இணையற்றவர்க ளாகவே இருந்துவந்தார்கள். இவர்கள் மிகவுமிளகிய மனமுடையவர்க ளாதலின், குர்ஆன் ஷரீபை ஓதும்போதே தாரை தாரையாகக் கண்ணீர்விட்டு அழுதுவிடுவார்கள். எனினும், இவர் கள் தங்கள் தழுதழுத்த ஹிருதயத் துடனே தைரிய மென்பதையும் அளவிற்கு மேலாகவே அடையப் பெற் றிருந்தார்கள். மகா நெருக்கடியான நேரங் களி லெல்லாம் இவர்கள் நபிகள் பெருமானு ருடனேயே வலக்கரம்போலத் தனித்து நின்றிருக்கின் றார்கள்; உதாரணமாக, ஹிஜ்ரத் புறப்பட்டுச் சென்ற போழ்தும், பத்ர், உஹத், ஹுனைன் போன்ற யுத்தங் களிலும் இப் பெரியார் அம் மகானுபாவருக்கு மருங்கி லிருந்துவந்ததை எடுத்துக் காட்டலாம். இவர்களு டைய மதபக்தியும் நபிகள்திலகத்தின் பக்தியைப் போலவேதான் மிகமிகச் சிறந்தே விளங்கிக்கொண் டிருந்தது. இரவில் நெடுநேரமட்டும் ஆண்டவனை வணங்கிக் கொண்டே விழித்துக்கொண் டிருப்பார் கள்; பகற் காலத்தில் நோன்பு நோற்றுக் கொண்

டிருப்பார்கள். இவ்வாறிருந்தும், யுத்தகாலங்களில் இவர்கள் மற்றெவருக்கும் பின்னிடைந்து நிற்பது வழக்கமில்லை. மதீனாவின்கண் சேமப்படை யொன்றும் இல்லாததைக் கண்டு, கலகக்காரர்களால் அந்நகர் தாக்கப்பட நேர்ந்தபோழ்து இப்பெரியார் எஞ்சியிருந்த எல்லாவித மனிதர்களையும் ஒருமிக்கத் திரட்டிக்கொண்டு, தாங்களே தலைமைவகித்து, அந்தக் கலகக்காரர்களை யெல்லாம் எதிர்த்துத் தாக்கச் சென்றார்கள். இன்னம், வெளிநாடுகளுக்குச் சைன்னியங்கள் அனுப்பப்பட்ட போழ்தும் இவர்களே நேரிற் சென்று அவர்களை யெல்லாம் வழியனுப்பி வைத்துவிட்டு வருவார்கள். தங்களுடைய தள்ளாமையுள்ள வயோதிகத்தின் போழ்தும் இப்பெரியார் உஸாமாவுக்கு அநேக விஷயங்களைக் குறித்து அறிவுறுத்திக் கொண்டே நெடுந்தூரம்வரை அந்தச் சிரியா நாட்டுப் படையெடுப்புடனே அந்தத் தளபதியைத் தொடர்ந்து நடந்துசென்றார்கள்.

இவர்கள் கலீபாவாக அரசாண்டு வந்தபோதுங்கூட, இவர்களுக்கு அதுசமயம் அறுபதுக்கு மேற்பட்ட பிராயமா யிருந்துவந்தும், ஸுன்ஹென்னும் பகுதியி லிருந்துவந்த தங்கள் விடுதியிலிருந்து மதீனாவிற்கு வரும்போழ்தும் திரும்பிப்போம்போழ்தும் தாங்கள் கால்நடையாகவே நடந்துசெல்வார்கள்.

ஹஜ்ரத் அபூபக்ர்[ரலி] அவர்களுக்கு, கத்லா அல்லது குதைலா வென்னும் மனைவியாரிடம், ஹஜ்ரத் அப்துல்லா, ஹஜ்ரத் அஸ்மா தோன்றலாயினார்கள். இங்ஙனமே, உம்முரூமான் என்பவரிடமிருந்து, (உம்முல் மூமினீன்) ஹஜ்ரத் ஆயிஷாவும்[ரலி] ஹஜ்ரத் அப்தூர் ரஹ்மானும் தோன்றினார்கள். இப்படியே

அஸ்மாவெனும் மனைவியாரினின்று, முஹம்மத் தோன்றினர். இவ்வண்ணமே, ஹபீபா பின்த் காரிஜா வென்னும் பிராட்டியினின்று, எல்லோருக்கும் இளைய குமாரியான உம்முகுல்தூம் பிறந்தார்கள். ஆகையால், இவர்களுக்கு அப்துல்லா, அப்துர் ரஹ்மான், முஹம்மத்என்னும் நாமமுடைய மூன்றுகுமாரர்களும், அஸ்மா, ஆயிஷா, உம்முகுல்தூம் என்னும் நாமமுடைய மூன்று குமாரிகளும் இருந்து வந்தார்கள்.

அபூபக்ர் சித்தீக்[ரலி] சரிதை முற்றுப் பெற்றது.

நாயகம் வாழ்க !

நான்கு கலீபாக்களும் வாழ்க !!



டைய ஜீவிய சரித்திரம் தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. திக் கிளேஸ் காகிதம். விலை ரூ. 2 — 0 — 0

## உமறெ பாரூக் (ரலி) இரண்டாம் பதிப்பு

குலபாயெ ராஷிதீன் என்றழைக்கப்படும் முதல் நான்கு கலீபாக்களுள் இரண்டாவதாய் விளங்கிவரும் ஹஜ்ரத் உமறெ பாரூக் அவர்களுடைய ஜீவிய சரித்திரம் தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப் பட்டிருக்கின்றது. நல்ல முத்துப்போன்ற எழுத்தில் 253 பக்கம்; நல்ல திக் காகிதம். மிக்க அழகான அச்சு. விலை ரூ. 2 - 4 - 0.

## உதுமான் (ரலி) அலீ (ரலி) சரிதை

குலபாயெ ராஷிதீன் என்றழைக்கப்படும் முதல் நான்கு கலீபாக்களுள் மூன்றுவது நான்காவதாய் விளங்கிவரும் ஹஜ்ரத் உதுமான் (ரலி), அலீ (ரலி) சரிதை தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப்பட் டிருக்கிறது. காகிதப் பஞ்சம் மிக்குள்ள இக்காலத்தில் நல்ல முத்துப்போன்ற எழுத்தில் நல்ல கிளேஸ் காகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2 — 0 — 0.

## இஸ்லாமிய ஞானபோதம்

**அஞ்ஞானத்தைப் போக்க வல்லது. சுஞ்ஞானத்தை அளிக்க வல்லது.**

**மதங்களின் மாபெரு மகாநாட்டில் முதற்பரிசு பெற்ற கிரந்தம்.**

மேனடுகளில் இஸ்லாத்தின் போதனைகள் தீவிரமாய்ப் பரவுவதற்கு இப்புத்தகத்திலுள்ள விஷய ஞானங்களே உதவியளித்திருக்கு மென்பதில் சிறிதும் ஐயமில்லை. இந் நூலின்கண்ணே இஸ்லாத்தின் பல்வேறு உண்மைத் தத்துவச் சிறப்புக்கள் தூய்மையாக விளக்கப்பட்டிருப்பதுடன், சிருஷ்டி கர்த்தா ஒருவன் இருக்கிறானென்று இதில் மெய்யாக ருஜுப்பிக்கப் பட்டுள்ளது. ஆஸ்திகரா யிருப்பவருக்கும், கடவுளே இல்லையென்று கூறிக்கொண்டு நாஸ்திகராய்த் திரிபவருக்கும் ஒவ்வொரு முஸ்லிம் ஹிந்து கிறிஸ்தவருக்கும இந்நூல் பகுத்தறிவுக்கொத்த நன்னூலாகும். விலை ரூ. 4 — 0 — 0.

## இஸ்லாம் (சித்திரப் படங்களுடன்)

ஹனபீ, ஷாபீ, இரு திறத்தாருக்கும் அத்யாவசியமானது

(தொழுகைப்படங்கள் பல நிறைந்தது)

இது முஸ்லிம்க ளெல்லோருக்குமே அத்யாவசியமான ஒரு மிகச் சிறந்த தமிழ்நூல். இதில் இஸ்லாத்தின் ஐந்து பர்ல்களும் (கடமை

களும்) மிகத் தெளிவாகவும் விளக்கமாகவும் புத்திக்கும் யுக்திக்கும் மிகமிகப் பொருத்தமாகவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கடமையின் சார்பாய தத்துவமெல்லாம் (மஸ்அலாக்களுடன்) விஸ்தரிக்கப்பட்டிருப்பதுடன், அனுஷ்டானத்திற்கு வேண்டிய விவரங்களைத் தும் சாங்கோ பாங்கமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. முழுதும் திருத்திப் புதுப்பித்து விரித்தெழுதியுள்ள 8-ஆம் பதிப்பின் விலை ரூ. 2 - 8.

## ஈமான் (4 - ஆம் பதிப்பு)

### (இஸ்லாத்தின் சித்தாந்தம் அல்லது மூலக்கோள்கை)

இவ் வழகியநூல் இஸ்லாமார்க்கத்தின் ஈமான் சம்பந்தமான மூலக்கொள்கையாகிய ஏழு அம்சங்களைப்பற்றி விரிவாகவும் விளக்கமாகவும் புத்திக்கும் யுக்திக்கும் பொருந்தும் வண்ணம் இனிய தமிழில் எழுதப்பட்டுள்ளது. இஸ்லாத்தில் ஈமான் கொள்ளவேண்டிய விஷய விளக்கமும் அதன் துஆவும் உடன் காணப்படும். விலை 8 அணா.

## சஹீஹ் புகாரீ

### (தமிழில் புகாரீ சுருக்கம்)

"சஹீஹ் ஸித்தா" என்பன நபி பெருமானுடைய ஹதீதுகளடங்கிய ஆறு சரியான கிரந்தங்கள்; அவற்றுளெல்லாம் தலைசிறந்து விளங்குவது சஹீஹ் புகாரீ என்பதே. இம்மகா நம்பிக்கைக்குரிய முதல்தர கிரந்தத்திலிருந்து சுமார் 513 ஹதீதுகளும், ஏனை ஐந்து கிரந்தங்களிலிருந்து 177 -ம் ஆக மொத்தம் 690 ஹதீதுகள் சரியான மொழி பெயர்ப்புடனும் விரிவான வியாக்யானத்துடனும் வெளிவருகின்றன. நபிகள் நாயகத்தை அடியொற்றி நடக்க விரும்பும் ஓரொரு முஸ்லிமுக்கும் இந்நூல் அத்யாவசியமானது. துரிதமாக அச்சிட்டு வருகிறோம்; சீக்கிரம் வெளிவந்துவிடும்.

## நாயகத்தின் நற்குணங்கள்

நபிகள் திலகத்தின் குணாதிசயங்களும் நன்னடக்கைகளும் இப்படி இருந்தனவென்று அறிந்து கொள்ள இஃதொரு முதன்மையான நூல். இதனை எல்லா முஸ்லிம்களும் வாசித்தறிதல் வேண்டும். அப்பெருமானாரைப் பின்பற்றி யொழுக விரும்பும் சன்மார்க்கர்களுக்கெல்லாம் அத்யாவசியமானது. மேலே சொன்ன நூலும் இந்நூலும் எம்பெருமானாரை உள்ளபடியே உணர்ந்துகொள்ள விழையும் ஒவ்வோர் ஏனை மதத்தினருக்கும் அத்தியாவசியமானவையே. இதன் விலை ரூ. 1-8.